வெண்டரு மலைவு தோற்றம் பெயரெலா மின்றி யாழ்ந்து
தண்டலி லிருடே சின்றித் தனித்ததோ ருண்மை நிற்கும். 6

சத்தியம் பிரம மாந்மா பரமுதற் சாற்ற வேண்டி
யித்திறப் பெயர்மே லோரா விடப்பெற்ற விந்த வாந்மா
சித்திர மாகத் தானே வேறுபோற் றிகழ்ந்து தீது
மெத்திமேல் வருசீ வப்பேர் மேவிய போல வாகும். 7

சீவனென் கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த வாந்மா
பாவனை மநநத் தாலே பருத்தெழு மநம தாகு
மேவரும் பிரமந் தன்னில் வேலையி லலைபோல் வந்து
தாவுறு முள்ளந் தானே நினைந்தவா சகங்கற் பிக்கும். 8

உன்னுறு மநத்தி னாலே யுலகமா மிந்த்ர சாலந்
துன்னுறும் பணிக ளென்னுஞ் சொற்பொருட் பொன்னை யன்றி
யன்னிய மில்லைப் பொன்னாற் பணியென வறைய வேண்டா
பன்னிய வுலகாஞ் சொற்குப் பரமன்றிப் பொருள்வே றில்லை. 9

செல்லுறு கான லாற்றிற் றோன்றிடுந் திரைகள் போல
வில்லையா மநத்தி லுண்டு போலெழு மிந்த ஞால
மல்லல்செய் மோகம் பந்தந் தமமல மவித்தை மாயை
புல்லுசம் சார மென்றே ஞாநிகள் புகலப் பட்ட. 10

பந்தத் துருவங் கேட்டுணரிற் பரவீட் டுருவு மேல்வெளியா
மிந்தச் சகநீ நான்முதலா மிவைமெய் யென்றல் பந்தமதா
மந்தக் கருத்து நிற்பளவு மரிதா முத்தி வித்தினிடைத் [வெலாம்.
தொந்தத் தருப்போற் காண்பவன்பாற் றோன்று துறையுங் காண்ப

பிறிவாம் பொருளின் மரத்திருந்த பேதப் படியே யுதாத்திற்
செறிவாஞ் சிருட்டி சமத்காரஞ் சிதைவற் றுண்டாய்ச் செறிவதுபோ
லறிவாஞ் சரீரி யெனும்பொருளி னகன்ற வுதாத் தங்குரமாய்
நெறியார் சகத்தின் வடிவமெலா நீங்கா வியல்பாய் நிறைந்திருக்கும்.

பருவங் களிலே விதைமுளைக்கும் படிபோற் காணப் படுமேற்றிற்
கருதுங் கருத்து முடலெடுக்குங் ககநத் துதித்தோன் கதையாலே
யிருளுஞ் சகத்தி னுற்பத்தி யெளிதாய் விளங்கு மிதுகேட்பாய்
பெருகுங் ககநம் பிறப்பிடமாய்ப் பிறந்தான் மறையோர் பெருங்
குலத்தோன். 13

ஒழிவிற் றியாக முயிர்க்கிதம்வீ றுடையோ னெடுநா ளுய்ந்திருப்ப
விழியு முலகை விழுங்குறுநா மிவனை விழுங்கா திருந்தமையென்
னழிவு செய்யு மெனதுவலி யழுந்துங் கல்லின் வாண்முனைபோற்
கழிய மழுங்கிற் றெனவெண்ணிக் கால னகனூர் கடிதணைந்தான்.

வினையின் முயல்வார் தங்கருமம் விடுவ துண்டோ வெனமறையோன்
மனையின் வாயிற் புகுமளவின் மண்டு மூழிக் கடுங்கனல்போற்
கனையுங் கடுந்தீ யெரித்திடவுங் கடிது புகுந்து கண்டவனைப்
பனைசெய் காமா யிரத்தாலும் பற்றி யிழுத்துப் பயனற்றான். 15

அவன்சங் கற்ப புருடனைப்போ லசைவற் றிருப்ப வடர்ப்பரிதா
யிவனங் ககன்று நமன்பாற்போ யிவ்வா றுரைப்ப யமனுரைப்பான்
புவநங் கருமத் தாலன்றிப் பொன்றா துதவிப் பொருளவையே
தவறும் படிசெய் கருமங்கள் சகாய மாகச் செல்கென்றான். 16

கால னிதுகேட் டவன்செய்த கருமந் தேடி நதியோடை
ஞாலந் திசைக ளெலாமுழன்று நண்ணு தாக மீண்டெய்திச்
சீல நமனுக் குரைசெய்யச் சிந்தித் தவனு முரைசெய்வான்
மூல விசும்பிற் பிறத்தலினுன் முடிவி லவனும் விசும்பன்றோ. 17

விண்ணிற் பிறந்தோன் காரணத்தை மேவா மையினுற் கருமங்கள்
பண்ணிற் றிலன்கா ரணமிலதேற் பண்ணுங் கரும முளதாமோ
வெண்ணற் குரிய சகாயமுனக் கிலதா மென்று யமன்கூற
நண்ணற் கரிதென் றுயர்கால னடந்தான் மனையி னனிவியந்து. 18

என்னு வுரைத்த முநிமுகம்பார்த் திராம னுரைப்பா னீயிசைத்த
வன்னுன் சுயம்பு விஞ்ஞாந மங்க மானே னென்றாகத்

துன்று நின்றோன் பிரமனெனத் துணிந்தே னெனலுந் தூயமுனி
முன்று முரைத்த தயன்றனையே மொழிந்த கதையின் முறைகே
ளாய். 19

செயல்செய் காலன் யமனுடனே செப்பும் வழக்குத் தாமுணர்ந்தே
முயரு மநுவி னந்தத்தி லுலக மெல்லா முண்டெழுந்த
வயர்வில் கால னயன்றனையு மடர்ப்ப முயன்ற வப்போதிற்
றுயரில் காலன் முகநோக்கித் துங்க யமனுங் கிவைசொன்னான். 20

நிகரில் பரம வாகாய நிமல வடிவாய் நிற்கின்ற
விகலி லயனை யடர்த்தற்கென் றெண்ணு மெண்ண மெளிதாமோ
திகழும் வெளியே வடிவாகிச் செறிந்த பூத வடிவிலனாய்ப்
புகல்சங் கற்ப புருடனைப்போற் பொன்று தயனும் பொலிந்திடுமால்:

ஞான விண்ணாய்க் கேவலமாய் நடுவு முடிவு முதலில்லா
தான சுயம்பு வாம்பிரம மடுத்த தனது மநவசத்தான்
மான முருவ முடையதுபோன் மன்னு புமான்போல் வயங்கிடுமா
லீன மலடி மகன்போல விதுமெய்ம் மையினால் வடிவிலதாம். 22

என்று காலன் றனக்கியம னிசைத்தா னென்றோன் முகநோக்கி
நின்ற வாதி வாகியமாய் நிகழ்ந்த வாதி பௌதிகமா
யொன்று முடல முயிர்க்கெல்லா முபய விதமாம் பிரமனுக்குத்
துன்று மாதி வாகியமாஞ் சூக்க வுடலொன் றுயதென. 23

பிரம வொளியாற் பிறந்தசகம் பிறக்கு முயிர்க்குக் காரணமாய்
விரவு மதனா லுயிர்க்கெல்லா மேவு முடல மிரண்டாகும்
பரம பிரமத் தினையொழியப் பயில்கா ரணம்வே றிலாமையினால்
வரவி லயனுக் கோருடலாய் மருவு மாதி வாகியமே. 24

சகக்கா ரணமா மயனுக்குத் தானே தோன்று மநவடிவாய்
மிகத்தாஞ் சகத்து விரிந்திடலால் விரிந்த வெல்லா மநவடிவென்
றுகப்பா லுரைத்த வசிட்டனைப்பார்த் துலக மாயை தனைவிரித்த
மகத்தா மநத்தின் வடிவுதனை வகுத்தோ தென்ன முநிசொல்வான்.

சடகு நியமா யெங்கணுஞ்சேர் தனிநெஞ் சுக்குப் பேரொழிய
வுடனுங் ககநந் தனைப்போல வுள்ளும் புறம்பு முருவிலதாம்
படர்தீர் மெய்பொய் யெனும்பொருளிற் பயிறேற் றரவே மநமாகுந்
தொடர்சங் கற்ப மெங்குளதாந் தோன்று மநமு மங்குளதே. 26

மநத்தின் வடிவு சங்கற்ப மற்றிவ் விரண்டு மொன்றுரு
மநர்த்த மோக மலம்பந்த மவித்தை மாயை தமமுதலா
மினத்த பெயர்சங் கற்பத்துக் கேற்ற பெயரா மிதுநழுவிற்
கநத்த சகக்காட் சியும்போகுங் கதிர்விட் டெறிக்கும் பரவடிவம். 27

நிற்ப நடப்ப வெனுமனைத்தி னிழலா டாது வெறிதிருக்குந்
தற்ப ணந்தா னெப்படியோ தானே விளங்கு மப்படியே
கற்ப முறுநீ நான்முதலாங் காட்சி விகற்ப மெலாமடங்கி
யற்ப மெனினுங் காட்சியறி லதுவே தனிக்கே வலநிலைமை. 28

வேறு.

காண்பரிய மநக்காட்சிப் பொருளை யெல்லாங் கனவுதரு கனவு போற் காட்டா நிற்கும், பூண்பதிலா மநஞ்சலந சத்தி யாலே பொலி யுமசை யுந்தியங்கும் போகு மீளும், வீண்பயிலுஞ் செருக்குமிகு மகங்க ரிக்கும் வேற்றுருவாம் பெருங்கற்ப மேவும் போதிற், சேண் படவெல் லாப்பொருளுந் தீர மாய்ந்து செறியுமுப சாந்தமே சேட மாகும். 29

வேறு.

அத்தமி யாத சோதி யருக்கனு யளவி லாதாய்
மெத்திய பிணியி லாதாய் மேவரும் பிறப்பி லாதா
யெத்தலங் களினு மென்று மியாவுமா யாவுஞ் செய்து
முத்தியு மாகி யோங்கு முதற்பரம் பொருளொன் றுண்டு. 30

வேறு.

பகர்வரிதாய் முத்தராற் பயில்வ தாகிப் பரமுதலாம் புதிதான் பலபேர் பெற்று, மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ் சத்த

வேதாந்தம் விளங்கினோர் பிரம மென்றுந், துகளறுவிஞ் ஞாநிகள் விஞ் ஞாந மென்றுஞ் சூநியர்சூ நியமென்றுஞ் சொல்லப் பட்டுந், திகழிரவி தேசுக்குந் தேசாய் நின்று தேசளித்துத் திகழ்வித்துத் திகழா நிற்கும். 31

உரைபகர்வோ னுசாவிடுவோன் கேட்போன் காண்போ னுண் பவன்சிந் திப்பவனு யுலகின் மெய்யிற், றிரமுறமே வியுமேவாப் பொருளி னின்றுந் திநகரன்றே செனச்சித்தின் றிகழ்ச்சி யுண் டாம், விரைமநம்வேர் கரணமல ரண்டங் காயாய் விண்ணெழுமா யைக்கொடியை விதிர்க்குங் காற்றும், புரைசெயுடற் செப்பனைத் துண் மணியாய் நிற்கும் புணர்புரியட் டகவுடலைப் போய்மீள் விக்கும். 32

சுத்தவறி வாதலா லாகாய பாவனையாந் சூழ்விண் ணகு, மத்திறனே யெப்பொருளும் பாவித்த போதுள்ள ததுவா மந்தச், சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும் பல்கா, லித்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்கு மன்றே. 33

நிருவிகற்ப வாந்மாவிற் சகத்தோற்ற மொடுக்கமிவை நேரா யில்லை, மருவிகற்ப பேதமுறுப் பராபரமா மப்பொருளை வயங்கக் கண்டாற், பெருமநக்கட் டறுமைய மறுங்கரும மறுமென்றுன் பெரியோன் வள்ள, லொருகடுகிற் பொன்மேரு புகிலன்றோ பிர மாண்ட மொடுங்கு மென்றான். 34

அருந்தவன்சொல் வானூலா னல்லோராற் றிங்களா லன்றி நாளாற், றெரிந்துவிடும் பன்னூலின் சித்தாந்த மிதுவிதனைச் சிந்தை செய்யிற், புரிந்தபுவி யிராநிற்கப் போயொளிக்கு நிட்டை யுடன் போத ஞாநம், விரிந்துணர்வோர்க் குயர்சீவந் முத்திபெற வாமீதுவே விதேக முத்தி. 35

என்பதுசொல் வியமுநியை யுடலிறந்த வீடுமுட லிருந்த வீடு, நன்பழநூல் வழியியற்ற நவில்கென்ற விராமனுக்கு நல்லோன்

சொல்வான், வன்பலசெய் கையிற்பயின்று முன்றேன்றும் விண் டோன்று வகைமை யுற்றோ, ரின்பமுற வருஞ்சீவந் முத்திபதம் பெற்றுயர்ந்த வியல்பி னேரே. 36

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போன் மிக நொய் தானோ, ரகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந் தாலு மழுத்த மற்றோர், சகநெறிகள் செய்திடினு மந்நியர்போற் கண்டுகுளிர் தன்மை சான்றோர், திகழ்மநமு நினைவுமிருந் துஞ் சிறிது மில்லாதோர் சீவந் முத்தர். 37

துக்கசுகங் களிலமிழ்ந்தி மிதவாத புந்திநிலை சுபாவ மானோர்
புக்கசுழுத் தியினனவாய் நனவின்றி வாதனைதீர் போத முற்றோர்
மிக்கசம மாயுலகால் வெருளாம லுலகினையும் வெருட்டா மேலோர்
சிக்கறநன் னினைவிருந்து நினைவிலா தவரிவரே சீவந் முத்தர். 38

நிலையான விச்சீவந் முத்தியைவிட் டுடலிறந்தா னிறைந்த வாயு
வலையாம னிற்பதுபோ லுடலில்லா முத்திபெறு மதனின் றன்மை
தொலையாது மறையாது தோன்றாது நணித்தல்ல தூரத் தல்ல
வுலையாது முடியாது நானல்லப் பிறனல்ல வொன்று மல்ல. 39

இருளன்றி யொளியன்றி யளவன்றி யலைவன்றி யியல்பொன் றின்றிப், பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றிநிறை புரண மாகி, யுருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை யன்றி யொன் றாய், வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாது மதித்துக் கொள்வாய். 40

அவ்வகையாம் பரவடிவை யறிவுநிறை வுறவிரிவா யருள்வா யென்ற, செவ்வியவள் ளலுக்குமுநி செப்புவான் பெருங்கற்பஞ் சேர்ந்த போதி, லெவ்வகைமூ லங்களுக்கு மூலமாம் பிரமமே யிலங்கா நிற்கும், வவ்வுமநத் தொழின்மாற்றித் தனைமாய்த்தாற் பெயரிறந்த் வஸ்து வாகும். 41

தெரித்தறியும் பொருளுக்காச் சிவமறி வதுவாகச் செப்ப லாகும், விரித்தபுல னநுபவித்து மநுபவியா மநமதுவாய் விளம்ப லாகும், புரித்தவுணர் வொளிநெஞ்ச முலகிவற்றி னறிவதுவாய்ப் புகல லாகும், பருத்ததொழிற் செய்யினுங்கற் போலிருக்கு நிலையது வாய்ப் பகர லாகும். 42

முடிவுகந வஞ்ஞாந மில்லாநீ டியிலதுவா மும்மை யாகி
யடர்தருஞா துருஞாந ஞேயமெழுந் தொடுங்குமிட மதுவே யாகுந்
திடவிசும்பன் றுயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சித்தம் புந்தி
படர்மநம்போய்த் தாவரம்போற் பெறுமுளறி வொப்பாமப் பரம
ரூபம். 43

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன் றானும்
வியனிலுப சாந்தராம் வேலையினி லுபாதியெலாம் விட்டு நீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று சிந்மயமாம் பரம ரூப
முயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி யொன்றாய் நிற்கும்.

### 3—1. (ஞாந) விண் மகன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—233.

---

## 3—2. லீலை (மண்டபக்) கதை.

இந்தப்பொரு ளையம றுத்திளைப் பாறுமாறோர்
முந்தக்கதை கேள்குண முற்றிவி வேகமுற்றோன்
விந்தைப்புயத் தோன்பது மப்பெயர் வேந்தன்மண்மேற்
சிந்தைக்கினி தாங்குண லீலையச் செம்மதேவி. 1

அன்னனிழல் போன்மநம் போலய லற்றவன்ன
ணன்னயகன் மூப்பிறப் பின்றிநற் காளையாகி
யென்நாளுமொத் தின்புற வென்கொலு பாயமென்னத்
தொன்னூன்மறை யோர்க்குரைத் தாளவர் சொல்லலுற்றார். 2

செபமுந்தவ மும்முத லியாவையுஞ் சித்திநல்கும்
புவநங்களிற் பொன்றுதல் போக்கரி தியார்க்குமென்ன
விவள்சிந்தைசெய் வாளிறை வற்குமுன் யாமிறந்தாற்
கவலொன்றறத் தற்பத வாழ்வுகை கூடலாகும். 3

இறைவன்முதற் சாகிலச் சீவனை யிந்தவீட்டி
லுறையும்படி செய்தது வென்னையு வந்துகாண்க
நிறையின்பமெய் தியிருப் பேனிது நேருமாறு
மறைதந்தவா ணிபத மேத்துவன் வாழ்த்தியென்றே. 4

மன்னற்குரை யாதுநன் மந்திரங் கற்பம்வல்லோர்
சொன்னத்தினின் றுசுரர் பூசுரர் பூசைபண்ணி
யந்நத்தைநா னான்கினுக் கோர்பக லற்பமாயுண்
டின்னிட்டையா லேமதி பத்துந டந்தவெல்லை. 5

வானார்மதி போனிற வாணிம கிழ்ந்துதோன்றி
நீநாடிய தென்னென நீள்பவ மாநெருப்புக்
காணுவமு தக்கதி ரேயகத் துன்பமென்னும்
பாநாளகற் றுங்கதி ரேயெனப் பாதமேத்தி. 6

என்னாயகன் றுஞ்சிலச் சீவனிவ் வில்லினிற்க
முன்னாகவுன் னைநினை போதிலென் முன்புதோன்ற
வன்னாயவ ரங்களி ரண்டும ளித்தியென்ன
நன்னாமக ளன்பொடு நல்கிந யந்துபோனாள். 7

பக்கத்தொடு திங்களூ றும்பரு வங்கடேர்க்காற்
றொருக்கிச்செறி நாளதிற் கூம்புதொ டர்ந்தவாண்டு
புக்குற்றதோ ரச்சிமைப் போததி னாபியாதி
மிக்குத்திரி காலவன் றேர்விரைந் தோடலோடும். 8

இன்பங்கரை யற்றிட லீலையி ருந்தவெல்லை
யன்பன்சில நாளிலி றந்தன னன்னமன்னா

டென்பஞ்சுடும் வெம்மைபொ ருதுயிர் துஞ்சுமுன்னே
முன்பின்றிவிண் ணின்றசொன் மாதிவண் மோகமாற்றி. 9

மாய்வுற்றவேந் தைமல ரான்மறை வித்துவைப்பா
யேய்வுற்றபூ வுலரா மெய்யழி யாதுசீவன்
பாய்வுற்றக லாதுபொன் மண்டபம் பற்றிநிற்குந்
தோய்வுற்றிவன் றேள்விரை விற்றுயர் தீர்தியென்றாள். 10

வாடாவச ரீரிதன் சொற்படி மன்னைவைத்தா
ளோடாதவா வியுடை யாளுளத் துன்னவாணி
நீடாதுவந் தாளென தன்பனை நீங்கிவாழ்தல்
கூடாதவன் சேர்வுழி கூட்டுதி வல்லையென்றாள். 11

மநவாநமும் வாநமு மாசறு ஞாநவானு
மௌனவாநமூன் றின்முதல் வாநமி ரண்டுமின்றிக்
கநஞாநவா னெய்துதல் கண்டதை விட்டுப்போத
நனவாயய லொன்றையுற் றனடு ஞாநவானும். 12

சங்கற்பசா லந்தவிர்ந் தாலுப சாந்தமாகித்
துங்கப்புவி யாவையு மாகிய சோதிதோன்று
மிங்கற்பமுங் காண்பன வில்லைவெ றும்பொய்யென்று
லங்கப்பொழு தவ்வறி வாலது சேர்தலாகும். 13

நம்மாலது சேர்கென நாமக ணல்கியேக
விம்மாதுவி கற்பமி றந்தச மாதியெய்தித்
தம்மாலுறை கூடகல் புள்ளெனத் தாவுநெஞ்ச
மைம்மாலுறு கூட்டினை மாற்றின ளக்கணத்தில். 14

மங்காதஞா நவிசும் பூடொரு மாநகர்க்கே
வெங்காதல னெட்டிரண் டாண்டுள வீரனுகிச்
சிங்காதந மேற்செறி வேந்தருஞ் சேனைநாலும்
பொங்காதர மாதரும் போற்றவி ருத்தலோடும். 15

வேறு.

தன்னுயிர்க்கேள் வினையந்த லீலை நோக்கிச் சபைபுகுந்தாண் மிகவியந்தாள் சபையைச் சூழ்ந்த, மன்னவரு முனிவரு மறைவல் லோரு மங்கையரு நாற்படையு மற்று ளோரு, நன்னிலமுங் குன்று களு மூரு நாடு நதித்திரளும் பலபொருளு நண்ணி நோக்கி, மின்ன னையாண் மீண்டுதன திடத்தின் மேவி வெண்ணிறவா ணியை நினைத்தாள் விருப்பினோடும். 16

வந்துயரா தநத்திருந்த வாணி தன்னை வணங்கியென தன்ப னுக்கு மரித்த பின்பு, பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்கப் பழைய படி பிறப்புற்ற படியீ தென்ன, விந்தவுல குறுமயக்கம் போகச் சொல்வா யெனலீலை கேட்டலுமே யிறைவி சொல்வா, ளுந்துசிருட் டியின்முன்பு மயக்க மட்டே யுருவாமிச் சிருட்டிவே றுதித்த தாகும்.

அப்படியே யுன்கணவற் கிரண்டாஞ் சென்ம மாயினதா லீது ரைப்ப வறிந்து கேட்பாய், மைப்படிவி லாவிமல ஞாந விண்ணின் மற்றொருபான் மாயாமண் டபமொன் றுண்டாஞ், செப்பரிய விசும் பென்னு மயூரப் பீலித் திரையாலே மறைத்திருக்குஞ் செம்பொற் குன்றுங், கப்புறுபொற் றூணிலுறை யுலக பாலர் காரிகையா ரெனும்பொறிகள் கலந்து நிற்கும். 18

ஒருகோணந் தனிற்பூதப் புற்று மாங்கே யுறைகின்ற மலைக ளெனு மோடு முண்டாம், வருகாதற் புத்திரர்சூழ் விருத்த வால மறையவனுங் கொருவனுறை மனைய தாகுங், குருவான வாயுவின் மார்க் கத்து லாவு கோலவிமா நப்புழுவின் குழுவை மேவு, மரு கான விண்ணிலுறை சித்தர் கூட்ட மானகொது கிளைகின்ற வரவ நண்ணும். 19

வாநவர்தா நவரொன்னுந் தீய மக்கண் மதர்த்தவிளை யாட் டோசை மாறு தாகு, மானதொரு மாமாயா மண்ட பத்தி லாங் கொருபா லொருகோணத் தகத்தி னுள்ளே, மாநமிகு மலை

யென்னு மோட்டி லொன்றின் மலைகளினு லாறுகளால் வாங்க டம்மான், மேனலமார் நகரொன்றுண் டதனில் வாழ்வோன் வெங் கனலோன் வேதியரின் மிகவு மிக்கோன். 20

வடிவுபொருள் வயதொடுக்கஞ் சேட்டை விஞ்சை வசிட்ட னுக்கொப் போனந்த வசிட்ட னென்றே, படியுமுணர் வினனல்லன் பெயரா லிந்தப் பாவனையும் வசிட்டனெனப் பகர லாகு, மடிபரவு மருந்ததியை யொப்பா ளந்த வருந்ததியி னுணர்வினளன் றமைந்த பேரா, னெடியவருந் ததியாகு மிவற்குத் தேவி நிலத்திலிவள் விண்ணிலவ ணிகர்வே றில்லை. 21

இந்தவருந் ததிகணவ னென்று சொன்ன விவ்வசிட்ட னம் மலையி னிலங்கு சாரன், முந்தியொரு நாளிருப்ப வேட்டைக் காங் கோர் முடிநிருபன் சேனையொடு முன்வந் தெய்த, வந்தநிரு பனை நோக்கி வசிட்டன் றேர்வா னகோவகோ மன்னவர்வாழ் வறவு நன்றாஞ், சுந்தரமாம் புவிக்கரசாய்ச் சேனை சூழத் துணைக்கவரி பரிமாறச் சுகிப்ப மெந்நாள். 22

கொடிகுடையி னிழனெருங்க வாழ்ந்து மாதர் குங்குமக்கொங் கையின்மூழ்கிக் குளிப்போ மெந்நாண், முடிவறுமிப் பயனென்று பெறுவ மென்றே மொய்காத லன்றுமுதன் முளைத்த நெஞ்சன், மடியறுதன் கருமத்தி னின்றான் மூப்பு வநசஞ்சேர் பனியின்வா மனைவி நிற்போ, லடிபரவி யெனைவேட்டும் வாமு மீந்தே னந்த ணனு மிறப்புற்றா னாசை யோடும். 23

அவன்மனையா காசத்திற் சிவா காச மாய்நின்றா னாகாச வடிவா னேனே, கவறுருமுன் னுளமுந்து சங்கற் பத்தாற் காவ லன்றா னேயாகிக் கலந்து நின்றான், றவமறையோன் சவமாக மனைவி சோர்ந்து தன்னிதயத் திரண்டாகிச் சரீரந் தன்னை, யுவமையுறு கணவனுடன் சவமாய்ப் போக்கி யுயர்சூக்க வுடலொடவ னுடன்போ யுற்றாள். 24

ஆயமறை யோன்மக்கண் மனையும்பூமி யடவிகடா வரங்க ளெலா மங்கே யுண்டாய், மேயவுயிர் போயவற்கு நாளெட் டாகும் விண்வடிவாஞ் சீவனுமவ் வீட்டி னிற்கும், போயபவத் துனக்கன்ப னுன வந்தப் பூசுரன்பூ பதியாகிப் புணர்ந்தா னன்று, தூயவருந் ததிப்பெயர்கொள் பாவி யாகித் துணைவியா மந்தமடத் தோகை நீயே. 25

புதியனசக் கரவாகந் துணைய தென்னப் பூதலஞ்சே ருமை யொடுபு ராரி யென்ன, வதிகாலத் துணைவரா மிருவ ராயிங் கரசு செயு நீரவரே யாத லாலே, மதிநுதலாய் முதற்பிறப்பின் மயக்கஞ் சொன்னே மற்றிதுதான் மயக்கமாத் திரம தாகு, முதிதமுறு மாகாய வுடலாஞ் சென்ம மொளிபெறத்தோன் றியதென்று ணுலகி லன்னை. 26

இந்தவுரை கேட்டலுமே லீலை சொல்வா ளிறைவிபொய்யே யியம்பினையீ தெங்ஙன் கூடு, மந்தணன்வீட் டுறைசீவ னதுவெங் கேயோ வந்நியமா யிருந்தயா மடைந்த தெங்கே, முந்துறுமவ் வேற் றுலகத் திருப்பா ரந்த மொய்கிரிக டசதிசைகண் முற்றுஞ் சேர, வந்தினிதிங் கியாங்களுறை மனையி னூடே மருவுமடை வெப் படியோ மாசி லாளே. 27

மத்தவயி ராவதமோர் கடுகி னோர்பான் மறிபடுமோ வடமேரு வந்தோர் கஞ்ச, வித்தினிடைப் புகுந்திருந்தோர் வண்டின் குஞ் சான் மிகநெரியு மோகொதுகு வெகுண்டு மோதி, யுத்தமியற் றிடச்சிங்க மநேக மத்தோ டோரணுவி னிடைப்புகுமோ வுரைத்த நின்சொ, லித்திறமே யொன்றுக்கு மிசையா தாகு மெனலீலை சொல்லுதலு மிறைவி சொல்வாள். 28

பொய்யாக வுரைத்திலம்யா மிதனி னுண்மை புகலக்கே ளெனைப்போல்வார் புத்தே ணீதி, மெய்யாகக் கொள்வதலாற் பேதி யார்கள் வேதியன்றன் சீவனவ னூரில் வீட்டி, லெய்யாமை யுறை

கின்ற திந்த நாடு மிவ்வரசும் விண்வடிவே யிவற்றை யெல்லா,
மையாரும் விழிமடவா யந்த விண்ணே வடிவான வவன்றனே
மகிழ்ந்து பார்க்கும். 29

தொன்மையா மந்தரின வுங்க ளுக்குத் தோன்றாது வேறாகித்
தோன்றுங் கண்டாய், பன்மையா நனரினைவு கநவிற் றேன்றாப்
பரிசெனவம் மரணத்தின் பான்மை தோன்றாத், தன்மயமாஞ் சத்த
தினல் விளங்கு மந்தத் தடஞாந விசும்பிடையோர் தனிமூ லலக்கே,
வன்மையா மிப்பூமி தோன்றி நிற்கு மாநினைவிற் கண்ணடியில்
வயங்கு மாபோல். 30

தெளிபரம வணுவாஞ்சிற் சொரூபத் தொன்றுஞ் செகமெலா
மொளியுருவாய்ச் செறிந்தி ருக்கு, மொளிபெறவுள் ளேயுள்ளே
யாத லான்முன் னுரைசெய்த பூமியுஞ்சித் துள்ளே தோன்றும்,
வெளிபெறவீ தறியென்றே வாணி கூற வேதியனெட் டாம்பகலில்
வீந்தா னென்று, யெளிதிலெமக் கநேகவரு டங்கள் போன தென்
னெனவீ லலக்குமீண் டிறைவி சொல்வாள். 31

தேய நீடியில் லாமைபோற் காலமுஞ் சிறிதுநீ ளியதல்ல
மாய பேதமிற் சிற்சுடர் தோன்றிடு மாத்திர மொழிந்தில்லை
மேய பொய்மா ணத்தினு லொருகண மெய்ம்மறந் திடச்சீவன்
போய தன்னபா வனைமறந் திப்பவம் பொருந்துபா வனையெய்தும்.

தாங்கு கின்றதீங் கிதுவித னுன்மிகத் தாங்கிடப் படுவோநாம்
வீங்கு கின்றநம் மெய்யிது பிதாவிவன் வீந்ததித் தனையாண்டிங்
கோங்கு கின்றநஞ் சுற்றமீ தின்பமா யுறைவிட மிதுவென்றே [ம்.
தேங்கு கின்றபொய் மரணமூர்ச் சைத்திறந் தெளிந்தபின் சிந்திக்கு

ஆத லான்முதற் பவமறைந் திப்பவ மறியலா யினதென்னப்
போத மாம்விழி நீதா வகோவகோ புரணமாய்த் தெளிவுற்றேன்
காத நீர்வுற வனையவ ருறைவிடங் காட்டெனன் விவளோத
வேத நாயகி யுரைசெய்வா ளதற்கிந்த வினையுடல் விலங்காகும். 34

இந்த யாக்கையை மறந்துவே றறிவதற் றிலங்குசிற் சுடர்மெய்யா
மந்த நல்லறி வேவடி வாய்மல மறுத்தியே லதுகூடுந்
தந்த மக்கொரு வடிவிலா வுலகங்க டமனியம் பணியாகி
வந்த வாறெென வுங்கண்மோ கத்தினுன் மதித்திடப் படுமன்றே. 35

தத்து வம்பயில் வாதனை யன்றியே சகங்கடன் மயமாகா
மெத்து செய்தொழில் விட்டிலை யாதலான் மேவுதற் கரிதுன்னூற்
சுத்த தற்பத மெம்மனோர் நிற்பது தொடர்மந வடிவாக
வைத்த சூக்கமெய் தீர்க்கபா வனையினுல் வளர்ந்துபே ருடலாகும்.

கட்டி யாம்பனி வெம்மையாற் கரைந்துபோங் கணக்கென மெய்ஞ்ஞானஞ், சுட்டி நோக்கலும் வாதனை விடுதலுந் தூலமா முடல்விட்டுத், திட்ட மாகிய சூக்கமெய் நிலைபெறுஞ் சீவன்முத் தியுமாகு, முட்ட ஞானமே நிறையுமுன் னிவ்வுட னிறுத்திமுற் பவங்காண்பாய். 37

என்ற வாணியை யத்திற னியற்றுமா றென்னென விவள்கேட்கத்
துன்று சிந்தையும் வசநமு முசாவும ஃ தொல்பொருட் பொருட்டாகி
நின்ற வின்பமு முதாரமும் விராகமு நிறைந்துநீள் சகமென்று
மொன்று மில்லெனக் கலைவழி யூகமா யுணர்வர்சா தகரானோர். 38

அகமி தங்களிச் சிருட்டியின் முன்வரு மபாவமா தலினென்று
மிகவு மில்லெனத் தெளிதரு போதமும் வேறுகாண் பனவற்று
நிகழு ஞானத்தாற் காமமே முதற்பகை நீங்கிட வந்தெய்துஞ்
சுகமு மென்றிவை சாதக மாகவே தொடர்வர்சா தகரானோர். 39

ஞேய மின்றிய ஞாநமே ஞாநமு நினைத்துமேற் பெறும்பேறு
மாய வந்நிலைப் பரிசய முத்தியென் றதிற்பரி சயம்பண்ணற்
றூய தோற்றர வென்றந்த விரவிலே சொன்னவ ரிருவோருங்
காய வாதனை யறிவறச் சமாதியைக் கலந்தசை வறநின்றார். 40

அங்கு லங்கள்பத் தளவென வறிவினு லாகிய வடிவுற்ற
மங்கை தன்னொடு முன்னுள ஞாநத்தால் உயங்கிய கலைமாதுந்
துங்க விண்ணிடை யெழுந்தன ளவறு தூரநீங் கிடவேகிப்
பொங்கு மூழியி னெடுங்கட லனையவான் புகுந்திவை யிவைகண்டார்.

மட்டி லாததாய்த் தெளிந்துகோ மளமதாய் மந்தமா ருதத்தின்ப
முட்டி லாததாம் விசும்பிடை மநத்தினு முடுகுசித் தர்கடுன்றி
யட்ட மெங்கணு மரக்கரும் பிசாசரு மளவின்றி நாய்காக
மொட்ட கங்கரம் போன்முக யோகினி யொழுங்குவிண் ணுழல்வுற்று.

களிகொ ணுடகத் திடாகினித் திரள்களுங் காற்றினுற் றிரிகின்ற
வெளிறு கங்கையுஞ் சுவரிலா மனையிடை மேவிவீ ணையின்பாட
றெளியு நாரதர் தும்புரு காநமுஞ் சித்திரத் தினிற்கோட்டுந்
துளிகொள் கற்பத்தின் முகில்களு மாதர்தந் தொகுதியு முளதாகி.

எல்லை யின்றிய யோசனை தூரங்க ளியார்க்குமெய் தரிதாகிக்
கல்லை யொத்தற விறுகுறத் திரண்டநீள் காரிரு ளுடைத்தாகி [ய்ச்
யொல்லை யோடுதே ரிரவியுங் கனலுமே யொப்பதா மொளியுண்டா
சொல்லு மித்திர ளியாவையும் பற்பல விடந்தொறுந் தொடர்வுற்று.

கொதுகி னீடிர ளத்தியின் காயிடைக் குமுறுவ தெனவெங்குஞ்
சதுமு கன்றரு முயிரெலா மணைவுறுந் தன்மைமூன் றுலகுண்டா
மதுல வாநகங் கடந்தனர் மீட்டுமோ ரவரியின் வரவெண்ணிப்
பதும வண்டத்தை நீக்கிவே றண்டத்திற் பருப்பத நகர்புக்கார். 45

வினையர் சுற்றமுந் தனையருந் துக்கமாய் வெம்பு
மனைய வேதியன் மனைபுகுந் தார்கண்ணி லணுகா
ரினைய போதின்மெய்ச் சங்கற்ப மெய்திய லீலை
மனையு ளோரெமைக் காண்கெனச் சங்கற்பம் வகுத்தாள். 46

பூமகளு மலைமகளும் போல்வாரை வந்தெய்வம் போலு
மென்றே, தாமவர்கண் டருச்சித்தார் தலைமகன்பார்த் தெமதன்னை

தாதை மாய, யாமணுகுந் துயரொழிப்பீ ருயர்ந்தோரை யெதிர்ந்
தோருக் கெய்தா துண்டோ, மாமதியி னீரென்னத் தலைதடவித்
துயரொழித்தாள் வயங்கு லீலை. 47

இருவருமவ் வயின்மறைந்தா ருலகத்தின் சற்பாவ மிவ்வா
ருகுங், கருதியது முடித்தனமேற் கருத்தென்கொ லென்றுகலைக்
கந்நி கேட்ப, மருவுசமா தியிற்கண்ட மன்னவையோ ரெனைக்
காணு வகையு மிந்தத், திருமனையோர் கண்டமையு மென்கொ
லெனச் செப்பென்று டெய்வ மன்னள். 48

சாதகத்தா லன்றியிரண் டொன்றுகா தகம்பாவந் தனைநீங் காமற்
போதமடைந் தனையதனுற் சத்தியமாஞ் சங்கற்பம் பொருந்திற் றில்
யாதலினு லவர்காணு ரகம்பாவ மற்றவறி வறித லாலே [லை
பேதமற நீவிதிக்க விவர்கண்டா ரெனவாணி பேச லோடும். 49

பெருவெளியா யுன்னருளான் முழுதுணர்ந்தேன் முக்குணத்
தின் பிறப்பு மற்றே, னிருவடிவாய்ப் பிரமத்தி லகன்றெண்ணுற்
றுடல்பலவா யெடுத்தேன் முன்ன, மொருதனிமா யாவிகற்பத்
தோருலகாந் தாமரைமே லுறைவண் டாக, மருவியவிஞ் சையர்மக
ளாய் வாதனைதீ தான்மனித வடிவு மானேன். 50

வேறொருமா யாவிகற்பத் தரமகளாய்த் தழையுடுக்கும் வேடப்
பெண்ணுய்ச், குறைவலைப் புள்ளரசாய்க் கொதுகுமுதற் பலப்பிறப்
பிற் சுழன்று சோர்ந்து, சீறுகடற் றிரையிலசை திரணம்போன்
மாயையிலே தியங்கி னேனை, யேறுவித்தாய் கரையென்ன விவள்
சொன்னு ளிருவரும்விண் ணெழுந்து போனுர். 51

யோகநெறி யால்விண்போய்ப் பதுமனிடஞ் சேர்ந்துசவ வுடல்
கண் டப்பா, லேகியிவன் மறுபிறப்பாம் வேந்தனையெய் தலுமவன்
மே லெதிர்ந்து வந்து, வேகவினை யாகியொரு வேல்வேந்த னமர்
துடங்கி மிகவு மோத, மாகமயி லனையார்க ளேக்கினு ரிருபடையு
மலைந்த வன்றே. 52

மட்டிலா விருபடையு மறலிநடுக் குறவெம்போர் மலைக்குங் காலை, யெட்டிலோர் கூருக வெதிர்ந்தவனு லிவன்சேனை யிறத்த லோடும், பட்டுளோர் பிணக்குன்ருன் மறைந்தனனே சமர்கண்டு பயப்பட் டானே, தட்டிலா வெய்யவன்போ யிருணிறைந்த திருப டையுந் தணந்து போன. 53

பகைவேந்தன் படைவாங்கப் படாதசிறு படையோடும் பரிந்து மீண்டு, தகைவேந்த னரமியத்திற் றயிலுதலு மிவர்களுமத் தலத்தி லெய்த, நகையார்ந்த நிலவனைய விவரொளியா லிளைப்பாறி நயநக் கஞ்ச, முகைதோன்ற விழித்தெழுந்து புகழ்ந்திறைஞ்சி யருச்சித் தான் முன்னின் ருேரை. 54

இவனதுநற் குலப்பழமை லீலைக்கு விளம்புவிப்ப வெண்ணி வாணி, யவனருகிற் றயிலமைச்சன் விழிக்கவென வெண்ணுதலு மவனப் போதே, கவர்துயில்விட் டெழுந்திறைஞ்சக் கண்டகலை மகளவனைக் கருணை கூர்ந்து, புவநபதி குலத்தொன்மை புக லென்ரு ளமைச்சனிவை புகல லுற்ருன். 55

மன்னவரெண் மநுகுலத்தின் மன்னவனுங் கும்பாதன் மன் னர் மன்ன, னன்னவன்பத் திரதனை யளித்தான்மற் றவனகில ரதனைத் தந்தா, னின்னவன்பே ரிரதனைத்தா னீன்ருனிங் கிவன் சிந்து ரதனைப் பெற்ருன், சொன்னவன்சேய் சைலரத னவனுக்குக் காமரதன் ருேன்ற லானுன். 56

இனையவன்சேய் மகாரதன்மற் றிவன்சிறுவன் விண்டூரத னிவன்கு மாரன், வினையமிகு மநோரதனிங் கிவனளித்த விரோத னிவ் வேந்தர் வேந்த, னனையிவற்குச் சுமித்திரையா மையிரண்டு வயதிலிவற் கரசு நல்கி, நினைவொடுங்கும் பிதாவநமே னீங்கினு னிவன்செங்கோ னெறியி னின்ருன். 57

என்பளவில் வேந்தனைநின் முதற்பிறவி ஞாநத்தா லெளிது காண்கென், றன்பினெடு கையினு லவன்முடியை நாமகடொட்

டருள லோடுங், தன்டீகையா மாவிருள்போய் லீலையுடன் வாழ் பதுமன் ருனைக் கண்டா, னின்பமுற வியப்புற்ருன் மாமாயை யிருந்தபடி யென்னே யென்ருன். 58

தாயரிவ ராற்றெளிந்தே னெனநாடி யவர்சரணந் தலைமேற் சூடிப், போயபவத் துடனீங்கி நாளொன்ரு மிவ்வுடலிற் புக்க பின்னைச், சேயவெழு பதுவருடஞ் சென்றதாற் செய்ததெலாந் தெளியா நின்றேன், மாயமிது வென்கொலென மன்னவன்கேட் டலுங்கருணை வாணி சொல்வாள். 59

இறப்பென்னு மாமூர்ச்சை யெய்தியபின் னப்பொழுதவ் விடத்திற் ருனே, பிறப்பென்னு மாமோகம் பெரிதுண்டாம் விண் போலப் பிறங்கித் தூய்தாஞ், சிறப்புள்ள வுன்மாதிற் செய்தொழிலா மயக்கமே தெரியா நின்ற, துறத்துன்னு மெழுபதாண் டுனக்ககன்ற தென்பதனை யுணர்ந்து நோக்காய். 60

கடிகையிரண் டினிநெடிய காலமுறுங் கனவொக்குங் கழிந்த வாண்டட், படியுறுமா யாவிகற்ப நனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்று, நெடியபிறப் பிறப்பென்று நினக்கில்லை மெய்ஞ்ஞான நினக்கு ரூப, முடிவில்பதத் திருக்கின்ருய் சகமெல்லாங் கண்டி ருந்து முழுதுங் காணாய். 61

எல்லாமா மியல்பினை லுன்னுலுன் னிடத்திலிருந் திலங்கா நின்ருய், சொல்லாமைந் தரைப்பிடித்த தொட்டிலிற்பேய் சுடலை யிற்போந் தொன்மை போலப், பொல்லாத மூகர்க்குப் புவியுறுதி யாய்த்தோன்றும் பொன்கா ணுதோ, ரல்லாது பணியென்பர் தற்ப ரத்தைக் காணுதோ ரகில மென்பர். 62

தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத் திற் ருேன்று, மினையபொருள் களுங்கனவிற் காண்கின்ற பொருள் களா மென்று தேர்வா, யனையபொருள் களுங்காணு வறிவுமாத்

திரம்வடிவா யனைத்து மேவி, வினையில்செறி வாய்க்கணமாய்ச் சுத்தமா கிப்பிரம விண்ணே யுண்டாம். 63

முழுதுமாய் முழுதடைத்தாய்ச் சத்திமுழு துமுள்ள மூர்த்தி தானே, பழுதிலா தெவ்விடத்தெப் படிதோன்று மவ்விடத்தப் படியே தோன்றும், வழுவிலா மெய்ஞ்ஞாந நிலைலீலை பொருட்டா னும் வழங்கப் பெற்ருய், நழுவிலா வுண்மையொடுந் தெளிந்தனை யாம் போதமென நவில லோடும். 64

இதுபுகலக் கேட்டரச னெனையடைந்தோர் களும்வேண்டித் தெய்தா நிற்பர், புதுமணிநே ருமைப்பணிந்து புகழ்ந்தேன்வேண் டியதெய்தல் புதுமைத் தாமோ, பதுமவுட ஞனடைவ தென் றென்ன விப்போரிற் படுவை பட்டா, லதுபுகுவை யெனக்கலைமா தளித்தலுமேற் றலத்தொருவ னறைவ தானுன். 65

அப்புமழை சொரிந்துவரு மடர்சேனைக் கடலெங்கு மடர்ந்து நிற்க, வெப்புடைய கனற்கொழுந்தா லிந்நகரஞ் சாம்பராய் வேகா நின்ற, திப்புதுமை கண்டிலைகொ லிகல்வேந்தே யென்பளவி லிறைஞ்சார் சேனை, முப்புவநங் களுநடுங்க மோகரிக்கு மோசை செவி முடுகக் கேட்டான். 66

ஒட்டலர்சே னையின்முழக்கு மூலைந்தலறு நகரொலியு முருமே றென்ன, முட்டியெழ வடவநல்போன் முழங்கநலின் புகையெங்கு மூடிக் கொள்ளக், கெட்டனகண் களுஞ்செவியுங் கிளர்நகர மழிந் ததுவிக் கேடி யாவுந், திட்டமுற லீலையும்வா ணியும்வேந்து மந்திரியுந் தெரியக் கண்டார். 67

செருவிறல் வேந்தன் றேவி தெருமந்து நடுங்கி வந்தாள்
வருமிவள் பாங்கி மன்னு மாளிகை மகளிர் யாரும்
பெருகிய நிதியுங் கொண்டார் பேணலா ரென்னக் கேட்டா
னருகுறு தேவி யுங்க ளடைக்கல மென்று போனுன். 68

எதிர்நிழல் போல வந்த லீலையை யிந்த லீலை
யதிசய மெய்தி நோக்கி யருங்கலை மாதை நோக்கிப்
புதிதுநா னிங்கு வந்த பொருளென்கொ லென்ற லோடு
மதிநிற வாணி யந்த மயக்கந்தீர்த் துரைப்ப தானாள். 69

நின்னைநீங் காது வாழ நினைத்தனன் மரண காலத்
தன்னதவ் விடத்தே பெற்றா னன்பினா லுனது காந்த
னின்னல்கூர் மரணந் தன்னி லெண்ணிய தெய்து மியார்க்குந்
தன்னெதி ருற்ற தன்றித் தோன்றுமோ தருப்ப ணத்தில். 70

நாசமுற் பத்தி மூர்ச்சை நனுக்கனுச் சுழுத்தி யெல்லா
மேசுற வொன்றி னுள்ளொன் றில்லையா லிலதுண் டென்ன
மாசுறு மயக்க மட்டே மட்டற வளரா நின்ற
தாசறு மநுப வங்க ளிருவகை யவற்றைக் கேட்பாய். 71

முன்னது பவத்துக் கேற்ற முறைமையாய்ச் சிலவை தோன்றும்
பின்னுறு புதுமைத் தாகிப் பேதமாய்ச் சிலவை தோன்றும்
நின்னுட னின்னா சார நின்குல நின்னொ டொக்க
மென்னவே றன்றி நின்றா ளெதிர்நிழல் போல லீலை. 72

புரவல னிவனா லுன்னைப் போலிவ டோன்றி நின்றாள்
விரவுமிப் போரிற் பட்டு விடூரதன் பதும னென்னு
நரபதி யாகு மென்ற நாமகள் வசநங் கேட்டுப்
பரவின புதிய லீலை பணிந்திது பகர்வ தானாள். 73

பண்டுநான் பூசை செய்த பாமகள் போலு நீயே
விண்டவ ராலென் காந்தன் வீடினா லுறைவ தெங்கே
கண்டுநா னங்கே யிந்தக் காயத்தோ டெய்தி வாழத்
தண்டலில் வரநல் கென்னத் தந்தன மென்ற லோடும். 74

புகன்றநா மகளை நோக்கிப் புராதந லீலை சொல்வா
ணிகழ்ந்தவென் னுடலோ டன்றி நின்றவேற் றுடலை மேவி

யுகந்தலோ காந்த ரத்து முயர்கிரி நகரி னூடு
மகன்றவா றென்கொ லென்ன வாரணத் தன்னை சொல்வாள். 75

வேறு.

ஒருவ ருக்குநா மொன்று நல்கல முணர்வின் வண்ணமே யுயிர்க ளெய்துமாற், கருதி முந்திநீ கதிவி ரும்பிநுய் காத லித்தசிற் கண்ண ளித்தனம், பெருகு காதலா லிந்த வண்ணமிப் பேதை வேண்டவிப் பேறு நல்கின, மிருத யத்திலே நினைந்த தெய்திடு மெமது பார்வையா லியார்க்கு மென்றனள். 76

திறல்வி ரேதன் சினமி குத்தனன் றேரி லேறினன் சேனை யோடுபோய், மறலி யூர்புகும் வழிநெ ருக்கமாய் மருவ லாரெலா மடிய மோதிநு, னிறலு றுங்கொலென் றெண்ணி யன்பரு லீலை வாணிதா ளேத்தி யன்னையே, விறன்மி குந்துநின் கருணை மேவியும் வினையின் மாளுமோ வேந்த னென்னவே. 77

கதிவி ரும்பலாற் கலைவி ரேதன் கப்பி லாப்பதங் கலப்ப தாயினு, னெதிரி யானவிச் சிந்து வென்பவ னிகலில் வெல்லவென் றெனையி றைஞ்சலால், விதியில் வென்றவன் வேந்த னுமென விளம்பு போதிலே விடிய ரேன்றலு, மதிர மோதிமே லடர்ந்த வெங்களத் தநிக மொன்றுமற் றழிந்து போனதே. 78

சிந்து நாமனுந் திறல்வி ரேதச் செல்வ வேந்தனுஞ் சிலைக ளேந்திநு, ரிந்து பாநுவுந் திசைகள் வாநமு மெய்யும் வாளியா லெங்கு மூடினுர், முந்து வெங்கணைத் திரளெ ரிந்துதீ முடுகி யூழியின் முடிவை யொத்தலு, முந்து பாகனுந் தேரும் வில்லுமற் றுயர்வி ரேத னொருவ னுயினுன். 79

பிறைநெ டுஞ்சரங் கவசம் வீழ்வுறப் பிரித்து மெய்யெலாம் பிளந்து சிந்தலும், பொறைய ழிந்துவீழ்ந் தவனை நோக்கிவெண் புண்ட ரீகையைப் புதிய லீலைபார்த், திறைவ னுவிபோ மெல்லை

யாயினு னிவனை நண்ணநா னேக நல்கெனு, வறைத லோடுமவ்
வன்னை நல்கினு ளவளும் விண்ணினெய் தாகி யேகினுள். 80

கருமு கிற்றலங் கடந்து வாயுவின் கதிக டந்துவெங் கதிரி
னெல்லைவிட், டருகு தாரகர் பதம கன்றுமே லயனை யாதியா மமரர்
நாடொரீஇ, மருவு மிந்தவண் டம்பி ளந்துபோய் வாரி யாதியாய்
வளைந்த யாவையு, முறுவி யெல்லையு முடிவு மற்றதா முண்மை ஞான
விண் ணெல்லை யெய்தினுள். 81

கற்ப கோடிவெங் கருட னேடினுங் கடக்கொ ணுவத்திக் காடு
காய்த்தபோ, லுற்ப வங்களா மண்ட கோடியொன் ருென்றை
நோக்குரு துளவ வற்றினு, ளற்ப மின்றியா வர்ண பேதமே
யயல்வ ளைப்புறு மண்ட மொன்றனுட், டற்ப தங்கடந் தெய்தி
யம்புயச் சவங்கி டந்தமண் டபம டைந்தனள். 82

தமர வண்டுசூழ் மலரின் மூடமிச் சவச ரீரமாந் தரணி
பாலனே, யெமது நாயகன் கருணை வாணியா லென்கொன் முன்ன
மிங் கெய்தி னேமெனு, வமர வெண்ணிவெண் கவரி வீசியங் கன்ப
னேர்புறத் தவளி ருந்தபின், விமல ஞானியாம் விறல்வீ ரேதன்
மேவு சீவன்விண் மீது போயதே. 83

ஞான நோக்கினு லவனை நோக்கிவிண் ணடந்து பின்வரு
நங்கை மார்தமைத், தான றிந்திடா தகன்ற சீவன்போய்ச் சவமி
ருந்தமண் டபம டைந்திடப், போன மாதரும் புதிய லீலையைப்
புரிந்து நோக்கினுர் பொன்செய் மண்டபத், தான சீவனைத்
தகைந்து மீளவு மம்பு யாசநத் தவணி றுத்தினுள். 84

பண்டை லீலைதன் மேனி கண்டிலாள் பரம டந்தையைப்
பணிந்து கேட்டலு, மண்டு சிந்தைபோய் நிறைச மாதியான்
மறிந்து வீழ்ந்தமெய் மாண்ட தாமெனக், கொண்ட மைச்சர்வெங்

கனல்கொ ளுத்தினர் குரம்பை யோடுநீ குவல யத்துறி, லண்டர்
வானினின் றுடலொ டேகினு ளந்த லீலையென் றதிச யிப்பரால்.85

சூக்க மெய்யினோ டிருந்து வாதனைத் தோற்ற மாற்றலாற் றூல
காயநீ, போக்க லாயதென் றிவளுக் கோதியப் புதிய லீலையிப்
போது காண்கென, வாக்கின் செல்வியுண் ணினைந்த வெல்லையின்
மறைந்து நின்றவர் நிறைந்து தோன்றலும், பாக்கி யங்கள்போற்
கண்ட லீலையப் பாவை மார்பதம் பணிந்தி றைஞ்சினள். 86

போத வாணியும் பழைய லீலையும் புதிய லீலையும் புணர்ந்தி
ருந்துழி, சாதி மென்மலர் வாசம் விட்டெனச் சலச மாதுயிர்த்
தடைவி டுத்தலும், வாத ரூபமாய் நாசி யூடுபோய் வறந்த மெய்
யெலா நிறைந்து லாவிடச், சீத மாகிநெய்த் துளிப ரந்துகண் டிறந்
தெ ழுந்தனன் செத்த மன்னவன். 87

இங்கு நின்றுளா ரெவர்கொ லென்றுவா னிடிமு ழக்கமொத்
திவனு ரைத்தலு, மங்கு நின்றுளாள் வணங்கி யிப்பவத் தடுத்த
தேவிநா னருகு தாழ்ந்தவிம், மங்கை யாரென வென்னை யொப்பநீ
மநத்தி லெண்ணலான் மகிழ வந்துளா, டுங்க வாணியிங் கிருந்து
ளாளெனத் தொல்லை லீலையே தோன்ற வோதினள். 88

பகரு மெல்லையிற் பதமி றைஞ்சுமிப் பதும வேந்தனைப் பாம
டந்தைதன், றிகழு மங்கையாற் சென்னி தீண்டிநீ தேவி மாரொ
டுஞ் சிறந்து வாழ்வுறப், புகழுஞ் செல்வமும் பெருக வையகம்
பொலிக தீதெலாம் போக வெங்கணு, நிகழு மேன்மையோர் நிறைக
நீடெனு நிமல வாணிதன் னிலய மேவினள். 89

வாழி வாணிநா மங்கை வாழிசொன் மாது வாழியென் றினிது
வாழ்த்தியே, யாழி மன்னனுந் தேவி மார்களு மயுத மெட்டியாண்
டாசு செய்தபின், னேழி ரும்பவந் துடைத்து வாணிமுன் னியம்பு

சீவன்முத் தியிலி ருந்துபே, ரூழி பேரினுஞ் சிறிது பேர்விலா
வுடலி றந்தவீ டொன்றி மேவினர். 90

3—2. லீலை (மண்டபக்) கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—323.

---

## 3—3. கற்கடி (சூசி) கதை.

காட்சி யென்னுங் குற்றமறக் கதித்த லீலை கதையாலே
யாட்சி யான சகமென்னு மதிபா ரத்தை யறவிடுவாய்
சூட்டி யான வுலகமெனுந் தோற்ற முடைத்தாய்ப் பேதமற
மாட்சி ஞான சுகவடிவாய் வயங்கும் பிரம மேயுளதே. 1

அதனுக் கிணையாய்ப் புகலரிதா யகன்று நிறைந்தாழ்ந் தமலமதாய்ச்
சதம தறிந்தோர் களுமியல்பு சாற்றற் கரிதாய்ச் சாந்தமதாய்த்
திதமுற் றசையாக் கடலென்னத் தீப மென்னத் திகழ்கின்ற
முதன்மைப் பிரமத் தொளிதானே முடிவில் பரமா கியசீவன். 2

தனையுண் டாக்கு நீள்விறகாற் சற்று நெருப்புத் தடிப்பதுபோ
லினைய சீவன் கனவறிவா லியானென் றுணர்ந்து சங்கற்ப
நினைவி னலே யகங்கரிக்கு நிறைந்த சீவன் காரணமாய்
வனையுஞ் சித்த மநம்பகுதி மாயை யெனும்பேர் வகுத்துரைப்ப. 3

இனத்தாற் படரு மநம்பரம னேது வாயிப் படித்தோன்று
மநத்தால் விரிந்த சகமெல்லா மநம வடிவே மற்றில்லை
கனத்தாற் கரைதீர் பலவறிவாங் கல்லோ லச்சிற் கடல்பொங்குந்
தினத்தா னீண்ட கனவொப்பச் சித்த வசத்தாற் சகந்திரமாம். 4

தெரியாத் தறியிற் கள்வனெனத் தெளியா மையினு லுலகுண்டா
மரியாப் பிரமத் தொடுசீவன் மறந்தும் பேத மிலாததுபோற்

பிரியாச் சீவ சித்தங்கள் பேத மில்லை யிதுபோலத்
தரியாச் சித்தஞ் சகங்களுக்குச் சற்றும் பேத முளதாகா. 5

இதுகா ரணமா மொருகதைபண் டிகலா ரரக்கி யியம்பியது
முதுவாம் வினுவா லறிபொருள்கண் முழுதுந் தெளியத் தெளிவிப்ப
ததுநீ கேட்பா யிமவானுக் கயலுத் தரபா லமர்கிற்பாள்
விதுவா மெயிற்றுக் கற்கடிப்பேர் பேழ்வா யரக்கி மின்கண்ணள். 6

கருமே ருவைப்பெண் வடிவாகக் கைகால் வகுத்த தெனத்திரிவா
ளருமே றனைய சிறுநகையா ளோடா மீன்போ லுழல்கண்ணள்
பெருமே னியைத்தாங் கிருகுறங்கும் பேரிச் சென்னப் பெரிதுடை
வருமே கத்தைப் பிளக்குநகம் வயிடூ ரியத்தின் சுளகொப்பாள்.[யாள்

பாழிப் புவிமே லுயிரையெலாம் பகலு மிரவுஞ் சொரிந்திடவு
மூழிக் கனல்போ லவியாத வுதரக் கனலா லுள்ளழிந்து
காழிக் கிளர்நா வலந்தீவிற் காணப் படுமன் னுயிரெல்லா
மாழிக் கிடைவீழ் நதித்திரள்போ லருந்திற் சிறிதாருயிர்நிற்கும். 8

மழையா லவியுங் கானலென வயிற்றி லெரியுஞ் சிறிதவியும்
பிழையா திதனைத் தவம்புரிந்து பிரம னருளாற் பெறுதுமென
முழையா ரிமய கிரிமேவி மூழ்கி யொருகா லுறநின்று
புழையார் விழியா னடுவொனிற் பொலியுங் கதிரை யெதிர்நோக்கி. 9

வருந்தி நின்று வுயர்தவத்தில் வருட மோரா யிரஞ்செலுத்தத்
திருந்து கமலத் தயன்வந்தான் றீயோ ரெனினு மருந்தவத்தாற்
பொருந்து ருத பொருளுண்டோ புண்ட ரீகன் போதவுமுன்
னிருந்த படியே யிருந்தரக்கி யிதயத் திறைஞ்சி யிதுநினைந்தாள். 10

தாவு முதரக் கனறணியச் சற்று மிரும்பாற் சமைந்தவொரு
சீவ லூசி வடிவானற் சகத்தோ ருடலங் களிற்புகுந்து
மேவு மிரைகள் வேண்டியது விழுங்க லாமென் றுணர்வாளை
யாவ தெண்ண முனக்கென்ன விசைத்த வயனுக் கிவளிசைப்பாள்.

துதிப்பார் துணையே நான்சீவ சூசி யாக வேண்டுமென
விதிப்பான் விகார பூருவமாம் விடூசி யாக மெய்க்கொண்டு[றைவோர்
குதிப்பாய் துர்ச்சேட் டையர்மூர்க்கர் கொடியோர் கொடிய தலத்து
கதிப்பால் விரும்பா வுணவுண்போர் கருத்திற் சுவாசத் துடன்கலந்
[து. 12

நல்லா ரிடத்தி னீயெய்தி னுமே விதித்த மந்திரத்தாற்
கொல்லா தொழிவாய் தீயோரைக் கொன்று தின்பா யெனமலரோன்
சொல்லா முன்ன மலைபோல்வாள் சூசி யுருவாஞ் சீவனுமாய்ப்[தாள்.
பொல்லா தவரஞ் சினத்தடித்தோர் பொன்றும் படியுள் ளுறப்புகுந்

வாயு வடிவா யுட்புகுந்து மண்ணில் விண்ணிற் பல்லுயிர்க
ளாயு வெல்லா மிருவடிவா யநேக கால மருந்தியபின்
ஞேயு மநத்தா ளாயவமே யுழன்று வருந்தி யூசியுமாய்த்
தேயும் படியே கெடுத்ததெமைச் சீசீ யாசை யெனத்திகைத்தாள்.

வேறு.

தீயம நத்தொடு யாமவ மேபல சீவன ருந்தினமா
லேயது விட்டன மென்றிம வானிடை யெய்தரி தானதவ
மேயின ளொன்றுநி னைப்பிலள் சஞ்சலம் விட்டுணை வற்றொருமித்
தாயிர மாவரு டங்கள்செ லுத்தலு மற்றது வல்வினையே. 15

பாவம கன்றும நந்தெளி யப்பர பாவனை தன்வயமே
மேவலு மிவ்வுல கத்தையி கழ்ந்துவி ருப்புவெ றுப்பிலளாய்
மாவரு டங்களொ ராயிர நின்றபின் மன்னுணர் வுற்றதெனக்
கேவலம் வந்திவ ளுக்கொரு வாய்மைகி ளத்தினன் மாமலரோன். 16

சீவனின் முத்திய டைந்தனை சிந்தைதெ ளிந்தனை தொல்வடிவாய்ப்
பூவல யத்தறி வில்லவர் தீயவர் பூரியர் மெய்யிரையா
யாவிவ ளர்த்துறை கென்றய னேகலு மத்துவி தப்பரமே
பாவனை யுற்றொரு செய்தொழி லற்றப தத்திவி ருந்தனளால். 17

விகற்பமி றந்தச மாதிநெ டும்பகன் மேவினன் மீளவிடா
வுகப்பொடு நெஞ்சொடு கூடின டொல்பசி யுன்னின ளெனுமா

றிகத்துள மட்டுமு டற்குள தானவி யற்கைவி டாததனுற்
சகத்தில ரக்கர்கு லத்தொழி லானத சைப்பலி கொள்வனென. 18

அயனுரை செய்தது மப்படி யாதலி லந்தவு ரைப்படியே
கயவரு டற்பலி கொள்ளுவ னென்றுக ளித்திம வானயல்போய்
வயமிகு வேடுவர் மண்டல மேவிவ நத்திலு றைந்திடுநா
ணயமுற மந்திரி தன்னொடு மங்கொரு நரபதி நண்ணினனல். 19

முச்சுடர் வந்துறி ஙங்கரு கத்தகு முற்றிருண் மூடிரவு
டச்சமு ருரவர் சோதனை செய்தனு மங்கவள் கண்டளவே
பச்சிரை யாமிவர் மெய்யறி வில்லவர் பாமர ராகியுளா
ரிச்சக மேனுயிர் வாழிலி கம்பர மெங்குமி டும்பையென. 20

மீளவு நின்றுணர் வாளயன் முன்னம்வி தித்தது மிப்படியே
கோளற வந்தப யன்கவ ராதவர் கொச்சைம நத்தினரே
நீளநி னைந்துணர் புந்தியு நற்குண நீர்மையு மெய்தியுளார்
மாளவு தஞ்செய நெஞ்செழு மோவிவர் வன்றுயர் மேவுவரோ. 21

வேறு.

வஞ்சமினீள் புகழ்வாணுள் வகுப்பரிய சுகமமர்ந்தோர் வணங்க லாவா, ரெஞ்சலிலா வாவியினு மினியவரா தலினவருக் கிடரே வந்தா, லஞ்சலென வுயிர்கொடுத்து வளித்திடவேண் டினாராவ ரன்பா ஞோர்க்குத், தஞ்சமுறக் காலனையு முறவாக்குந் தன்மை யினர் தக்க சான்றோர். 22

அரக்கியெனு மியாமுதலா யுயர்ந்தோரை யாதரிக்கு மன்பு கண்டா, விரக்கமுறப் பொன்போல யாவரே விரும்பாதா ரிகலோ கத்திற், புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோரைக் குளிர்விப்பர் புணரா தோரே, பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்தி முதற் பயன்பெற் றோரே. 23

ஆதலினு லிவர்தம்மை யறிஞரோ வறிவிலரோ யார்கொ லென்
னச், சோதனையாம் வினவுரைகள் சொல்வோமென் றருமேறுந்
துணுக்கென் றஞ்ச, மீதுறநின் முற்பரித்து வெவ்விடிக்குப் பின்
னுலி வீழ்க்குங் கார்போ, லோதரிய கொடியவாந விசும்புக்கு மதி
யிரவி யொப்பீ ரென்னு. 24

மீட்டுரைப்பாண் மாயையெனும் வெவ்விருட்பா றையின்கீழே
மிளிர்ந்து மாயு, மீட்டமுறு புழுப்போல்வீ ரெனக்கிரையா யிக்கணத்
தே யிறக்க வந்தீர், சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர்போன்
றீரெவர்நீர் செப்பு மென்னக், கேட்டளவே கொலையரக்கி
கேளென்னத் திறல்வேந்தன் கிளத்த லுற்றான். 25

எவ்வுழிநின் றனைநீயிங் கிசைத்தவெலா மிளவண்டி னிரைச்
சல் போலச், செவ்விதுகேட் டனமென்ன வரக்கியுநன் றென்
றெதிரே சிரித்த லோடும், வெவ்வியபல் லொளியாலே வெளியாகக்
கணடிறையும் வெருவ லின்றி, மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ
வருந்தலெனு மன்னன் சொல்வான். 26

எய்தாநின் றுளபயனுக் கியற்றுதா ரில்லையா மென்ற போது,
நொய்தான கருமத்தி னெய்தானோர் விரைந்திடுவர் நொய்மை
தோன்ற, வைதான புந்தியினு லாறுதலா லறிவுடையோ ரணைத்துஞ்
செய்வர், வெய்தாவுன் போல்வாரைக் கொதுகெனவீ சிடுமெங்கள்
வீரக் காற்று. 27

ஆதலால் விரைவையொழி யுன்கருத்தை யுரையெங்க ளருகு
வந்தோர், காதலா லிரந்தபொருள் கனவிலுநல் குவமென்று கழற
லோடும், போதமுங்கல் வியும்வலியும் பொறையுமள விலரென்றே
புந்தி செய்தாண், மேதகமா மவருரையை மிகவியந்தா ளிழிவிலா
மெய்ம்மை கண்டாள். 28

வாக்குமுகங் கண்களான் மாறுபடா துயர்ந்தோர்தம் மறுவில் சித்த
மேக்குயரு மிவற்றாலே புண்ணினைவு மறியலா மேலோர் தாமே

பாக்கியம்போல் வந்தெய்திற் சந்தேகந் தெளியாதார் பதக ராகுந்
தாக்குமுறை யாலிவரை யறிதுமெனு யாவர்நீர் சாற்று மென்றுள்.29

வினையமுற வரக்கியிது விளம்பிடமந் திரிவிளம்பும் வேடர்க்
கெல்லா, மினையவன்மன் னவனமைச்ச னுகு மிருட்போதி
லெங்கு நாடி, யுனைநிகர்வா ரைச்சோதித் தொறுக்கவுயி ரொடுக்க
வுயிர் நிறுத்த வந்தோம், நினைவிதுவந் ததற்கென்று விவன்கூற
மீண்டந்த நிருதி கூறும். 30

தியவனு மந்திரியா னல்வேந்துந் தீவேந்தாந் தீமை யில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்து நல்வேந்தாந் தொடர்ச்சி போல
வாயநெறி மன்னவரா லமைச்சருமப் படியாகு மாத லாலே
நேயவிவே கத்தமைச்ச னுண்டாகி லெப்பயனு நிருபர்க் குண்டாம்.

மன்னவனெப் படியுலகின் மன்னுயிரு மப்படியா மகிமை தானு
நன்னடுவு நிலைமையுமெய்ஞ் ஞானமு றெளிந்தவர்க்கே நண்ணு நிற்கு
மன்னதுகற் றிலரென்னி லரசரமைச் சர்களென்போ ரபத்த ராகு
மின்னகலை யிலதாகி லெனக்கிரையா யிளமைநல மிழந்தி ரின்றே.32

சிங்கமெனு முங்களையான் செப்புகின்ற வினுக்கூட்டிற் சிறை
செய் கின்றே, னுங்கண்மதி யாற்பிறந்தா லுயிர்வாழ்வீ ரெனவகுத்
தென் னுரைசெய் கென்றுத், துங்கஈர பதியுரைப்பத் தொல்லரக்கி
நல்லமுதத் துளிகள் போல, வங்கவருக் குரைத்தவெலா மிராகவகே
ளெனவசிட்ட னருள லுற்றான். 33

அண்டநிரை பலகோடி பலவாயு மொன்றுமெவ் வணுவி
னுள்ளே, விண்டகடற் குமிழிகள்போல் விரிந்தொடுங்கும் விண்ணு
யும் விண்ணன் றேது, தண்டறவுண் டாயிருந்து மிலாததெது சரித்
தேயுஞ் சரியா தேது, கண்டிடநில் லாதாயு நிற்பதெது சித்தாயுங்
கல்லா மேது. 34

லாநிடையோ வியமெழுது கின்றதெது வித்திடையின் மரங்
கள் போல, வீநமிலா வெவ்வணுவி லுலகமெலா மிருக்கின்ற

தியாதி னின்று, மானகடற் றிரைநுரைபோ லொருபொருளும்
பிரிவாகா தமைந்த நீரு, மீனமறு நெகிழ்ச்சியும்போ லேதோன்றி
யிருமையுமெங் கொருமை யாகும். 35

இந்தவினு வின்பயனை நும்முணர்வா லேதோன்ற வியம்பு வீரேற்
கந்தமுற வென்குழன்மே லெப்போது மிருக்கின்ற கமழ்போ தாவீர்
மந்தமுறு புந்தியினுல் வகுத்துரைக்க மாட்டாது மயங்கு வீரேல்
வெந்தவயிற் றெரிகனற்கு விறகாவீ ரென்றரக்கி விளம்ப லோடும்.

மந்திரிமுன் னுரைசெய்வான் மாசிலாப் பரம்பொருளை வகுத்
துச் சொன்னுய், சிந்தைமுத லாம்பொறிக ளாறுலு மெட்டரிதாந்
திறத்தி னுலே, யந்தமில்சிந் மாத்திரமாய் விண்ணிலுநொய் தாம்
பரம மணுவே யாகு, முந்துபிர மாண்டமெலா மவ்வணுவி
லேதோன்றி முதிர்ந்து மாயும். 37

தடமான வதன்புறமில் லாமையினுல் விண்ணுகுந் தனிப்போ தத்தா
விடமான விண்ணன்று மின்னதெனத் தெரிவரிய வியல்பி னுலே
திடமாக விலதாகுஞ் சற்பாவத் தாலுளதாய்ச் செப்ப லாகும் [ம்.
புடமாக விளங்குதலாற் சித்தாகு மறிவதிலாப் பொருட்டாற் கல்லா

தானுகு மிகநொய்தா மாகா யத்திற் சகத்திரளாஞ் சித்திரத்
தைத் தானே கோட்டு, மானுத வுலகமெலாந் தனது சோதி யாத
லினு லதற்குவே றயலொன் றில்லை, நீநானுஞ் சகபேத வடிவந்
தானு நிற்கின்ற வதன்வடிவாய் நீங்கா தென்றும், நாநாவாம்
பொருட்புணர்வா னடந்த தாகு நடக்கவிட மிலாமையினு னடவா
தாகும். 39

அடைவதற்கொன் றிலாமையினு லில்லை யாகு மநவாதஞ்
சத்தையிலுண் டாகு மென்று, புடைபெயர்நன் மதியமைச்சன்
புகலக் கேட்டுப் போதவியந் ததற்பின்பு பூப னேயுன், னுடைய
வுணர் வுரையென்ன வவனுஞ் சொல்வா னுலகத்தி லுறுதியிலா

வுறுதி தானே, தடையறுசிற் பரம்பொருளி னுறுதி யாகுந் தற்பரத்தி னியல்பின்னஞ் சாற்றக் கேளாய். 40

கருத்ததனுற் சங்கற்ப விகற்ப மெல்லாங் கைவிடுதல் கைக்கொள்ளப் படுவ தாகுந், திருத்தமுறு தன்விரிவுங் குவிவு தானுஞ் சிருட்டியுங்கற் பமுமாகுந் திரள்வே தாந்தத், தருத்தமுறு வாக்கியத்தி னிட்டை யாகு மவ்வேத வாக்கியத்துக் கயலு மாகு, முருத்திகழு முள்ள தில திரண்டி னுக்கு முள்ளாகு மவையிரண்டி னுருவு மாகும். 41

சராசரமா முலகனைத்து மநரூ பத்தாற் ருன்செய்யும் விளையாட்டாஞ் சகமாய் நின்றும், புராதநமா மொருமையினிற் பிரியாதாகும் பூரணசின் மாத்திரமாம் பொருளே சொன்னுய், நிராசையுளத் தவரறியும் பரமீ தென்று நிருபனுரைத் திடநிருதி நெஞ்சுட்கொண்டு, விராவமுத மழைசொரியக் குளிர்ந்த வாபோன் மிகக் குளிர்ந்தாள் சாந்தமுற விளம்ப லுற்ருள். 42

அற்புதமா யமுதமா யறிவே யாகி யத்தமந முதயமிலா வருக்கன் போலாய்ப், பொற்புமிகும் புந்தியுள வும்மைப் போல்வார் பொன்னடியை முடியாகப் புனைந்தா ரன்ருே, தற்பரமா முலகாளும் வேந்த ராவோர் தமையுணர்ந்தோ ரைச்சேர்ந்தாற் றளர்வுண்டாமோ, நற்பயன்போல் வருமுமக்கிங் கரிதின் றேனு நான்செய்யுங் கைம்மாறு நவிலு மென்ருள். 43

சிலையரக்கர் குலமென்னு மெட்டிக் காட்டிற் செறிகனித்தே மாவனையாய் சகத்தி லொன்றுங், கொலைபுரியா தொழியென்று வேந்தன் கூறக் கொலையொழிந்தே னென்றரக்கி கூற லோடுந், தொலைவருமூ னுணவாரீ செய்யு மாறென் சொல்லெனமன் னவன்கேட்பத் தொல்லை நாளி, லலைவில்சமா தியிலிருந்து பசியை வென்றே னவ்வகையே யின்றுமிருந் தாற்ற லுற்றேன். 44

தெள்ளமுத தாரணையால் வேண்டுங் காலந் தேகமுட னிருந்தப்பாற் றேகந் தீர்வே, னுள்ளநிறை யுணர்வுடையே னென்றுங்

கொல்லே னுண்மையென வுரைத்தேக வுன்னு வாளைக், கொள் ளரிய நட்பெளிதிற் கொண்டேம் நீயெங் குலமகளா யெம்பதிக்குக் கூட வேகிற், கள்ளருட லிரைதருது முடல்போ மட்டுங் கருது முடல் வாதனைகள் கழலா கண்டாய். 45

ஆதலினற் பதகருட லிரையைக் கைக்கொண் டரும்பசி போய்ச் சமாதிதனை யடையிவ் வாறு, காதலுடன் பலகாலுஞ் செய்தி யென்று காவலன்கூ றவுமரக்கி களிகூர்ந் தேகப், போதக மன் னூர்தமது நகர மேவிப் பொன்மனைபுக் காரிரவி பொலிய வந்தான், பாதகர்மூ வாயிரரை யாறு நாளிற் பார்த்திபனீந் தான ரக்கி பற்றிக் கொண்டாள். 46

பூமகள்போ லங்கிருந்த வடிவைக் கங்குற் போதிலொழித் தரக் கர்குலப் பூவை யாகிப், பாமரராம் பாதகரைத் தோண்மேற் கொண்டு பார்த்திபனே டமைச்சனுக்கும் பண்பு கூறி, யேமமுறு மிமகிரியிற் சமாதி மேவ வேகினளின் றளவு மிந்த வாறே, கோம கனு மரக்கியுநட் பானரென்று குரிசிலுக்கு வசிட்டமுநி கூறி னனல். 47

## 3—3. கற்கடி (சூசி) கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—370.

---

## 3—4. ஐந்தவர் கதை.

உரைசெ யூசி கதையாலே யுண்மை யாகிப் பரமான
கரையில் பிரம மேயுளதாங் காணப் படுவ தொன்றில்லை [டோர்
வரையில் சிருட்டி களின்முதலாய் மனமே விளங்கு மிதுபொருட்
புரையில் கதைகே ளெனவசிட்டன் புயன்மே னியற்குப் புகல்கின்
[ருன். 1

மேவு கதையாற் சிற்சத்தி விரிவே யுலகென் றறுதிவரும்
வாவு மநமாஞ் சிறுமகவு மடமை யாலே வெறும்பொய்யே
தாவு சகப்பேய் வரக்காணுந் தனைப்போ திக்கி லறிந்திடர்போம்
பாவும் விகாரம் பலசேரிற் பவமா மவற்றை விடல்வீடாம். 2

ஒருகால் விரிஞ்சன் சிருட்டியெலா மொடுக்கி யிரவி லுறங்கியபின்
வருகா லையின்மீண் டுலகளிப்பான் வானேக் குதலு மநத்தாலே
பெருகா நின்ற விண்ணிடையே பேத மான பலசிருட்டி
யருகா நின்ற படிகண்டா னார்செய் தனரென் றதிசயித்தான். 3

அதிலோ ரிரவி வருகென்னு யாரே யளித்தா ரெனக்கேட்பக்
கதிரோன் வணங்கி யுரைசெய்வான் கமைதீ ருலகின் காரணமாம்
விதியா நீயீ தறிந்திலையேல் விளம்பக் கேட்பாய் வெண்கயிலைப்
பதியா கியநா வலந்தீவிற் பரப்பா மிடத்தோர் பக்கத்தில். 4

சிறக்குஞ் சுவர்ண தடமென்னுந் தேச மொன்றுன் மைந்தர்களா[யே
னிறக்குஞ் சிருட்டி படைத்தததி னெடுங்கா சிபன்றன் குலத்திடை
பிறக்கு மறையோ னிந்துவெனும் பெரியோன் மக்கட் பேறின்றிப்
பறக்குங் கருத்தாற் றேவியொடும் பரமன் கயிலைப் பதிமேவி. 5

தவமேற் கொண்டு பாதவம்போற் சலமே யருந்தி வருந்திடுநாட்
சிவனுண் மகிழ்ந்து வேண்டியதென் செப்பு மென்னச் சிரம்பணிந்து
கவலை தீர வீரைவர் கலைதேர் புதல்வர் வேண்டுமென
வவனங் களிப்ப விவர்களிப்போ டகன்றூர் புதல்வ ரவதரித்தார். 6

மைந்த ரொருப துளராகி மறைநூ னிறைந்து வளர்ந்ததற்பின்
றந்தை தாய ரிறந்தேகத் தநயர் கயிலைத் தலமெய்திச்
சிந்தை செய்வார் நல்குரவு தீர வுயர்வன் னியராவோ
மந்த நிலைசற் றுதலினு லதிக நிலைமன் னவராவோம். 7

அதுவுஞ் சிறிதாம் புவியனைத்துக் காச ராவோ மதுசற்று
நிதிதுன் னியவிந் திராவோ நிகழ்த்து மதுவு நெடிதல்ல

பதுமஞ் செறியு மயனுதல் பழுதில் பதவி யெனத்துணிந்தா
ருதித மநத்துப் பதின்மருமொத் துயரும் பதுமா தநத்திருந்து. 8

பிரம னுமே சிருட்டியெலாம் பிறப்ப தெம்பா லென்றுள்ளே
திரம தான மநத்தாலே சிந்தித் துடலிற் சிந்தையற
மரம தென்ன விருத்தலுமே வருநாட் பலபோய் மநோபாவ
முரம தாகி யயனுனு ரொருப துலக முளதான. 9

மநவா னகத்தி லிவர்பத்து வகையிற் சிருட்டி தந்தனரா
லினமா மவற்றி லோரிரவி யானு மென்னு வேகினனுற்
கனமா மநத்தின் விரிவாலே காணுஞ் சகங்க ளுளவாமென்
றநவா கநத்தோன் மநத்தாலே யளித்தா னிராமற் கருள்செய்தான்.

## 3—4. ஐந்தவர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—380.

---

## 3—5. (வஞ்ச) இந்திரன் கதை.

பொருவில் சகத்தை யளிப்போனும் புருடன் றானும் புகன்மநமே
கருது மநத்தின் செயல்செயலாங் காயச் செயல்கள் செயலன்றாம்
பருதி யுரைசெய் புதுமறையோர் பதுமா தநராய்ப் பார்படைத்தார்
பெருமா மநத்தி னுயர்சத்தி பிறரா லறிதற் கெளிதாமோ. 1

உள்ள முடலைப் பாவிக்க வுடலா யதனு லுள்ளயரும்
வெள்ள ஞாநத் தவருள்ளே மேவா நின்ற பாவனையாற்
பொள்ள வுடலி னலந்தீது புந்தி செய்யார் புராதநநாட்
கள்ள வினைசெ யகலிகையுங் கரவிந் திரனு மிதற்கொப்பாம். 2

என்ன விவர்க ளாரென்னு விராமன் கேட்ப முநிசொல்வான்
முன்னர் மகத நாடுடையோன் மொழியிந் திரத்துய்ம் மநனென்றோர்

மன்ன னவனுக் குயிர்போல மகிழுந் தேவி யகலிகையாஞ்
சொன்ன நகரி லொருவனுளன் றூர்த்த னவன்பே ரிந்திரனும். 3

அன்னா ளந்த வகலிகையு மவ்விந் திரனுஞ் செறிகதைகேட்
டின்னா ளிந்த வகலிகையு மிவ்விந் திரனை யினிதணைந்தா
டொன்னுட் பிரிந்தோர் கூட்டமெனத் தூர்த்த சூடா மணியுடனே
சின்னாண் மகிழ்ந்தொன் றுமளவிற் செங்கோ லரசன் செவிப்படுத்
தார். 4

கேட்ட வேந்தன் மிகமுனிந்து கிளரு நீரி லமிழ்வித்துங்
கோட்டு மதமா வெதிரிட்டுங் கொடுந்தீக் கொழுந்திற் குளிப்பித்தும்
வாட்டுங் கசையான் மோதுவித்தும் வருத்தஞ் செய்ய வருந்தாம
னாட்ட மெதிர்பார்த் துளமொன்றி நகைசெய் திருந்தார் நலிவுண
ரார். 5

அரச னோக்கி மிகவியப்புற் றறவும் வருத்த வருந்தாவா
றுரைசெய் திடுமி னென்றலுமே யுள்ளங் களிப்பா ருரைசெய்வார்
வரைசெய் புயத்தா யெங்கண்முக மதியி னமுதம் விழியருந்தக்
கரைசெய் யரிய களிப்பான்மெய் காணேம் வருத்தங் காண்பேமோ.

அரிந்த பொழுது முடற்றுன்ப மறியே மொன்றி லன்பாகிப்
புரிந்து பற்று மநத்தினுடல் பொன்ற வரினுந் துயர்தோன்றுத்[பார்
தெரிந்த பொருளின் மநமழுந்திற் றேகத் தொழில்வே றெவர்காண்
விரிந்த முநிவர் சாபமும்பல் வினையு மதனை மீட்பரிதாம். 7

மாண்டு வாளா போனவுடன் மட்டொன் றில்லை யவையெல்லாந்
தாண்டு மநத்தா லுண்டாகுஞ் சலத்தா லன்றிக் காடுண்டோ
தூண்டு மநமே முதல்வடிவாய்த் தூல வுடலம் போனாலும்
வேண்டு முடல்கள் விரைந்தெடுக்கும் விரியுங் கனவிற் செயல்போல.

இந்த மநமே யொடுங்கிட லு ஷேது மறியா தெனக்கேட்ட
வந்த நிருபன் பரதனெனு மருகின் முநியை முகநோக்கிச்

சிந்தை மயலுற் றிருந்துமிவர் சிற்பா வனைசெப் பினரென்று
புந்தி மகிழ்ந்து புறநாட்டிற் போமென் றவரைப் போக்கினனால். 9

3—5. (வஞ்ச) இந்திரன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—389.

---

## 3—6. மநத்தின் கதை.

இந்தக் கதையை விளையாட் டென்ன விசைத்தோ மெவர்க்கு
மந்தத் தமதா முடலொன் றயலா முடலொன் றவற்றிற்
சிந்தைச் சரீரம் விரைவிற் செயல்க ளெல்லாஞ் செய்து
தொந்தித் தலையு மற்ற தூல வுடலொன் றறியா. 1

என்றான் வசிட்ட னவனை யிந்தச் சடமா மநத்துக்
கொன்று வடிவ மிலதா முள்ள வடிவை விரித்து
நன்று யுரைப்பா யென்று ஞாநக் குரிசில் கேட்பப்
பொன்று விதிசொற் படியே போத முனிவன் புகல்வான். 2

அகில சத்தி யுடைத்தா யநந்த மான பரமம்
புகல்சங் கற்பத் தோடே பொருந்தும் வடிவே மநமா
மிகலுஞ் சத்தோ டசத்தா யிரண்டி னுள்ளுந் தோன்றிப்
பகருந் தொழில்க ளோடே பயில்பா வனையு மஃதே. 3

எங்கே யெனினுந் தோன்று மிந்த மநத்தை முத்திச்
சங்கே தத்தா லாகந் தன்னிற் கூட்டி னன்றும்
பங்கே ருகனே தியதோர் பழைய கதைநீ கேட்பாய்
வெங்கே தமுமச் சமுமாய் வெறும்பொய் யாமோர் வநமே. 4

அதினோர் கோடி நீள் மநந்த கோடி காத
மிதிலோர் புருடன் கன்னிகை யெண்ணி லாத துடையோன்

சிதரு நின்ற நினைவோன் சேணு யகன்ற வடிவோன்
பதரு நின்ற கணையம் பலவுங் காத்தாற் பற்றி. 5

தனைத்தான் சிதற மோதித் தகர்ந்தே யுலறி யலறி
யனைத்தாந் திசையு மோடி யவசமாகி யடிபட்
டெனைத்தா முறுப்புந் தூளா யிருளாய் நடுக்க மிகுந்த
வினைத்தாழ் வுறுபாழ்ங் கிணற்றில் வீழ்ந்து நெடுநாண் மெலியும். 6

மீட்டு மெழுந்து வந்து மெய்யின் மோதிக் கதறி
யோட்டந் தனிலே சுழலு முயர்முண் ணிறைந்த கருவேற்
காட்டின் முறிய விழுந்து கனலிற் புழுப்போற் பதைக்கும்
வாட்டந் தவிர்ந்து கதலி வநத்தின் மகிழ்வுற் றிருக்கும். 7

கதலி வநத்தை விட்டு கருவேல் வநத்திற் சுழலும்
பதறிக் கிணற்றில் வீழும் பலகா லுழலக் கண்டு
விதரு வகையாம் பற்றி வீணே வருந்து நீயா
ரெதுசெய் கின்றாய் நினைவென் னென்ன வவனீ திசைத்தான். 8

யானென் றொருவ னில்லை யிங்கோர் செயலுங் காணே
னீநின் றுரைக்க நினைந்து நின்னுற் றளரா நின்றே
னூறென் றியவெம் பகைநீ யுன்னு லின்ப துன்ப
நானின் றறிந்தே னென்று நல்குந் தன்னை நோக்கி. 9

இடிக்கு முகிலின் மழைபோ லிரங்கிக் கதறி யழுதா
னொடிக்கு ளழுகை விட்டு நுணுக்கந் தன்னை நோக்கி
வெடிக்க நகைத்தா னெடிதா மீள வெமது முன்னே
தடிக்கு மங்க மனைத்துந் தானே யடைவே தவிர்ந்தான். 10

விதியின் வசத்தா லிவனே ரிடமே மேவ லுற்று
னெதிர்வந் தொருவ னயலே யிவன்போ லடியுண் டேக
முதல்வந் தவனைப் போனு மொய்ம்பா யுணர்த்த வந்தப்
பதிகன் றூனும் போனுன் பழைய வடிவ மொழிய. 11

பிறிது மொருவன் வந்தப் பெரிய கிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல் லாத காலர் திரும்பி யேறக் காணேம்
வெறிதுன் றியவவ் வநத்தில் வேறு மொருவன் வாலு
மறிது மென்னத் தகைந்தே யான தெல்லா முரைத்தேன். 12

ஓதிற் றென்றுங் கேளா துரப்பி யிகழ்ந்து மேன்மேன்
மோதிக் கொண்டு போனன் மூர்க்க ரவனைப் போல்வார்
வாதிப் புறுவார் நிறைந்து வயிர முள்ளாற் செறிந்து
பீதிக் கிடமா யிருள்சூழ் பெருங்கா டின்று முளதால். 13

அறவே கொடிதாய் வெந்த வடவி யெனினு மறியார்
நறவே கமழ்ந்து குளிர்ந்த நந்த வநம்போன் மகிழ்வர்
மறவே லரசே யென்ற வசிட்ட முநியை நோக்கித்
துறவே புரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வா யென்றான். 14

கேட்ட குரிசி லறியக் கிளர்மா முநிவ னுரைப்பா
ளூட்ட வடியு முடியு நடுவு மின்றிப் பொய்யாங்
கூட்ட மாகி யாழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதா
மீட்ட வுலகத் தியல்பே யாமுன் சொன்ன வநமே. 15

புகையார் வநத்திற் புருடன் புலம்பிச் சுழலு மநமே
தகையா நின்ற நாமுந் தனிவி வேகந் தானே
பகையா மிதனு ளுள்ளம் பாத்தை யறிந்தா றினதான்
மிகையார் மநங்க ளிகழ்ந்து வேட்கை வசத்தோ டினவால். 16

விதறி யோடு மநங்கண் மேவு நரகங் கிணறு
கதலி வநம்விண் ணுலகாங் கருவேல் வநமண் ணுலகாஞ்
சிதறி விழுந்த கிணற்றிற் றிரும்பி யேறு தொழிந்தோன்
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையா ததுவாம். 17

முனையார் முள்ளென் றதுதான் மோக மனிதர் மடவார்
நினையா வின்ப துன்ப நின்று லடைந்தே னியே

சிதறா நின்ற நினைவோன் சேணா யகன்ற வடிவோன்
பதறா நின்ற கணையம் பலவுங் கரத்தாற் பற்றி. 5

தனைத்தான் சிதற மோதித் தகர்ந்தே யுலறி யலறி
யனைத்தாந் திசையு மோடி யவசமாகி யடிபட்
டனைத்தா முறுப்புந் தூளா யிருளாய் நடுக்க மிகுந்த
வினைத்தாழ் வுறுபாழ்ங் கிணற்றில் வீழ்ந்து நெடுநாண் மெலியும். 6

மீட்டு மெழுந்து வந்து மெய்யின் மோதிக் கதறி
யோட்டந் தனிலே சுழலு முயர்முண் ணிறைந்த கருவேற்
காட்டின் முறிய விழுந்து கனலிற் புழுப்போற் பதைக்கும்
வாட்டந் தவிர்ந்து கதலி வனத்தின் மகிழ்வுற் றிருக்கும். 7

கதலி வனத்தை விட்டு கருவேல் வனத்திற் சுழலும்
பதறிக் கிணற்றில் வீழும் பலகா லுழலக் கண்டு
விதறா வகையாம் பற்றி வீணே வருந்து நீயா
ரெதுசெய் கின்றாய் நினைவென் னென்ன வவனீ திசைத்தான். 8

யானென் றொருவ னில்லை யிங்கோர் செயலுங் காணே
னீநின் றுரைக்க நினைந்து நின்னாற் றளரா நின்றே
னானொன் றியவெம் பகைநீ யுன்னா லின்ப துன்ப
நானின் றறிந்தே னென்று நல்குந் தன்னை நோக்கி. 9

இடிக்கு முகிலின் மழைபோ லிரங்கிக் கதறி யழுதா
னொடிக்கு ளழுகை விட்டு நுணுக்கந் தன்னை நோக்கி
வெடிக்க நகைத்தா னெடிதா மீள வெமது முன்னே
தடிக்கு மங்க மனைத்துந் தானே யடைவே தவிர்ந்தான். 10

விதியின் வசத்தா லிவனே ரிடமே மேவ லுற்றா
னெதிர்வந் தொருவ னயலே யிவன்போ லடியுண் டேக
முதல்வந் தவனைப் போனா மொய்ம்பா யுணர்த்த வந்தப்
பதிகன் றானும் போனான் பழைய வடிவ மொழிய. 11

பிறிது மொருவன் வந்தப் பெரிய கிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல் லாத காலந் திரும்பி யேறக் காணேம்
வெறிதுன் றியவவ் வநத்தில் வேறு மொருவன் வரலு
மறிது மென்னத் தகைந்தே யான தெல்லா முரைத்தேன். 12

ஓதிற் றொன்றுங் கேளா துரப்பி யிகழ்ந்து மேன்மேன்
மோதிக் கொண்டு போனுன் மூர்க்க ரவனைப் போல்வார்
வாதிப் புறுவார் நிறைந்து வயிர முள்ளாற் செறிந்து
பீதிக் கிடமா யிருள்சூழ் பெருங்கா டின்று முளதால். 13

அறவே கொடிதாய் வெந்த வடவி யெனினு மறியார்
நறவே கமழ்ந்து குளிர்ந்த நந்த வநம்போன் மகிழ்வர்
மறவே லரசே யென்ற வசிட்ட முநியை நோக்கித்
துறவே புரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வா யென்ருன். 14

கேட்ட குரிசி லறியக் கிளர்மா முநிவ னுரைப்பா
ஞட்ட வடியு முடியு நடுவு மின்றிப் பொய்யாங்
கூட்ட மாகி யாழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதா
மீட்ட வுலகத் தியல்பே யாமுன் சொன்ன வநமே. 15

புகையார் வநத்திற் புருடன் புலம்பிச் சுழலு மநமே
தகையா நின்ற நாமுந் தனிவி வேகந் தானே
பகையா மிதனு லுள்ளம் பரத்தை யறிந்தா றினதான்
மிகையார் மநங்க ளிகழ்ந்து வேட்கை வசத்தோ டினவால். 16

விதறி யோடு மநங்கண் மேவு நரகங் கிணறு
கதலி வநம்விண் ணுலகாங் கருவேல் வநமண் ணுலகாஞ்
சிதறி விழுந்த கிணற்றிற் றிரும்பி யேறு தொழிந்தோன்
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையா ததுவாம். 17

முனையார் முள்ளென் றதுதான் மோக மனிதர் மடவார்
நினையா வின்ப துன்ப நின்னு லடைந்தே னீயே

வினையா மென்ற துணர்வால் வீபு மநனொந் துரைத்த
தனையா ரழுத தென்ற தாசை யறுக்கு மலக்கண். 18

போதம் பாதி யாகிப் புரண மாகா மநந்தான்
காதல் விடினொந் தயர்தல் கதறி யழுத ததுவாஞ்
சீத மாக மகிழ்ந்து சிரித்து நின்ற தென்ற
தேத மில்லா ஞாநத் தேக மாந மகிழ்ச்சி. 19

முடிவின் ஞாநத் தாலே மோகம் விட்ட மநந்தான்
வடிவை மாய்க்கும் பொழுது மகிழு மதுவே மகிழ்வாம்
நெடிய மொய்ம்பி னாலே நிறுத்திக் கேட்டே மென்ற
தொடிவின் ஞாந வலியா லுள்ள மொருப்பட் டதுவே. 20

அங்கத் தறைந்து கொண்ட தடர்கற் பனைக ளாலே
பங்கப் படுவன் றுயராம் பரந்தோ டினதென் றதுதான்
மங்கத் தகுவா தனையான் மருண்டு சுழல்வ தாகுஞ்
சங்கற் பமும்வா தனையுந் தனைத்தான் வலைபோற் றளைக்கும். 21

கோச காரப் புழுப்போற் கொடுங்கற் பனைவா தனையாற்
பாச மடைவ ரியாரும் பகர்ந்த மநத்தின் கதையை
மாசி லாத மநத்தான் மதித்து மநத்தை மாய்ப்பாய்
தேச முடையா யென்று தெளிந்த வசிட்ட னுரைத்தான். 22

### 3—6. மநத்தின் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—411.

---

## 3—7. பாலன் கதை.

முழுதுசத் தியுமாய்ப் புரணமா யென்று முடிவறு பிரமமா வதுதான், பழுதின்ஞா நிகடம். மநமலா தில்லைப் பரமமா மிதிலிலா தில்லை, யெழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவைகளோர் கால

மொன் றுளதாம், வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு முடல்களிற் ரேன்றும். 1

காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங் கனலிலே சுடும்வான் றனிலே, தோற்றலா மையுநன் னீரிலே நெகிழ்வுந் தொலைவுறு மாய் விலே மாய்வு, மூற்றமாம் விதையின் மரங்களும் போல வுள்ளுறை பிரமசத் திகடா, மாற்றல்சால் கால தேசசித் திரத்தா லவனியிற் சாலிபோற் றேன்றும். 2

பரமமே யெங்கு மென்றமுண் டாகும் பயின்மந நத்தினுன் மநமாந், தரமறு பந்த முத்திபே ருலகாஞ் சத்திக ளனைத்துமாய் நிற்குந், திரமறு தனையர்க் கன்னைசொற் கதைபோற் செப்பிய விவையெலாந் திரமாங், கரமலர் முகிலே யென்றலு மந்தக் கதை யினை யிராகவன் வினவ. 3

சித்தவஞ் சனையின் மூலமாங் கதையைச் செல்வனுக் கருந்தவ னுரைப்பான், மெய்த்தக விலாதோர் சிறுவனீ யன்னை விரும்பி யோர் கதைவிளம் பென்னச், சத்தியம் போல வெறும்பொய்யே யுரைப்பா டணிபன் குமரரோர் மூவர், சுத்தவீ ரமுநற் குணங் களுஞ் சிறந்தோர் சூநிய நகரிலே யுறைவோர். 4

மூவரி லிருவர் பிறந்தில ரொருவன் மூலமாங் கருவினு மில்லை, யாவதுங் கருதித் திரிபவர் விண்ணி லளவறு பழமரச் சோலை, மேவலு மதனிற் செழுங்கனி துய்த்து வெம்பசி தணிந்து மேற் சென்றூர், காவரு காக மூன்றுநன் னதிகள் கரைபொரு திரையொடுங் கண்டார். 5

ஓடுநன் னதியி லிரண்டுநீ ரில்லை யொன்றுவெண் மணலதா மிதனி லாடிநீர் துளைந்து பருகினு ரந்தி யாகிமேல் வருநக ரடைந்தார் [று வீடுமூன் றெதிர்ந்தா ரதிலிரண் டில்லை மேன்மாஞ் சுவரிலா தொன் கூடிய வவற்றிற் சுவரிலா வீட்டிற் குடிபுகுந் திருந்தனர் குமரர். 6

ஒருவருங் காணு நகரிலே வெளிவீட் டுறைபவர் கநகபாத் திரமூன், றருகுறக் கண்டா ரதிலிரண் டோடா மறவிலுந் தாளியா மொன்று, சொருபமில் கடத்திற் றுரோணமூன் றதனிற் றுரோண மூன் றகன்றுமிக் கிருந்த, பருவரி சியைத்தாஞ் சமைத்துவா யில்லாப் பநவரெண் ணிலர்க்குமுன் படைத்தார். 7

அவரெலா நிரம்ப வுண்டபின் மிகுந்த தருந்தினர் வேட்டைக ளாடி யிவர்கண்மூ வருமங் கிருந்தன ரென்ன விளமையா னம்பினன் சிறு புவநமு மிவ்வா றறிவிலோர் காண்பர் புகன்மந விரிவுசங் கற்பம்[வன் விவரமா மிதனு லுலகமா மிதனை விடுநிரு விகற்பமா யிடுநீ. 8

3—7. பாலன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—419.

---

## 3—8. சித்தன் (சாம்பரிகன்) கதை.

தங்கள்சங் கற்பத் தாலறி வில்லோர் சாலமோ கிப்பர்நல் லறிஞர், பொங்குநல் விசார மதியினுன் மயங்கார் புத்தியாற் பொய்ம் மையை யொழித்துத், துங்கமெய் யுணர்வாய் பந்தமற் றிருந்துந் தொடர்புறு பந்தமுண் டென்று, பங்கமுற் றயரே லமலமா யழியாப் பரம்பொருள் பந்தமுற் றிடுமோ. 1

அந்தமற் றென்றுய் விகற்பமற் றறிவா யழிவிலாப் பரம் பொரு ளிருக்கப், பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார் பாவனை விகற்பமே யனைத்துஞ், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந் திடன் முத்தியா மநத்தின், சொந்தலீ லையினுற் றூரமா மணித்துந் தூரமு மண்ணிதாய்த் தோன்றும். 2

கருத்தின்வல் லமையாற் கற்பமோர் கணமாங் கணமொரு கற்பமா மிவற்றைத், திருத்தமா யுணர்த்து மொருகதை யதனுற்

செகமெனு மிந்திர சாலங், குருத்துவ மான மநத்தினு ளிருக்குங் கொள்கைதோற் றிடுமென வுரைப்பா, ஞெருத்தனிங் கரிச்சந் திரகுலத் துள்ளா னுத்தர பாண்டவ நாட்டோன். 3

செந்திரு வாணி புகழ்மகன் விந்தை செறிபுயன் லவணனும் பெயரோன், மந்திர நிறைந்த வமைச்சர்தற் சூழ மணிகொள்சிங் காதநத் திருப்ப, விந்திர சால வல்லவ ஞெருவ னெய்தின னிறைஞ்சிநின் றேத்திச், சந்திர னனைய பீலிகை யேந்தித் தராபதி காண்கெனச் சுழற்ற. 4

சுத்தமாம் பரத்தாற் பலவித சிருட்டி தோற்றிட மாயைதோற் றுதல்போற், சித்தனுற் காட்டிச் சுழற்றுறு பீலித் திகிரியை மன் னவன் பார்த்தா, னத்தலந் தனிலே சைந்தவ தேசத் ததிபதி விடுத் தவோர் தூதன், றத்துறு புரவி யொன்றுகொண் டெய்திச் சதமகன் பரிக்குநே ரென்று. 5

மன்னவ வுனக்கென் றெங்கள்கோன் விடுத்த வயப்பரி யென் றலுஞ் சித்த, னின்னது போல்வ தில்லைநீ யிதனி லேறுவா யென் றன னினையோன், சொன்னவை கேட்டுச் சித்திரம் போலத் துரகமே நாட்டமாய் வேந்தன், கன்னலீ ரிரண்டங் கிருந்தன னறிஞர் கவலைதீர் சமாதியுற் றென்ன. 6

வேத்தவை யிருந்தோ ரையமும் வியப்பு மிகுந்தன ரரும்பிய கமலப், பூத்திர ளோடை போற்குவிந் திருந்தார் போதமோ ருபா தியோ டலைந்து, மூர்த்தமோ ரிரண்டு சென்றபின் றவிசின் முன் னுற வீழ்வுறு நின்ற, பார்த்திபன் றன்னை யயலுளோர் தாங்கப் பாந்துழன் மநந்தெளிந் துணர்ந்தான். 7

அனையவன் றன்னை யமலநெஞ் சினைநீ யயர்வுற வந்ததென் னென்ன, வினையமந் திரியர் வினவலும் வேந்தன் விழித்திது கேளுமென் றுரைப்பான், றுனையுறப் பீலி சுழற்றியச் சித்தன்

சொல்விட மயங்கியிப் பரிமே, னினைவுற வேறி வேட்டையின் பொருட்டா னீணெறி கடிதுறச் சென்றேன். 8

அறிவறு மநத்தா லயர்வுறு போகத் தறிவிலார் மருண்டுபோ வதுபோற், செறிநெடுந் தூரம் பரியினுற் சென்று தீயினு லியா வையும் வெந்து, பொறியெழும் பாலை வநத்திலே புகுந்து புரவியு மியானுமெய் வருந்தி, யெறிசுடர் மேற்பா லெய்துறு மளவு மிடருற மயங்கிநெஞ் சிளைத்தேன். 9

குடும்பபா ரத்தை விவேகிகள் கடக்குங் கொள்கைபோற் பாலை யைக் கடந்து, நெடும்பணை நாவற் கடம்பெலு மிச்ச நிறைந்துபுட் குரலினு னிரம்பி, யிடும்பைதீர் சோலை யெய்தலு மாங்கோ ரிளங் கொடி பிணித்ததென் கழுத்திற், கடும்பரி யெனைவிட் டகன்றது கங்கை கலந்தவர் பாவமே யென்ன. 10

கழுத்துறு கொடியா லூசல்போற் றூங்கிக் காவுறை தென்ற லாற் குளிர்ந்து, முழுத்திற மோகத் தழுந்திநெஞ் சயர்ந்தேன் முழுக்குநற் பூசனை நியமம், விழுத்தகு நல்லூ ணின்றியே நிசியாம் வீண்பொழு தணையவப் பொழுதிற், பழுத்தவல் லிருளுந் துன்பமுங் குளிரும் பல்லறை யோசையுந் துணையாய். 11

மநத்திரு ளகற்று மறிவுபோ லந்த வல்லிரு ளிரவிவந் தகற்றப், புனைத்துறு கொடியை யறுத்தவ ணிறங்கிப் பொழில்புகுந் தொரு வரைக் காணேன், கனத்ததோர் பகலி லெட்டிலொன் றுன கடிகை யங் ககன்றதற் பின்ன, ரினத்தலா ளொருத்தி தன்னைமுன் னெதிர்ந்தே னிரவினை மதியெதிர்ந் தன்ன. 12

கருகிய நிறமுங் கருநிறத் துகிலுங் கைத்தலத் தந்நமு மாகி, யருகுவந் துறலும் பசிப்பிணி யாற்று தவளைநா னன்னமே யந்நந், தருதியென் றிரந்தேன் பசியினு லெவர்க்குந் தாழ்வுவந் துறுமெனல் கண்டேன், வருதவஞ் செயாதோர் விரும்பிய பொருட் பேறன் மற்றவ ளளித்தில ளந்நம். 13

சோலைதோ றுழலு மவள்பிற கேகிச் சோருமென் பசித்துயர் சொல்ல, நீலநின் றுரைப்பா ணீசர்கந் நிகையா ளினக்கென தந்நமா மென்னின், மாலையிட் டெங்கள் சேரியிற் பிதாமுன் வந்தெனைப் புணர்தியே லிந்த, வேலையி லளிப்பே னென்றலு மியைந்தேன் விருப்பொடு மளித்தன ளந்நம். 14

நல்கிய பாதி யந்நமு மருந்தி நாவலின் கனிச்சுவை பருகி, யொல்கிய துயர்போ யிருத்தலும் புறத்தி லுலாவுநல் லுயிரென வென்னைப், புல்கிய கரத்தாற் பற்றினள் பிதாமுன் போயினள் யாதநா சரீர, மல்கிய பயஞ்செய் நரகிலே கொடுபோய் மறுக்கமே செய்யுமா றென்ன. 15

நண்புறு மிவனென் னுயக னுக நல்கெனத் தாதையும் பொருந் திப், பண்புற விருவர் தமையும்வே தாள் பந்தந வநத்தினின் றகன்று, கண்புகத் தோன்றுங் காலதூ தரைப்போற் கருநிறத் தவன்கொடு போகி, யுண்புலால் வீசுஞ் சேரியி லடைந்தா னொருப் படு மணஞ்செய்வா னுன்னி. 16

வாநரம் புரவி குக்குடங் காகம் வராகமென் பனவரிந் தெடுப்ப, வூனரம் புணங்கப் பறவைவீழ்ந் தலைப்ப வுலவிய சிறுவர் கைத் தசையி, லீனவீ யிரைப்ப வுதிரமு மென்பு மெல்லையில் சேரியி லெய்திக், காநரம் பைகளே நாட்டிய குடிலிற் கடிமணந் தொடங்கினர் களிப்பால். 17

மலிநவுன் றன்னுஞ் சிறுகனு ளேக்கி மருகனல் லவனென மகிழ்ந்தாள், கலியினுங் கறுத்த கூன்கிழ மாமி கடையர்மற் றியா வருங் கூடி, யொலிபடு பறைகண் முழக்கினர் மதுவு மூன்களுஞ் சமைத்தன ரவளை, நலிதரு பாவம் யாதநா சரீர நல்குமா றெனவவ னளித்தான். 18

கடியபா தகங்க ளுருவுகொண் டனைய கடையர்கல் யாணநா ளேழின், முடிதலு மவளோர் டெண்மதி கழித்தேன் மூகின்மூலை

பூத்தவன் வாணுள், கொடியதோர் விபத்து தருந்துயர் போலோர் குழந்தையை யளிக்கவக் குழந்தை, வடிவற வெந்த கட்டைபோ னிறத்து வளர்ந்தது மூர்க்கர்தம் மநம்போல். 19

பின்னர்மூ வாண்டிற் பேதைமை யளிக்கும் பிறப்பென வொருமகப் பெற்ரு, ளன்னவண் மீட்டு மாசையிற் ருேன்று மநர்த் தமே யென்னவோர் குழவி, தன்னையு மளித்தா ளிவரொடு நெடு நாட் டங்கினன் குடும்பபா ரத்தி, னின்னலா லவர்தா பத்திஞல் வருந்து மிடும்பையாற் சரைத்ததென் யாக்கை. 20

வெம்புறு மூப்பான் மெலியுநா ளந்த விந்தவெற் பருகுறு சாரற், பைம்புயன் மறுத்து மண்ணினீர் சுண்டிப் பசியிஞ லுயிரெ லாம் பதைப்பக், கொம்பொடு கொடியும் புல்லும்வெந் தெங்குங் கோடையாற் பொடிபட் வரனு, மெம்புதுக் கிளைஞ ரிறந்தவ ரநேக ரெங்கணு மேகின ரநேகர். 21

தனையரி லிருவர் தோள்களி லிருப்பத் தலையின்மீ தொரு வனைத் தாங்கி, மனைவியோ டேகி மெய்யெரி கொளுத்த மாய்வுரு தந்தநா டகன்ருேர், பனையடி நிழலின் மைந்தரை யிறக்கிப் பதைப் பொரு சிறிதொழிந் திருந்தேன், வினைநர கேறிப் பழவினை யோடே மேவிய வின்பம தென்ன. 22

வளைதரு மூப்பால் வழிவருந் துயரான் மைந்தர்க ளிருவரை யணைக்கக், களைகொலோ துயிலோ சாய்ந்தனண் மனைவி கண்டுளங் கரைந்துநா னிருந்தே, னிளையவன் றுயிலா தென்மடி யேறி யிருந்துநீர் சொரிதர வழுது, விளைபசி யாற்றே னுதிரமு மூனும் வேண்டுமிப் போதுதா வென்ன. 23

இட்டமா மிளவ லென்னெதிர் பதைப்ப வென்செய லேதுமற் றுயிர்போய்க், கட்டைபோ லிருந்தேன் விடாதவ னழுத கண்ணி னீர் கண்டறக் கரைந்து, மட்டிவன் வாரா னென்றுயிர் விடுவான்

வனக்கனல் வளர்த்ததில் வீழக், கெட்டிகின் றுகைத்தே னிர்தவா
சநத்தின் கீழ்வுற வீழ்வுறு மளவில். 24

தாங்கினீர் பலருஞ் சயசய வென்னத் தாக்குறு பல்லிய
முழக்க, வீங்குணர் வுற்றே னீசனன் ருகி லவணனு மன்னவ
னுனேன், றீங்குறு சித்தன் செயலின்மோ கித்தேன் சீவனுக்
கவத்தைக ளநேகம், பாங்குற வுளவென் றறிந்தன னென்று பகர்
வுழி யொளித்தனன் சித்தன். 25

இருந்தமர் திரிகள் சித்தனன் றிவனென் றேற்றில னிமைப்பி
னுண் மறைந்தான், பொருந்திய வுலக மநவிரி வென்றே புலப்
படக் காட்டுவான் விடுத்த, திருந்திய தெய்வ மாயையீ தாகுஞ்
செப்புமிச் செயலினுற் றீரப், பெருந்தகை பரத்தின் விகாரமே
மநமாம் பேருல கென்றன ரென்ருன். 26

### 3—8. சித்தன் கதை முற்றிற்று

ஆக விருத்தம்—445.

---

## 3. உத்பத்திப் பிரகரண இதோப தேசம்.

ஆயம நத்தின்செ யல்செயலா மதனு லொழிந்ததொ ழிந்துளதா
மேயம நத்தின் லைவொழித்தோர் மிகவு நல்லதி யாநத்தோர்
தூயம நமாயி டில்வெற்பாற் சுழலாக் கடல்போற் பிறப்பிறப்பா
மாயைம யக்கங்கெ டுமென்னு வசிட்டன் மீண்டுமு ரைசெய்வான். 1

தளையா கிற்கும் பலபோகச் சங்கற் பஞ்சேர் மநவிருத்தி
முளையால் வளரு மாமாயை மோக மென்னு நச்சுமரம்
விளையா நின்ற மநநோய்க்கு மேலோர் விதித்த பரிகார
மிளையா தெளிதா யதனுலே யியற்ற லாகு மிதுகேட்பாய். 2

மிகமா னுறுபல் பொருள்களையு மேவா தொழித்தோர் மநம்வென்றோ
சுகமா யெளிதாய்த் தனக்குரித்தாந் துயர்தீர் நிராசை யறிவரியோர்[ர்
சகமார் மனித புழுவொப்பார் சான்றோ ருரைத்த நூற்பழகி
யகமா நினைவு தீர்மநத்தா லயரு மநதைத் திருப்பிடலாம். 3

இரும்பா லிரும்பு திருந்துவபோ லியற்று மநத்தான் மநந்திருந்துந்
திரும்பா நிராசை வடிவாகிச் செறியுந் தன்னு லியற்றுவதாய்
விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்ய மநத்தி னுபசாந்தி
பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு நன்றுகா. 4

வாவும நத்தைய சங்கற்ப வாளா லறுக்கினி றைந்தெங்கு
மியாவும துவாம்பொ ருடோன்று மிந்த வழிநின் றறிவாலே
மேவும நதைவி ழுங்கியதின் மேலா மாயாவி கற்பமெலா
மோவும தியால றிவுகடந் துளத்தை விழுங்கும் பொருளுணர்வாய்.5

வருந்தி முயன்று மநந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்னு
திருந்த பதத்தி லிருந்திடுவா யிடர்தீர் செல்வ மிடரின்றிப்
பொருந்த வேண்டு மநம்வென்றூற் புவந மூன்றுந் துரும்பாகுந்
திருந்த வினிதென் றனவெல்லாந் தீதாய்த் தோன்றின் மநமாளும்.

சித்த விண்ணிற் றிகழறிவாந் தியாநத் தாலே யறிவென்னு
மொத்த படையா லையமற வுளத்தை யறுப்பா யறுத்ததற்பின்
மெத்து துயர்போ மவனிவனென் மேவு மென்ன ததுவிதுவாய்
வைத்த விவையே மநமிதனை மறப்பாம் வாளா லறுத்திடுவாய். 7

பெருகத் திரண்ட முகிலெல்லாம் பெருங்காற் றாலே யொருவுதல்
வருகற் பனைநா சத்தாலே மநம்போ யிறக்கு மநமிறந்தாற் [போல்
பொருகற் பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்து
முருகச் சுடுபன் னிருகதிரு மொருகால் வரினு மிடருண்டோ. 8

தன்னைக் கொண்டே தனையறுக்கிற் றுனுய்ச் சகல பூமிக்கு
முன்னைத் தலைமை போலின்ப முதிர நிறைந்து வகற்பனைக்கே

துன்னித் திகழ்தற் பதம்பற்றிச் சுகத்தை யடைவாய் பலவாக
வுன்னிப் படர்கற் பனைச்செல்வ முடைய மநமே யுயிர்ப்பகையாம்.9

உள்ளப் பகைவன் பலவிதமா யுறுகாட் சிகளால் வெல்லாமற்
றெள்ளத் தகுசந் தோடமெனுஞ் செல்வ முடைய நிராசையினாற்
கள்ளத் தணிநெஞ் சினைவெல்வாய் கற்றோர்க் கன்பாய் நிர்மலமாய்க்
குள்ளக் குளிர்ந்தாங் காரத்தாற் கூறா காது சமபாவம்.　10

தாழ்வு முயர்வு மில்லாத சமபா வனையாற் பிறப்பில்லா
வாழ்வு நல்கும் பரமபத மாறாப் பதமா மலைவாலே
வீழ்வு றாத மநமரிதாம் வெம்மை கனலை விடாததுபோ
லாழ்வு செய்யு மலைவுமந மகலா வறிவி னலைவுமநம்.　11

அலையு மந்த மநமுலகா மலைவு போகின் மநங்கெடுமிந்
நிலையே தவமு நூற்கருத்து நிமல வீடுந் துணிபொருளுந்
துலைவி லலையே மநமாயை தொடர்வா தனையு மதன்பெயரா
மலையு மநமு மதுவதனை மாறா விசாரத் தான்மாய்ப்பாய்.　12

மெத்து கின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ்
சத்தி னசத்தி னிடைநின்று சைதந் நியத்திற் சாட்டியத்தி
லொத்து நடுநின் றலைவதுவே யுள்ள மாகு மிவ்வுள்ளஞ்
சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும்.13

ஊக்க முளதாய் மநமொன்றி லுறைக்கி லதுவா மாதலினாற்
றாக்கு மநத்தை மநத்தாலே தள்ளி யேறித் தளர்வின்றி
யாக்க மழிவில் பதம்விரைவி லடைவாய் மநத்தை மநத்தாலே
நீக்க வலதாந் தகைமைத்தா நிருப னிறுத்து நெறிபோல.　14

பிறவிக் கடலிற் காதலெனும் பெருவாய் முதலை பிடித்தீர்க்க
விறவுச் சுழியாற் சுழலுமவர்க் கிதய நாவா யெட்டாவா
மறமுற் றுளத்தை யுளத்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாம
லுறவுற் றனைநீ யுய்விப்பா யுயிர்க்குப் பிறரா லுய்வுண்டோ.　15

எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்த வவையெல்லா
மந்த வந்த விடத்தழிக்கி லதுவே மாயைக் கழிவாகு
முந்து போக பேதமென மொழிந்த விருவா தனைவிட்டு
வந்த பாவா பாவங்கண் மாற்றி விகற்ப மறமகிழ்வாய். 16

வேறு.

அறிபவற் றுசை யறிலது தானே யவித்தையு மாமுமாண் டது வாம், பொறிபயி லாசை துன்பமா நிராசை புகலரு முத்தியா மின்பம், பிறிவறு தனது முயற்சியா லுண்டாம் பேதைய ருண் டெனு மவித்தை, செறிதரு பொய்யாய் நாமமாத் திரமாய்ச் சித் தெனத் தேர்ந்திடி லிலதாம். 17

என்றலு மிராம னவித்தையின் செல்வத் தெழுந்தற நெருங்கு மிவ் விருடா, ஞென்றமிங் கின்றி யெவ்வகை நீங்கு முரைத்தரு ளின்னநீ யென்ன, வன்றவ னுரைப்பான் வன்றுயர் முட்சேர் வன்பவக் குழியின்மன் னுயிரை, யொன்றவீழ்த் ததனே டொக்க வீழ் மாயை யுண்டெனி னுண்மைநோக் கில்லை. 18

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும் பிறிவறு பெரும் பொரு டோன்றி, விறப்புறு மாயைக் கிச்சையே வடிவா மிதனுடை நாசமே வீடு, சிறப்பில்சங் கற்பஞ் சிதைந்திடி லிதுதான் றேய்ந் திடுஞ் சித்தெனுங் கதிரோன், புறப்படி லிதய விசும்பில்வா தனை யாம் பொங்கிருள் போமெனப் புகல. 19

கண்டன வனைத்து மாயையே யென்றாய் கண்ணெனுந் தத்து வத் தாலே, தண்டற வதுதான் கரைந்துபோ மென்றாய் தத்துவ மாவதே தென்ன, வெண்டவ னுரைப்பான் காண்பவற் றிடைசென் றெய்திடா தெங்கணுஞ் சமமா, யுண்டென லாகி நாமமற் றுயர்ந்த வுணர்வுதற் பரமமா முணர்வே. 20

இவையெனு மனைத்துஞ் சிற்கந மாகி யிறப்பிலாப் பிரமமே யென்று
நவையுறு மநமாங் கற்பனை யில்லை நாசமும் பிறவியு மென்னு

மவையெலாம் புவந மூன்றினு மில்லை யறுவகை விகாரமு மில்லைக்
கவையறு சமமாங் குறிபெறு மறிவு மாத்திரங் காணநின் றுளதால்.

கேவல மாகிக் கேவல வொளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவா
யோவலி லறிவு மாத்திர மாகி யுறுதுய ரொன்றுமற் றூறி
மேவரு மிரத மனைத்தினுக் கொத்து விகாரமற் றுளபொருளிடத்தே
தாவறுந் தனது நினைவையே விரும்பித் தன்வயத் தெழுந்ததோ
ரறிவு. 22

செப்பிய வறிவு முடிவில்சங் கற்பஞ் செய்ததிற் சென்றிடு மிதுதா
ணிப்பிர மத்தின் மநமதா மிதனுக் கெண்ணில்சத் திகளுள வாகுங்
கப்பிலா தெங்கு நிரந்தரஞ் செய்யுங் கடுமையா மிம்மநந் தனிலே
யப்பிலே தோன்றுந் திரைகள்போற் பேத மாகிய வல்லபந் தோன்
றும். 23

உள்ளுறு சங்கற் பத்தினற் றேன்று முள்ளமற் றதனினு லொடுங்குந், தள்ளுறு காற்று லெழுந்தநீக் கொழுந்து சமிப்பதுங் காற்றினாற் போல, நள்ளுறு பிரம மன்றுநா னென்று நாடுதன் மநத்துறு பந்த, மெள்ளுறு மிடமும் பிரிவிலாப் பொருளே யாமெனு மழுத்தமே வீடாம். 24

மடமையுந் துயரு மவயவ நிறைந்த வடிவமு முடையனு னென்றே, படர்தரு மவற்றிற் கேற்றபன் னடையாற் பாசமும் பந்தமு முளதாஞ், சடமுறு மிவற்றி லேதுமொன் றல்லேன் றசை நரம் பென்புநீ ரல்லே, னுடலின்மே லான பரமநா னென்னு முறுதி யோர் மாயைசெற் றுணர்ந்தோர். 25

தானலா தான வுடன்முதற் பொருளிற் றனெனும் பாவனை யாய, வூனமா மாயை யுணர்விலோர் விதிக்க வுள்ளதா முணர்வு ளோர்க் கிலதா, மாநத நினைத்த தைம்பொறி யியற்று மன்னவர்க் கமைச்சர்போல் விரைவி, லானநன் மதியான் முயற்சியாற் போகத் தாசைவா தனையவே ரறுப்பாய். 26

என்னுடை மைந்த ரென்னுடை நிதிநா னிவனவ னிதுவது வென்னு, மின்னுடை நிலைமை யிந்ரசா லத்தால் வீங்கிய வாதனை யோங்கும், நன்னுடை நிலையஞ் ஞானமா நிலைபோய் நாசமா யையிற் கருத் தொழிவாய், நின்னுடை வடிவி லவற்றைநீ யென்றே நினைவி லார் போல்வருந் துவதென். 27

மூகமாய்ச் சடமாய்ச் சுகாசுகங் களிலே மூழ்கியோர் பயனற வருந்துந், தேகமார் நீயா ரகோவகோ வீதோர் சித்திர மிருந்தவா காணு, யேகமாய் மெய்யா யிலங்கிய பிரம மெங்குமா யிருக்கவுந் தோன்றாச், சோகமாய்ப் பொய்யாய் விளங்குறு மாயை தோன்றுறா திருக்கவுந் தோன்றும். 28

படிகநன் மணிகள் பற்றிபாய் நிறங்கள் பற்றறப் பற்றுறும் படிபோன், முடிவறு தொழிலிற் பின்விருப் பின்றி முடித்தியென் றருந்தவ வசிட்ட, னெடிதுரைத் தலுமே பாத்துவ கேசனாய் நிறை குணத் திராகவன் கேட்டு, மடியறு விதய பங்கய மலர்ந்து வசிட் டனை நோக்கியீ துரைத்தான். 29

அற்புத மீதொன் றிருந்தவா றென்னே யம்புய ஞாளனு லாலே, வெற்பினம் பிணிப்புண் டறநெரி வதுபோல் வெறும்பொய் யா மாயையா லுலகம், பற்பல துயரம் பயில்வதாந் திரணம் பருவயி ரத்தின்வன் புறல்போ, லுற்பவ மிலங்கு மதனினு லேற்கு முறுதி யை யென்றுமீட் டுரைப்பான். 30

ஈதுமோ ரைய மென்மநத் துளதா லியம்பிய லவணனு மன்னன், மாதுய ரடைந்த தென்னெனக் கேட்ப வசிட்டமா முனி யதற் குரைப்பான், றீதகன் மநத்தா லியற்றலா லந்தச் செயல்பய னுடல்புசித் திலதா, லோதுறு மந்த மன்னனோர் நாளி லுபவநத் தொருவனு யிருந்து. 31

இருதயத் துணர்வான் பிதாமகன் குருவா மிராசசூ யஞ்செய் வோ மென்னுக், கருதிய மநத்தான் மகத்தினுக் குரிய கலப்பைக

னனைத்துமுண் டாக்கிச், சுருதிநூல் வழியே சாலையிற் புகுந்து துறவரை வரித்தருச் சித்து, வருதிரென் றிமையோர் களைமறை மொழியால் வரவழைத் தாரழல் கிளப்பி. 32

கடவுளர் முநிவர் மறையவர் பூசை கடைப்பிடித் தாரொரு வருடங், தொடர்புற நடத்தித் தன்பொருண் முழுதுந் தொலைவுறத் தாநமா வழங்கித், திடமுறு மநத்தான் முடித்தபின் பகலுஞ் சென் றது விழித்தன னிதனு, லிடவிய மநமே துன்பவின் பங்க ளெய் துறப் புசிப்பதென் றுணர்வாய். 33

சித்தன தியல்பு செப்பிடக் கேண்மோ திருந்திய லவணன் முன் னெய்தி, வித்தையான் மயக்கஞ் செய்துள சித்தன் மீண்டு போ யொளித்தன னுங்கே, யித்தனை செயலுங் கண்டட னிருந்த வெம்மைபீ தென்னென வினவ, வத்திறல் வேந்து மியாவருங் கேட்ப வகத்துணர்ந் துரைத்தன மனைத்தும். 34

ஈங்கிது புகல விராகவ கேட்டி யிராசசூ யத்திலே லவணன், பாங்குறு மநத்தாற் றெருகுத்தவா யாரும் பன்னிரு வருடம்வன் றுயரிற், றீங்குறு வருத்த முறு தலான் மகவான் சேணினின் றொரு வனை யேவ, வாங்கவன் சித்த ஞகியே லவணற் கருந்துய ரளித்து மீண் டகன்றான். 35

மற்றுமொன் றுரைக்க வள்ளலே கேட்பாய் மடமையாம் பூமி யேழ் பதமா, முற்றுள ஞாந பூமியேழ் பதமா மொழிந்தவிப் பதங் கடம் மிற்றும், பற்றுள வாகு மொன்றொடொன் றளாவிப் பயில் வன பதங்கண்மட் டிலவா, மற்றமில் சொரூப நிலைபெறல் வீடா மதினமு வுறுதனு னெனலே. 36

அடக்கமா யுரைத்தே மஃதறிந் தவர்க்கு மறிகிலா தவர்க்குநற் குறிக, டொடக்கமில் சன்மார்த் திரமதா மறிவின் சொரூபநின் றசைவிலர் தவரே, விடற்கருங் காம முதற்பகை கடந்தோர் மெய்

யறி விலார்கடப் பரியோர், நடக்குறு காட்சி விதத்தில்வீ ழறிவே
நோக்கருஞ் சொரூபத்தி னழுவல். 37

சொருபம்விட் டகலன் மோகமாம் வேறு சொல்லிட முன்பு
பின் பில்லை, யொருபொரு ணினைவை யொழித்துமே லப்பா லொரு
பொரு ணினைவுறி லந்த, விருபொரு ணடுவு ணினைவற விருக்கு
மிதுசொரு பத்தியல் பிதுதான், மருவுகற் பனைமாண் டசைவில்கற்
போலாய் வருநனுச் சுழுத்திநீர் வடிவாம். 38

நானெனும் பிரிவும் பேதமு மற்ற நல்லறி வாயசை யாத
மாநத நிலையே சொருபமா முன்சொன் மடமையாம் புவிபதங் கேட்
டீனமாம் விந்து நனவுமே னனவு மியன்றமா நனவுமங் நனவி [பா
லானதோர் கனவுங் கனவுமிக் கனவி லடர்நனு வுஞ்சுழுத் தியுமே. 39

இத்திற மேழு மோகமாய் நெருக்குற் றிவைபல பெயர்களை யெய்துஞ்
சித்திலே நின்றோ ரறிவுபே ரின்றிச் செறிமல மின்றிமேல் வந்து
வத்தியா நிற்குஞ் சித்தசீ வாதி வருபெயர் செயல்களுக் கிடமாய்
வித்துரு பமதாய் நின்றிடு மதனுல் விதைநன வாமுதற் பதமே. 40

இதுவறி வுக்கு முதலவத் தையதா மிதத்துறப் பிறந்தபின்
னிவனு, னிதவென தெனப்பண் டிலாமையா னுய்தா யெழுந்
துள வறுதியே நனுவா, மிதுதனை யொழிய விவனவ னுனே யிது
வது வென்னதென் றெண்ணு, மிதுமுதற் பிறப்பிற் றொடர்ச்சி
யாய்ப் பருக்கு மிந்தநிச் சயம்பெறு நனுவாம். 41

அறிந்துள தெனினு மறிகிலா தெனினு மழுந்துறத் தானது
வாகிச், செறிந்துள நனவிற் சித்தராச் சியமே செய்வது நனுக்கனு
வாகு, மெறிந்தகா னலினீர் சுத்திகை வெள்ளி யிருமதி யிவைமுதற்
பலவாய்ப், பிரிந்தபே தங்க ணனவிலே பழகும் பெற்றியாற் கனவு
பல் விதமாம். 42

அற்பகா லத்தி லநேகமாஞ் செயல்கண் டறிந்தன மெனுங்
கந வழிந்து, முற்படு செயலை நினைவது கநவா முந்துகண்
டதனைநா ளகன்று, பிற்படக் காணும் பொருள்களை மறந்து பெரும்
பொழு துணர்வுற நோக்குஞ், சொற்பந நநவு போனந வுக்கே
தோன்றுமிச் செயல்கநா நநவே. 43

அறுவகை யவத்தை யகற்றிய சீவ னடைந்துள வவத்தையி
னியற்கை, யுறுசட மாகி மேல்வருந் துயர்கூ ருணர்வுள தாமிது
சுழுத்தி, துறுபுவ நங்க ளிதனிடை யிருளிற் றொலைவுறு மிப்பத
மேழும், பெறுவன பேத மொன்றுநா ருகும் பேதைமை யவத்தை
யிவ் வேழும். 44

வேறு.

ஞாநபூ மியைமுடிவிற் பேத மாக நவிலுவர்வா தியர்வற்றி
னமக்கு நல்ல, தானதிவை யிவையறிதன் ஞாந மாகு மறிந்தவிவற்
றந்தமே யழிவில் வீடா, மானமுறு சுபம்விரும்பல் விசார மெய்தன்
மநஞ்சிறுக லுண்மையிலே மன்னி நிற்ற, லீனமறு சங்கற்ப மறல்ப
தார்த்த வெண்ணமறுத் திடறுரிய மிவையே ழாகும். 45

இவையறிந்தோர் மோகமெனு மளற்றில் வீழா ரிவற்றியலா
முத்திவரி விடர்மீண் டில்லை, நவையுறமோ கத்தொடுநா மடைவ
தென்னே நல்லோரா னன்னூலா னன்று ஞாநச், சுவைபெறுது
நிராசையினு லென்று நாடல் சுபம்விரும்ப லாகுமிந்தச் சுபேச்சை
முற்றிக், கவையறுநல் லோரியற்கை யாசா ரங்கள் கைவருதல்
விசாரமாக் கருதல் வேண்டும். 46

இனையசுபம் விரும்பலொடு விசார மென்ற விரண்டுநிறை
தலும்விடயத் திச்சை மாற்றி, நினைவுகுவி வதுசித்தஞ் சிறுக லாகு
நிகழ்த்தியவிம் மூன்றாலு நெஞ்சந் தன்னில், வினைதருமவ் விரத்தி
யினு லுண்மைப் போத மன்னுதலே யுண்மைநிலை மருவ லாகு,

மனையனவிந் நான்காலு முண்மைப் போதத் தழுந்தியயற் சங்கமற் லசங்க மாகும். 47

அறைந்தபத மைந்தாலுந் தானும் போதத் தழுந்தியவின் பத்த மைவாற் புறனு முள்ளு, முறைந்தபதார்த் தங்கண்மறந் தயலோர் வன்பா லுணர்வதுவே பதார்த்தநினை வொழித லாகு, நிறைந்த விவை யாறுலும் பேதம் போக்கி நிலைபெறுதற் சுபாவத்தே நிற்ற றேனே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகு மாசறுசீ வனின்முத்தர் வழியீ தாகும். 48

சொன்னதன்மே லுடலிறந்த முத்தர் மேவுந் துரியாதி தப்பத மாந் துரியச் செல்வந், தன்னுணர்வாற் றனையறிந்த பெருமை சான்ற தலைவனு லெய்தலுறுந் தன்மை யாகு, மன்னியவிப் பத மடைந்த சீவந் முத்தர் மகிழ்ச்சிமறுக் கத்தழுந்தா மரபி னுலே, யந்நியர்சொல் வழிதுயில்விட் டெழுந்தார் போல வடுத்தனசெய் குவர்செய்யா ராகி வாழ்வார். 49

இஞ்ஞான பதமேழு மிகவும் புந்தி யெய்தினர்க்கல் லது தோன்று விவற்றை யெய்தி, லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகி யதேகியெனி னும்முத்த னைய மில்லை, மெய்ஞ்ஞான மென்பது தான் மநத்தின் கட்டு விடுதலிது பெறிலிதுவே வீடு பேறும், பொய்ஞ்ஞானக் கானலினீர் முதலா மோகம் பொய்யெனப்போ மடமையும்பொய் யென்னிற் போகும். 50

தனையறியு நிட்டையுளோர்க் கெய்த லாகுந் தத்துவபூ மிக ளறிந்த தலைமை மேலோர், நினையவுந்தா ழவுமுரியார் பொறிக ளென்னு நெடும்பகைவென் றேரழியா நிலையி னின்றோர், துனை தருபல் லுயிரிறைஞ்ச மேலாய் வாழுஞ் சுரேந்திரரு நரேந்திரருந் துரும்பாய்த் தோன்று, மனையபெரும் பதம்பெற்றோ ரவரே யாகு மல்லாதோர் பவக்கடலி லமிழ்ந்தா நிற்போர். 51

உளமொடுங்கு முபாயமே யோக மாகு முணர்வுறுபூ மிகளிந்த வுபாய மாகும், வளமிகுமிப் பூமிகளா லன்றி யிந்த மாதேவ பெரிய பத மருவ லாகா, வளவறநீ நான்முன்வே ளுென்று மின்றி யபேதமா யநாமயமா யமூல மாகிக், கிளர்சுகமாய்ச் சாந்தமா யறிவா யொன்ருய்க் கேடின்றிப் பெயரின்றிக் கீழ்மே லின்றி. 52

பாவனையு மபாவனையு முதலு மீறும் பற்றுமுள தும்மிலதும் பலவுந் தேசு, மேவறிவு மடமையுமென் றிவைக ளின்றி விண்ணிலே யிருப்பதாய் விசால மாகி, யாவதுமா யன்ருகி மநத்தால் வாக்கா லெட்டரிதா யின்பத்தி லின்ப மாகி, யோவரிய நிறைவினிறை வாகி யாசை யொழிவிடமாய்த் தன்ளுற்ற னுணரு மொன்று. 53

வேறு.

எழுவகையாம் பூமியினுற் பெறும்பிரம மிதுமாயை யேற்றங் கேண்மோ, விழுமமுறு லவணன்ருன் மெய்ம்மறந்து முன்கண்ட விந்தச் சாரற், பழுவமநக் கண்ணுடி பயில்கின்ற வுடலொடும் போய்ப் பார்க்கிற் கண்ணிற், றழுவுறுங்கொ லெனுமமைச்ச ருடனெண்ணித் தானையுடன் சமைந்து போனுன். 54

தென்றிசைசென் றனன்மீட்டுந் திக்குவிச யஞ்செய்யச் செல்வான் போல, முன்றிகழும் விந்தகிரி முற்பட்டான் வடக்கொழிந்த மூன்று திக்கிற், றன்றிவளர் வநமெல்லாஞ் சுற்றிஞு னனிநொந் தான் சூழ லொன்றி, லன்றுகரு தியகருத்து வடிவெடுத்த தெனப் பழைய வடவி கண்டான். 55

காலனகர் நிகராமக் கடியவநத் துலாவுதலுங் கடையர் செய்கை, போலவன்முன் சஞ்சரித்த தலங்களுமச் சேரிகளும் பொருந்தக் கண்டான், சாலவியந் தானந்தக் கடையர்கடைச் சியர்குடில்க டப்பா வண்ண, ஞாலநர பதிநோக்கி வியப்பிஞன் மநமயக்க நண்ணி நின்ருன். 56

கருத்தயருந் துயர்கரைப்பக் கண்கரைந்து மெய்கரைந்து கதறு நின்ற, விருத்தையர்தங் கூட்டத்தின் மிகமெலிவால் வாய் விட்டு விம்மி விம்மி, யொருத்திமுத னளிறந்த தன்கிளைஞர் பெய ரெல்லா முரையா நின்று, பெருத்தநெடுங் குரலாலே யிவ்வாறு புலம்பினாள் பேத மாக. 57

மாறுன விதியாலென் மடிவிட்டு மடிந்துபோ மைந்தர் காளோ
வேறுகி யெத்தூர மேகினீர் யார்முகத்தே விழிக்கின் றீரோ
கூறுன செங்குன்றின் மணிமாலைத் தோளாலே குளிரப் புல்லி
யாறுத வென்னெருப்பை யாற்றுவா யோமகளே யந்தோ வந்தோ.

முன்னஞ்செய் தவத்தினற் றேடாத மாநிதிபோன் முன்வந் தெய்திப், பொன்னனார் நின்குலத்தோ ரவர்மயல்விட் டென் மகளைப் புணர்ந்து வாழ்ந்த, மன்னனு மருமகனே மறந்தனையோ மதிமுகத்தை வந்து காட்டாய், *பின்னைநா யகவுனக்கென் பேதை செயுஞ் சிறுபிழையாற் பேதித் தாயோ. 59

வன்பிறவிப் பேராற்றில் வல்வினையா குந்திரைகள் வந்து கூடித், தன்பிறவி யரசியற்கை தவிர்ந்தெமது தையலுக்குத் தலைவ னுகிப், புன்பிறவிப் புலையரைப்போற் பூதலத்துப் புரந்தானும் புன்மை பூண்டான், மின்பிறவி நிற்கரிது மிகக்கொடிது மிகக் கொடிது விதியே யென்றாள். 60

என்றழுது வவள்புலம்பி யிசைத்தவெலா நனிகேட்ட லவண னுங்கே, நின்றுளதன் சேடியரா லவடுயரந் தனையாற்றி நேயத் தோடுங், கன்றியநின் னிடரேது நீயார்நின் மகளார்நின் காத லோரா, ரொன்றுமொழி வறமொழியென் றிவன்வினவப் புலைக் கிழத்தி யுரைப்ப தானாள். 61

* பிந்த முறும்படி என்றும் பாடம்.

ஈதுபுலைச் சேரியிதி லொருபுலைய னென்கணவ னிவனுக் கிங்கோர், மாதுபிறந் தனளவளை யிந்திரன்போ லொருமன்னன் வந்து சேர்ந்தான், போதுநெடும் புணர்வித்த விதியாலே யவண் மூன்று புதல்வர்ப் பெற்று, ளோதுறுநல் வினைபோலத் தீவினைவந் தென்கிளைஞ ரிறந்து போனர். 62

நெடுங்காலம் வாழ்ந்ததற்பி னீலமுகிற் றுளிவறண்டு நிலனீர் சுண்டிக், கடுங்கால னிகர்கலியாற் றிசைதிசைபோய்க் கடைய ரெலாங் கழிந்து போனர், நடுங்காரின் றனதுயருந் தனிமையுமே துணையானே னாங்க ளென்ன, வடுங்கால வேல்வேந்த னமைச்ச ரைப்பார்த் ததிசயித்தா னவச ஞகி. 63

வேண்டுவன கொடுத்திவளை வெந்துயர்தீர்த் தந்நகரின் மீண்டு மேவி, நீண்டவுல கத்தியல்பு மாயையின்வல் லபமுமவ னெடிது கண்டான், காண்டகைய பரம்பொருளு நாமுரைப்ப வறிந்தமைந் தான் கருணை வள்ளா, வீண்டியவிம் மாமாயை கடப்பரிய வன் மோக மியற்றுங் கண்டாய். 64

இலதுளதா முளதிலதா மிம்மாயை வல்லபத்தா லென்ன லோடுங், கலநமுறு சொற்பநத்திற் கண்டதெலாஞ் சாக்கிரத்திற் கண்ட தென்னே, குலமுநிவ வெனக்கேட்ட வள்ளலுக்கு முநி யுரைப்பான் கொடிய மாயை, யலகறுமோ கம்புரியுங் காதிகதை யாலிதுமே லறிய லாகும். 65

காகதா லீயம்போல் வாதனையின் வசத்திலுளங் கலந்து நிற்கு
மேகமுறத் தம்மிற்று மென்றுணர்வி னிலைநின்றே ரியம்பா நிற்ப
ராகலினுன் முன்னுளிற் சித்தனுற் புலைச்சேரி யாகக் கண்ட
மோகமதே பின்னுளுங் கண்டதுவே றன்றுநா மொழிந்த வேந்தன்.

மன்னவன்கண் டௗகநவின் மதிமயக்கந் தன்னையே மலையின் சார, லன்னவரு நன்னினைவா லறிவுற்றூர் லவணனு மறிவின்

ரேற்றந், துன்னிவரு கடையர்மநங் களிற்ரேற்றக் கடைய ரெனத் தோன்றும் போத, மின்னரா பதிமநத்திற் ரேன்றியதான் மாமாயை யேது செய்யா. 67

தோன்றியவை விளக்கத்தா லுண்மையா மைம்பொறிக்குந் தொடர்பாய் நிற்கு, மான்றபதார்த் தங்களெலா மறிவிஞ லொழிந் துண்மை யாக மாட்டா, வேன்றறிவா னறிபொருளா மிரண்டி னிடை யறிவானுக் கியைந்த ரூப, மூன்றியறி பொருளறிவா னறிவிலிவை யுற்றிடுவ துயர்ந்த வீடு. 68

ஓரிடம்விட் டோரிடத்தே யுள்ளமுறி லவற்றினடு வுண்மை யாகிப், பேரிலதா யுணர்விலதாய்ச் சடமிலதா யதுரீயாய்ப் பிரியே லென்றுங், கூரியபுந் தியிஞலே யூகித்துக் குடும்பியெனுங் குறிப்பை மாற்றித், தூரியதாம் படிமநத்தின் றுவக்கறுத்து விருந்தபடி துணிந்து நிற்பாய். 69

பிறப்பிறப்பாம் பூட்டைதனைப் பிணித்துழற்றும் வாதனையாம் பெரிய பாச, மறப்பெரிய முயற்சியிஞ லறுத்திடுவாய் பரமமா மறிவின் முன்னே, புறப்படும்பொய் யாமுள்ளம் புவநவிகற் பங்க ளெனும் பொய்யைக் காட்டுஞ், சிறப்புளவிண் ணிலதாயு மிலதான நீலநிறஞ் செறிவ தேபோல். 70

சோகமுறு சங்கற்ப நாசத்தான் மநமாளிற் ரென்று தொட்ட
மோகமெனு மூடுபனி விட்டகலுஞ் சரற்கால முதிர வந்தான்
மாகம்விளங் குவதென்ன நல்லறிவு மாத்திரமாய் மாயா தாகி
யேகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பி லாப்பிரம மிலங்கு நொய்தாய்.

3. உத்பத்திப் பிரகரண இதோபதேசம் முற்றிற்று.

ஆக விருத்தம்—516.

---

# 4. திதிப் பிரகரணம்.

## 4—1. சுக்கிரன் (பார்க்கவன்) கதை.

எழுது வோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளு மிலதாகி
வழுவி லாத விண்ணிடையே வந்து தோன்று மோவியந்தான்
பழுதின் மேவுந் தனைத்தானே பாரா நிற்கும் பலபொறியு
நழுவு துயிலி னுலன்றி நனவான் மேவுங் கனவொக்கும். 1

கரியாய்ச் சமமாய் நொய்தாகிக் கலந்த விகற்பந் தீரறிவிற்
பரியா நின்ற வுலகமெலாம் பற்றி பாய்தல் கண்ணடியிற்
றெரியா நின்ற பொருள்போலாஞ் செறிகா ரணகா ரியமின்றிப்
புரியா நின்ற வுலகெல்லாம் பொலிந்து பிரமத் திடையிருக்கும். 2

சொன்ன வுலகங் களுக்குருவந் தோன்று நின்ற மாத்திரமாம்
பின்ன மின்றி யாவையுமாய்ப் பேரா வறிவாய்ப் பெருவிண்ணாய்
மன்னு பிரம மொன்றென்றே வருந்தி முயன்று பாவிப்பா
யன்ன நிலையே கைவந்தா லவைவற் றுள்ள மறிவுருவாம். 3

கீற்றுப் பலசே ரொருகற்போற் கிளருஞ் சகங்கள் செறிபிரமந்
தோற்றப் படுமா விரண்டென்னத் தொடர்கா ரணம்வே றிலாமையி
லாற்றச் சகமென் றொன்றிலதா மறிவே யுளதா மனைத்துலகுந் [ஞ
தேற்றப் பிரமத் திருக்குமிவை தெளிய வெள்ளி கதைகேட்பாய். 4

முன்ன மொருநாட் பிருகுமுனி முதுமந் தரமால் வரைச்சாரன்
மன்னு தவஞ்செய் யுழியவன்றன் மைந்தன் மதிமான் மதியனையோ
றன்ன தாதை கழற்பிரியான் றனிமெய்ஞ் ஞாந மஞ்ஞாந [ன்
மென்னு மிருபார் வையினடுவே யியங்கா நின்ற பெரும்பதத்தோன்.

செறியந் தரத்தே நிற்கின்ற திரிசங் குவைப்போற் சுக்கிரனு
மறிவோ டறியா மையினடுவே யமரு நாளி லவன்றுதை
பிறிவில் சமாதி யுறநிற்பப் பிரியா வெள்ளி தனியிருந்து
வெறிய விசும்பை நோக்குதலும் விண்மா தொருத்தி வரக்கண்டான்.

மந்தா நிலத்தா லசைகின்ற மந்தா ரஞ்சூழ் மலர்க்குழலா
டந்தா வளத்தின் பிடிபோலத் தனியே வரலு மெதிர்நோக்கிச்
சிந்தா வசனு யவள்வடிவைத் தியாநித் திருகண் முகிழ்த்திருந்து
முந்தா நின்ற வேட்கையினுன் முடிவின் மநோராச் சியமுயன்றுன்.

பொன்னுட் டணங்கே யிவளந்தப் பொன்னுட் டியானும் போய்ப்புகுந்தே, னின்னுட் டமர ரிவர்போற்ற வெழில்கூர் சிங்கா தநத்திலிவன், மின்னுற் செறியு முகிலென்ன வேந்தா மிவனைச் சூழ்ந்துமதன், றன்னுற் களிக்கு மரம்பையர்தஞ் சமுக மிவையென் றுளத்துணர்ந்து. 8

இமையோ ரிறையை யிவன்வணங்க விவனை யவனு மிறைஞ் சியபின், னமையா வின்ப விண்ணுட்டி லகலா துலவு மவ்வளவிற், சுமைவார் கொங்கை யரம்பையருட் சொன்ன வவண்முன் றேன் றுதலுங், கமையா வன்பாற் கண்களிப்பக் கண்டா னவளுங் கண் ணுற்றுள். 9

இருவர் விழியு நினைவுகளு மேக மாக வுறப்பற்றி
யுருகு மளவிற் சங்கற்பத் தொன்றும் பிழையா வுயர்வெள்ளி
கருகு மிருண்மூ டகவென்று கற்பித் திடலுங் கற்பாந்தப்
பருவம் போலு மிருள்சூழப் பலரு மகன்றுர் பலதிசையும். 10

அன்னு ளிவனை வந்தணைய வழகார் தருநீ ழலிலொருபாற்
றுன்னு முயங்கி யோருயிராய்த் துன்ப மில்லா வின்பத்தி
னன்னு ளாகச் சதுரியுக நாலு நாலு நடந்ததற்பின்
முன்னும் புரிந்த தருமமெலா முடியு முடியு மெனுங்கருத்தால். 11

விழுந்தான் புவந மண்டலத்தின் மெய்யை மறந்தா னிவன் சீவன், கொழுந்தார் மதியின் கலைசேர்ந்து குளிர்ந்த பனியாய் நெல்லாகிச், செழுந்தா ணெல்லைத் தசார்ண தேச மறையோன் சமைத்தருந்த, வெழுந்தா துவுமாய்ச் சுக்கிரன்வந் திவன்பா ரியை பான் மகவானுன். 12

அன்னுன் முனிவர் தொடர்ச்சியினு லரிய தவமோர் மநுக்
காலம், பொன்னுர் வரைசூழ் வநத்திடையே புரிந்தா னவனங்
கொருபெடைமான், றன்னு லொருசேய் நரவடிவாய்ச் சாத னுனு
னவனன்பாற், பின்னு நின்ற பேதைமையாற் பேரா வுண்மை நிலை
பெயர்ந்தான். 13

மற்று மளவில் பிறவிகளின் மருள்வா தனையாற் பிறந்திறந்து
முற்று முயர்கங் கையின்றடத்தோர் முனிவன் மகவாய் முனியானுன்
பற்று முயிர்போய் முதற்காயம் பவந லுலும் வெயிலாலும்
பெற்று வளர்த்த பிருகுவின்பாற் பெரிது முணங்கி யென்பாகி. 14

பிருகு முனிவன் பெருமையினுற் பிணங்கு மிருகம் புள்ளினங்க
ளருகு மணுக லறமண்மே லங்க முழுதுங் கெடாதிருப்பத்
திருகு மநந்திர் சமாதியிலே தெய்வ வருட மாயிரம்போ
யிருகண் மலரத் தவமுனிவ னிட்ட மகவை யெதிர்நோக்கி. 15

அறத்தின் வடிவா யஞ்சலிசெய் தருகே யிருக்கு மகற்காணுன்
வறக்கு முடலின் கங்காளம் வறுமை வடிவா யெழுந்ததென
நிறக்கு நிர்ப்பாக் கியம்வடிவாய் நிற்ப தென்ன வெதிர்கிடப்பத்
துறக்கு மநத்தான் பிருகுவெனுந் தூய்ய தவத்தோன் றனிநோக்கி.

மென்றோல் போர்த்த வெலுப்புமனை வெளிக டோறுந் தித்திரிப்புள்
சென்றே வெது முதாகுகை செறியு மண்டு கத்திரள்க
ளொன்றே டொன்று பாய்வதுங்கண் டுற்ற வாறென் னெனவறிவா
னின்றோர் கிலன்றுஞ் சினனென்றே நேய மைந்தன் றனைநினைந்
தான். 17

அடைத்த காலத் தன்றியென் தரிய மகவை யகாலத்திற்
றுடைத்த காலன் றனைக்கணத்திற் றுடைப்ப னென்னு விடைப்பா
விடைத்த வர்போற் பிருகுமுனி வெகுண்டு சாப மிடநினைப்பக் [கன்
கிடைத்த கால னடுநடுங்கிக் கிளரைம் பூத வடிவெடுத்து. 18

வதந மாறுங் கரமாறும் வாளுங் கயிறுங் குண்டலமும்
பதந கவசத் துடன்மேவிப் பரந்த சேனை புடைசூழ
விதந முநியை வந்தணுகி வேண்டிக் கொள்வான் மெத்தென்ன
நிதந மூல மெனுங்கால னிமல முநிவற் கிவையுரைத்தான். 19

ஈன்ற நியதி பாலிக்கு மியாங்க ணின்னே யீறில்லா
வான்ற தவத்தாற் றுதித்திடுதே மல்லா தில்லை யாதலினுற்
சான்ற தவத்தை வெங்கோபத் தழலாற் சுடுத றகவன்றூற்
றேன்று மூழிக் காலுமெமைச் சுடாது நின்சொற் சுடவற்றே. 20

குடும்ப வலையிற் பிணிப்புண்ட கோடா கோடி யுருத்திரரு
நெடும்பங் கயக்கண் மாதவரு நிலையா மென்னுற் றுலைவுற்று
றிடும்பை யுலகி லெனைக்கடந்தா ரில்லை யாரு மெனக்கிரையாம்
படும்பல் லுயிரு மியாம்படுத்தல் பகுதி யாய பழநியதி. 21

எமது விதியன் றிந்நியதி யென்று முள்ள படியாகு
மமல விழியிற் செய்வோனு மருந்து வோனு மிலவாகும்
விமல மல்லா விழிக்கிவர்கண் மிகவு முளவாம் விதிவயத்தாற்
றமது நினைவாற் பல்லுயிருஞ் சநிக்குங் கற்ப முடிவிற்போம். 22

கற்ப தான மறைதருசிற் கண்ண தெங்கே சிரத்தையதாய்
நிற்ப தெங்கே யுயர்வெங்கே நெடியோர் விளங்கு மிந்நெறிக்கே
யற்ப ரான குருடரென வயர்வ தென்னத் தம்வினையா
லுற்ப விக்குஞ் செயல்பாரா தருத்துச் சபிக்க வுரியாயோ. 23

மநமே புருடன் மற்றில்லை மநத்தின் செயலே செயலாகுங்
கநசீ வநத்தாற் சீவனுமாங் கவர்நிச் சயத்தாற் புத்தியுமாஞ்
சினவு மபிமா நத்தாலே தீய வகங்கா ரமுமாகுந்
தனது விகற்ப சாலத்தாற் றுனே சகமாந் தனிமநமே. 24

ஆத லாலுன் புதல்வனுநீ யலையில் சமாதி யமர்போதிற்
காத லாலே சுக்கிரனுங் காயந் தன்னை யிவணிருத்தி

மீதில் விச்சு வாசியெனும் விண்ணாட் டணங்கை மேவியபின்
ளேது புவியிற் றேசார்ண வொருவே தியன்பா லுற்பவித்து. 25

வேறு.

கோசல தேசந் தன்னிற் கொற்றவ னாகத் தோன்றி
வீசலர் வநத்தி னூடே வேடனா யுதித்துக் கங்கை
மாசல மருவு பாரின் மராளமாய்ப் பௌண்ட ரத்திற்
பேசரு நிருப னானான் பெருங்கதிர் குலத்து வந்து. 26

சாலுவ நாட்டிற் பாநு மந்திரத் தலைவ னானான்
மேலுயர் கற்ப காலம் விஞ்சையர் வேந்த னானான்
வாலுணர் வுளதா யங்கோர் மாதவன் மதலை யானான்
சேலுகள் சவ்வீ ரத்திற் சேர்ந்தசா மந்த னானான். 27

திரிகத்த தேசந் தன்னிற் றேசிகச் சைவ னானான்
முருகார்சூழ் வேட லூரின் மூங்கிலா ரணிய மானா
னரிணத்தோர் பிறப்பாய்ச் சீர்ண சாங்கலத் தமா லுற்றான்
விரிவில்சூழ் பனையின் காட்டில் வெஞ்சினப் பாந்த ளானான். 28

இவ்வண்ண மநந்த யோநி யிழிவுயர் வாக வெய்தி
மைவண்ண மநத்தி னாலே வாதனை வயத்தி னின்று
மெய்வண்ணக் கங்கை மாட்டோர் மெய்ம்முநிக் குமார னாகிப்
பொய்வண்ணப் பொறிக ளென்னும் புன்பகை யறுத்து வென்று. 29

வரிசடை பலவுங் கட்டி வாசுதே வப்பேர் மேவிப்
புரிதவத் தெண்ணா ருண்டு பொருந்தின னினது மைந்தன்
றிரிதரு கநவை யொத்த சித்தத்தின் மயக்கந் தன்னைப்
பரிவுறக் காண்டி யென்னிற் சிற்கணாற் பார்த்தி யென்றான். 30

காலனீ துரைப்பக் கேட்ட கலைமுநி ஞாநக் கண்ணாற்
பாலகன் செய்கை யெல்லாம் பார்த்தனன் கணத்தி னெல்லை
மேலதா மொளியாற் றோற்ற மாத்திரம் விளங்கி நல்ல
சீலமார் புந்தி யென்னுந் தெளிந்தகண் ணடியிற் பாய்ந்த. 31

வானதிக் கரையி னின்று மந்தரச் சார லிற்றன்
மேனியில் வந்து சார்ந்த மெய்ம்முனி வியந்து சால
வூநமில் காலன் றன்னை யொன்றலா வேண்டு கோளா
லானதோர் காத லில்லா வருமுனி பகர்வ தானுன். 32

முழுதுணர் தரும நீதி முதல்வனீ கால மூன்றும்
பழுதறத் தெரிதி நீயே பாலராய்ப் பாம ஞான
மெழுதலி லிளைஞ ராகு மெம்மனோ ரென்ற லோடுங்
கெழுதகை யுலகை நக்குங் கேடறு நிலைமைக் காலன். 33

மாதவன் கையைப் பற்றி மந்தரக் கந்த ரத்தின்
மீதகன் றமர ராற்றை மேவின னிவரி லாங்கே
பேதமாம் வாசு தேவப் பெயரொடு மிருந்த சேயைக்
காதலான் முனிவன் கண்டான் காலனு மிதனைச் செய்தான். 34

இங்குற்ற சமாதி நீங்கி யிவனெமைக் காண்க வென்று
சங்கற்பஞ் செய்த லோடுஞ் சமாதிவிட் டிவரை நோக்கி
யெங்குற்ற மில்லா மைந்தன் பணிதலும் விரும்பி யாருந்
துங்கத்தோ ரொருகன் மீது மூவருஞ் சூழ்ந்தி ருந்தார். 35

வாசுதே வப்பேர் மைந்தன் மற்றிவர் தம்மை நோக்கித்
தேசுடை யுமது நல்ல தெரிசனப் பேற்றி னலே
மாசறு தவத்தா னூலான் மகங்களாற் றநத்தாற் போகா
வேசுறு மோகந் தீர்ந்தே னிதிலமு தின்பஞ் செய்யா. 36

என்றுரை செய்தோன் றன்னை யியன்முனி யினிது நோக்கி
நன்றுயர் ஞானஞ் சேர்க நவைதரு மடமை தீர்க
வுன்றனக் கென்ற லோடு மூனக்கண் ணிரண்டு மூடிப்
பொன்றலின் ஞானக் கண்ணாற் புராதந மெல்லாங் கண்டான். 37

நீத்தன பிறவி யெல்லா நிமிடத்தின் ஞானக் கண்ணாற்
பார்த்தபின் வியந்து சொல்வான் பகுதியா மிகுதி மோகங்

கோத்தனா லங்க ளாகிக் கோரவென் மநத்தி னூடே
யாத்தமாய் வளரா நின்ற தகோவகோ வீதொன் றென்னே. 38

கற்பன வனைத்துங் கற்றேன் காண்பன வனைத்துங் கண்டே
னுற்பவத் தநேக கால முழன்றவெந் துயருந் தீர்ந்தே
னற்பய னறிவைப் பெற்றே ஜைமினி யைய வேகி
யெற்படர் மந்த ரத்தி லிருக்கின்ற வுடலைக் காண்பேம். 39

கருமமே யேது வாகுங் காயகங் காளந் தன்னை
யிருகணு னோக்கி யின்ப மெய்துவா னினைந்தே னியாது
மொருசெயல் வேட்கை யில்லை யொழிப்புறு செயலு மில்லை
வருதிரா லென்ன வன்னார் மந்தரங் கணத்திற் சேர்ந்தார். 40

முந்துறு சகத்தி னெல்லை தெளிதரு மூவர் தாமும்
வந்துழி முன்னைச் செம்ம மருவிய வுடலை மைந்த
னந்தமின் மகிழ்வா னோக்கி யருந்தவப் பிதாவை நோக்கி
யிந்தவன் கங்கா ளங்கொ லீன்றுநீ வளர்த்த தென்றான். 41

பின்னரு முரைப்பா னைய பெறலருஞ் சுகங்க ளாலே
முன்னநீ வளர்த்த காய மொய்துய ரனைத்து மாறி
யின்னல்கூர் காத லைய மிதாகித மெல்லா மின்றி
மன்னிய சுகம தாகி மநமிறந் திருந்த தன்றே. 42

மநமிலா நிலையி னன்றி மன்னுயிர்க் கின்ப முண்டோ
கநமுறு சுகசம் போகக் கடலிலே திளைக்க லாகு
மநகபே ரறிவு சாந்த மறிவுளோர் தாப நீங்கித்
தனதுயர் நிலையா மிந்தத் தனியுடல் வாழ்ந்த தன்றே. 43

அருந்தவப் பயனு லிந்த வற்புதங் கண்டே னென்ன
விருந்தவக் கால னோக்கி யிவ்வுரை யிகந்து மாற்றிப்
பொருந்திய வுடலின் மன்னர் புரிபுகு மதுபோற் புக்குத்
திருந்திய வசுரர்க் கெல்லாந் தேசிகச் செய்கை செய்வாய். 44

என்றுசுக் கிரனை யேவி யிவரிரு வரையும் வாழ்த்தி
நின்றுழி மறைந்தான் கால னீத்தவர் மறுகி நின்றார்
பின்றைய வாசு தேவப் பேருறு கருத்தை நீக்கி
வன்றகை வெள்ளி முன்ன மருவிய வுடலிற் புக்கான். 45

வினையது வயத்தி னலே வெள்ளிசே ருடலந் தன்னைத்
தனைநிகர் பிருகு வேத மந்திர சலத்தா லாட்ட
நனைதலு நாடி யெல்லா நயம்பெறப் பிராணன் றங்கி
யனையவ னெழுந்து தாதை யடிபணிந் தருகு நின்றான். 46

பிருகுவு மைந்தன் றானும் பிறங்குமந் தரத்திற் காநிற்
றிருகிய சித்த மென்னுந் தீப்பகை தீர மாற்றி
வருதிரை யிலாத நீர்போன் மாசறு நிலையில் வாழ்ந்தார்
கருணைமா முகிலே யென்று கற்றுணர் வசிட்டன் சொன்னான். 47

## 4—1. சுக்கிரன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—563.

---

## 4—2. தாம வியாள கடர் கதை.

மீண்டுரை செய்வான் முற்றும் விசாரத்தோர் தொழிநீர் நெஞ்சோர்
நீண்டதோர் மநநம் விட்டோர் நிகழ்சுக வறிவை யுள்ளோர்
பூண்டுள காட்சி தன்னிற் போவபோய்க் கொள்வ கொண்டோர்
காண்டகு தன்னைக் கண்டோர் காணுதோர் தனைக்கா ணுதோர். 1

சீவனு யிருந்து காணுஞ் சிற்பர தத்து வத்தே
மேவிய நநவை யுற்றோர் வெம்பவ மோக மார்க்கத்
தோவவில் சுழுத்தி யுற்றோ ரோர்முதிர் நிராசை யாலே
பாவனை நலனிற் றீங்கிற் பயிலும்வா தனையை மாய்த்தோர். 2

வாதனை வலையைச் செற்று மநப்பந்த மாற்றி விட்டாற்
காதல்செய் தேற்றின் வித்தின் கலங்குநீர் தெளிவ தென்ன
மேதகு விஞ்ஞா நத்தான் மெய்மையாஞ் சுபாவந் தானே
யேதமற் றொளிரு முன்ன மியம்பிய வியல்பி னோர்க்கே. 3

சங்கஞ்செய் மயல்போய்த் தொந்தந் தவிர்ந்தொன்றைச் சார்வ தின்
சிங்கிசெய் கூட்டி னின்றுஞ் சேணுறச் செல்லும் புட்போற் [றிச்
றுங்கமோ கத்தி னின்றுந் தூய்மநம் வெளியிற் போந்து
பங்கமா மையந் தீரப் பற்றெனு மனைத்துந் தீரும். 4

ஆன்றவம் மநம்பூர் ணத்தை யடைந்துபூ ரணவெண் டிங்கள்
போன்றுற விளங்கு மிந்த நிலையிலே பொலிவுற் றோர்கண்
மூன்றுமூர்த் திகளாந் தேவ முதல்வர்க்குங் கருணை செய்வ
ரூன்றிய விசாரத் தாலே யுயர்பொரு ளெய்த வேண்டும். 5

உலகெது நாமா ரென்ன வுற்றுநின் றுணரு மட்டுங்
கலகமார் பிறவி மோகங் கங்குல்போன் மூடி நிற்கு
மலகறு முலகுந் தாமு மழிவில்சிற் சோதி யென்றே
சலநமில் கண்ணுற் கண்டோர் தத்துவ நிலைமை கண்டோர். 6

அகிலசத் தியுமா யொன்று யநந்தமா மறிவு தானே
சகலபா வனைக்கு முள்ளா மெனக்கண்டோர் தம்மைக் கண்டோர்
பகர்வுறு நானு மில்லை பிறிதிலை பரமே யுண்டென்
றிகமுற வுள்ள தில்ல திடையுறக் கண்டோர் கண்டோர். 7

முயல்வறத் தாமே தோன்று மொய்திசைப் பொருள்க டம்மின்
மயலறச் செல்லுங் கண்போன் மாசறு நீரார் புந்தி
செயல்களிற் செல்லு மன்றே தெளிந்துபல் போகந் துய்த்தாற்
றுயர்செயா தறிந்து சேர்ந்தாற் சோரருந் தோழ ராவார். 8

நெறியிடை வந்தோர் கூட்ட நெறிசெல்வோர் காணு நேர்போற்
செறிதரு போக மெல்லாஞ் சேதநர் காண்ப ரன்றே

யறிவினுன் மநதை வென்ருேர் ரற்பமே பெரிதாய்க் காண்பர்
பிறகது துயரா மென்றே பெரியன போகம் வேண்டார். 9

நலங்கிய சிறைதீர் மன்ன னகர்மட்டு மகிழ்வு கூரு
மலங்கல்வேல் வெற்றி வேந்த னவநியுஞ் சிறிதென் றெண்ணுங்
கலங்குறு மநதை வெல்வோர் கைகையாற் கால்கள் காலா
விலங்குபற் பல்லா லங்க மியாவுமிப் படிமுன் சேர்க்க. 10

பகைமந வெற்றி யல்லாற் பவக்கடல் வங்க மில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறவி லாதோர்
மிகையுயர் புருடர் கீர்த்தி மிக்கவ ரென்போ ருள்ளக்
குகையிடைத் தொழில்க ணஞ்சார் கொடுமநப் பாம்பைக் கொன்ருர்.

மநமெனும் வினையை வென்ருேர் மலரடி முடிமேற் கொள்வா
மினநர கங்க ளென்னு மிராச்சியத் திருந்து வாழ்ந்த
முனமுறு பாவ மென்னு மும்மதக் களிற்றி னுலுங்
கநமயற் படைக ளாலுங் கரணமாம் பகையை வெல்வாய். 12

துனிமநச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகையை வெல்லிற்
பனிபடு பதுமக் கான்போற் படர்ந்தவா தனைகண் மாளுந்
தனியறி வொன்றே யென்று சாதித்திம் மநம்வென் மட்டுங்
கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில்வா தனைவந் தெய்தும். 13

மந்திரி யெனலா முண்மை மருவுறும் விசாரத் தாலே
யிந்திரி யங்க ளென்னு மிடர்ப்பகை யறுத்த லாலே
தந்திரி யெனலா மிட்டஞ் சமைத்தலா லேவ லாளா
நொந்திரி கிலாத வுள்ள நோக்கிய விவேகத் தோர்க்கே. 14

ஆவிக்கு மின்பத் தாலே யன்புறு மனைவி யாகும்
பாவிக்கு மியல்பி னுலே பாவந தந்தை யாகுஞ்
சேவிக்கு முறுதி யாலே தேடரு நட்பு மாகுந்
தூவிக்கும் வினைக ளில்லாத் தூய்மநம் விவேகத் தோர்க்கே. 15

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானஞ் செய்து நல்லநு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கு நல்லதாய்த் தன்னை மாய்த்து
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க் குள்ளந் தானே. 16

துணிவுறு திடமாய்ச் சாலத் துகளற நோக்கி யாதும்
பிணியறக் கண்டு ஞானப் பேருணர் வுணர்த்தப் பட்டாற்
பணிவுறு மிதயந் தன்னிற் பழுதிறன் குணத்தி னாலே
மணியென விளங்கா நிற்கு மாசறு முள்ளந் தானே. 17

மநமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருத்துந் தோன்றுக்
கநமுறு விவேக நீராற் கழுவினுற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவி தீர்வாய். 18

இச்சிறத் திவனு னென்றே யிறுகிய வறுதி வீனு
மத்திறம் புந்தி யாலே யழுத்தமா யகற்றி மற்ற
மெய்த்திறம் பற்றி நீயா மதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திற மநத்தி னேடே புசித்தவை பந்த மாகா. 19

வேறு.

தாம னேடுவி யாளக டாசுரர் சாரு நீதியை நீயனு காதொழி
வீம பாசதி டாசுரர் நீதியை மேவி வேதனை தீர்கென வோதலு
நாம மேபகர் தானவ ராரெனு ஞான வீரன்வி னவிட மாமுனி
யாம தோதிட வாதா மாகிய தேது நீயதின் மேவென வோதுவான்.

சஞ்ச ரித்துயர் பாதல மேவிய சம்ப ரப்பெய ராளெரு தான வன், வஞ்ச முற்றிய மாயையில் வாழ்பவன் வன்ப டைக்கட லாலம ரேசனை, யெஞ்ச வித்திட வாநவர் தாமுமே யிவன்சு ழுத்தியி லாகிய போதினும், விஞ்ச வம்பர மேவிய போதினும் வெம்பி யெற்றினர் தாநவர் மாளவே. 21

ஆய வன்பைய றிந்துயர் சம்பர ஞெரு வன்றுரு மன்றிறன் முண்டிக, னேய விங்கிவர் தம்படை முன்செல வேவி னன்பெரி தங்கெவ ரும்பட, மேய வண்டா டார்ந்தன ரென்றலும் வேக மிஞ்சிய சம்பரன் வந்திட, மாயை விஞ்சைநி றைந்தவ னென் றெதிர் மாகர் நின்றிட வஞ்சியொ துங்கினர். 22

மேரு கந்தர மும்பர டைந்தனர் வீதி யெங்கும ரம்பையர் நின்றழ, யாரு மின்றிய விந்திரன் றன்பதி யீசன் வென்றபு ரங்களெ னும்படி, நேரு மங்கிசொ ரிந்துதி ரும்பின னீடகன்றுள வந்தணர் பின்றையு, மூருள் வந்தன ரென்றுபெ ரும்படை யோய்வி லன்பெரி துந்தினன் விஞ்சையால். 23

ஆவ தாகிய தாநவர் பற்றற வாதி தேவர்கண் மோதினர் மற்றது தாப மாயசு ரேசன்வி தித்துள தாம ஞெடுவி யாளக டப்பெயர் மூவர் மாயையி னல்வர லுற்றவர் மூரி மேருவு லாவுவ தொப்பவர் பாவ நாவச வாதனை யற்றவர் பாச மாமபி மாநநி னைப்பிலர். 24

சாதல் வாழ்தல்க ளிப்புறல் சோர்வுறற் ருமவாகைகொள் வெற்றிக டோல்விகள், போதன் மீடல னைத்தையு நாடலர் போர் செய் வோரைமு ருக்குவர் கேவல, மாத லாலிவர் பற்றலர் சேனை யை யாசு கங்கொட ழிப்பர ழிப்புறுர், பாத லாசுரன் வெற்பினர் வேலையர் பாரு ளாரிவர் பிற்செல வேவினன். 25

தாந வாதிபன் விட்டநெ டும்படை தாள்க ளோடுகி ரித்திரள் வந்தென, மீன வேலைப ரப்பில்வி ரிந்தென மேவி னர்கள்சி ருட்டிமு டிந்தென, வாந நாடரு மப்படி வந்தனர் வாயு வோடுநெ ருப்புமு லைந்தென, வான சேனைகண் முட்டியு டன்றன வாத லான்மறு கற்பம்வி ளைந்ததே. 26

ஆயு தங்களெ ரிந்துநெ ருங்கிட வாக மெங்கும்வி ழுந்தன வெற்பென, மாயு மங்கமு மிழ்குரு திக்கடன் மாதி ரங்கட தும்பிய லைந்தன, காயும் வஞ்சர டர்ந்துமு டுக்கினர் காது மும்பர்த ளர்ந்

தோட வுற்றனர், சாயு மண்டர்கள் பின்றெருடர் வுற்றனர் தாம ஹும்பிற ருந்திசை முற்றுமே. 27

உம்ப ரோடிம றைந்தமை கண்டில ருந்து மூவரு நின்றுதி ரும்பினர், சம்ப ராசுரன் முன்புற வந்தனர் சங்க வாநவ ரென்செய லென்றுகொ, டம்பு யாசநன் முன்புந டந்தன ரன்பி னேடுபே ணிந்துபு கன்றனர், வெம்பு தீநிகர் சம்பரன் வஞ்சமும் வெங்கண் மூவர்து ரந்துதொ டர்ந்ததும். 28

வேறு.

கேட்ட நான்முக னஞ்சலென் றிவ்வுரை கிளத்தா
னீட்ட மாகிய வருடமோ ராயிர மிறந்தால்
வாட்டு சம்பரன் போரிலே யரியினுன் மடிவான்
வீட்டு மவ்வள வுஞ்செயத் தக்கது விதிப்பாம். 29

என்ற தாமனும் வியாளனுங் கடனுமென் பவரைச்
சென்ற ழைத்தமர் செய்வது திரும்புவ தாகத்
தொன்று தொட்டுநீர் தொந்திக்கின் வாதனை தொடர்ந்து
நின்ற கண்ணடி நிழலென மநத்திலே நிற்கும். 30

நிலைபெ றும்படி நானெனும் வாதனை நின்றால்
வலைபு குந்தபுள் ளாமென மூவரு மடிவர்
கொலைசெ யற்கெளி தாசையே யுயிர்க்கெலாங் கூற்றாய்த்
தொலைவி றன்பமா நிராசையே துன்பமி லின்பம். 31

வேறு.

வாதனைப் பாசத் தாலே மன்னுயி ரெல்லாங் கட்டுண்
டேதமா மந்தப் பாச மிறுகுமே விடரைச் செய்யும்
வேதனை யிலதாந் தீர நழுவமேல் வேட்கை யாலே
தீதிலோ ரனேகங் கற்றோர் தீரரென் னினுங்கட் டுண்பார். 32

விலங்குறு சிங்கம் போல வேட்கையா லுயர்ந்தோர் தாழ்வர்
கலங்கன்மி னென்று மேதா கண்டுழி மறைந்த பின்னர்
புலன்கொள வனைத்துங் கேட்ட புங்கவர் பொன்னாட் டெய்தி
நிலங்கிழிந் தண்டம் பீற நெடியதுந் துமியோ டார்த்தார். 33

ஆர்த்தன கேட்ட வந்த வசுரர்பா தலத்தி னின்றும்
வேர்த்தனர் பொங்கி வந்து வெம்படை யமரர் மீது
தூர்த்தனர் காலம் போக்குஞ் சுரர்பொரு துடைந்து போகிப்
பேர்த்தும்வந் தமர்செய் தோடிப் பின்னும்வந் ததனைச் செய்தார்.34

இவ்வகை பலவு பாய மிறந்தநீள் காலஞ் செய்ய
வைவரு திடம தான நானெனும் பழக்கத் தாலே
மெய்வரா நானென் றென்னும் வேட்கையை விருப்ப முற்று
ரவ்வகை யாலே யுள்ள மகப்பட்டு நின்ற தன்றே. 35

பயம்வந்து பிடித்துக் கொள்ளப் படர்தரு மோகங் கட்ட
வயர்வுறு மாசா பாசத் தழுந்தியென் செய்து மென்னு
துயருற விளைத்துக் காயந் துஞ்சுறு திருக்கு மாறு
மயலுறு தநத்தா லின்பம் வருவது மெவ்வா றென்றார். 36

சந்தத மிவ்வா றெண்ணத் தளைப்புண்ட மநத்த ராகி
யந்தமி றீர மின்றி யமரென்று லறவு மஞ்சிப்
புந்திநொந் திறப்போ மென்றும் புகலிட மெமக்கே தென்றுஞ்
சிந்தனை யாலே கெட்ட சித்தத்தாற் றியங்கிச் சோர்ந்தார். 37

வலியெலா மிழந்து முன்னே வந்தொரு பெயர்நின் றுலு
நலிவுற மாட்டா ராகி நடுங்கினர் விறகு மாண்டாற்
பலிதரு மலியை யங்கி பருகிட வல்ல துண்டோ
வொலிதா வுறைத்தே னஞ்சி யோடினர் பொன்றிப் போனார். 38

நாமனும் வியாளன் றானுங் கடனுமுன் சரித்த மார்க்கந்
தோமறு முணர்வுண் டாகச் சொல்லினம் விநோதத் தாலே

மாமந மவிவே கத்தை வரம்பறப் பழகி விட்டாற்
பாமரப் பிறவித் துன்பம் பற்றறு திந்த வண்ணம். 39

இனையடர் வியாய நீயிங் கெய்தலை யென்ற லோடு
மனையவர் பாத்தி னின்று முதித்தவா றறிய வேண்டு
முனைவகூ றென்றி ராமன் மொழிதலு முனிவன் சொல்வான்
றனையுறு தாமன் முன்னோர் தோற்றமாத் திரமெய் யானோர். 40

எதிருறு தோற்ற மெய்யா யிவர்கள்போ லிங்கு யாமும்
விதியதாய்ப் புறத்தி லொன்று மேவலம் வீர னேனின்
மதியினு னெனலும் பொய்யே மதியினீ யெனலும் பொய்யே
யதிர்குரற் றமன் முன்னு மவர்களுண் டெனலும் பொய்யே. 41

பரத்தின தொளியே மெய்யாய்ப் பாரித்தோர் சிவ சத்தி
திரத்துறு சம்ப ரன்றன் றியாநச்தா லசைந்து மூன்று
புரத்தவல் லாச மேவிற் றுரைத்தவித் திறத்தி னாலே
வரத்துறு மவரு நாமும் வாய்மையே யெங்கு மில்லை. 42

அறிவதா யறிவே மெய்யா யமலமா யனைத்தா யாறிப்
பிறிவுறு வரவு போக்கில் பிரமமே யுளதா மந்தச்
செறிபொருட் சத்தி தோற்ற மாத்திரஞ் சகமாய் நிற்கும்
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருண்மெய்யே யென்று வாழ்
வாய். 43

4—2. தாம வியாள கடர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—606.

---

## 4—3. வீம பாச திடர் கதை.

இதுநமக் கிதுந மக்கென் றிரங்குறு பொல்லா வாழ்வா
லுதவியோர் சாம்ப ரேனு முறப்பெரு துதார மிக்குச்
சுதமுறு முலக மெல்லாந் துரும்புபோற் காண்போர் தம்பால்
விதநங்க ளனைத்தும் வாரா மிருகங்க ளுலர்புற் றீண்டா. 1

உளத்துறச் சமச்கா ரஞ்சே ருண்மையை யுணர்வோர் தம்மை
யளக்கரும் பிரமாண் டம்போ லட்டதிக் காளர் காப்பர்
கிளப்பருங் குணத்தி லன்பாய்க் கேள்வியில் விருப்பா யுண்மை
விளக்குறு வருத்த மிக்கோர் நரர்களின் றோர் மிருகந் தானே. 2

செயலருந் துயருற் றாலுஞ் செயத்தகாச் செயல்க ளாகா
வியல்பலா வழியா லுண்ண விராகுவை யமுதங் கொன்ற
தயலெலாம் வசமா யாபத் தனைத்தும்போ யென்று நன்று
முயலுநற் குணங்க ளாலே மொய்புக ழெய்தி னோர்க்கே. 3

ஒழிவறு முயற்சி தன்னு லூகத்தா லுயர்ந்த நூலா
விழிவற வியற்று வோர்கட் கெப்பய னெளிதி னெய்தா
வழிபடு நன்னு லாளர் வருபயன் கருத்தாச் செய்யி
லழிவற முற்று முற்றி யளவறு பயனை நல்கும். 4

வருத்தமற் றச்சஞ் சோக மதமின்றி நன்னூற் பின்போ
யொருத்தரா லேவ லின்றி யுலாவுக நசிக்க வேண்டா
வருத்தங்க ளநர்த்த மாகு மளவில்போ கங்க ளேயாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்ப நிராசை தானே. 5

இடும்பைகூர் சங்க மின்றி யியற்கையா சார மெய்திக்
குடும்பமாந் துயர்சிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணுள் செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே. 6

தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் களினாற் போகாப்
பவங்களை யுயர்ந்தோர் பாதம் பணிந்துபற் றறுக்க வேண்டு
மவங்களாங் காமங் கோப மறவுந்தேய்ந் தியற்கை யான
சுவங்களி னடந்து நன்னாற் றுறைநின்றோ ருயர்ந்த மேலோர். 7

நானெனும் பொருள்கா ணாதோர் ஞானவா காயங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
னானெனப் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே. 8

மடிவறு பிறவி யென்னு மரத்திர ளனதி தென்னு
நெடியபல் பணைக ணீட்டி நிரயமாங் காய்கள் காய்க்கு
முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கு
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போமே. 9

என்றலு மிவ்வாங் கார மெவ்வுரு வுடைத்தெவ் வாறு
வென்றிட லாகுந் தேக மேவியு மேவா தாயு
நின்றொரு காலம் வென்றா னேருறு பயனே தென்ன
நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான். 10

மூவகை யுலகி லிந்த வகங்கார மும்மை யென்று
மேவரு மிரண்டு நன்றா மிகவுமொன் றீந மாகும்
யாவதும் பரமு நாமே யீறில மெமைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம். 11

செந்நெல்வா லினுஞ்சற் றுகிச் செகங்களுக் கயலா யென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாகு
மிந்நிலை யிரண்டுஞ் சீவன் முத்தர்பா லிருந்தீ டேற்றித்
தன்னரு முத்தி நல்குஞ் சுழல்வுறு பந்த நல்கா. 12

கரசா ணாதி மட்டா னானிது வென்றா காணாந்
திரமது தானே மூன்றா மகங்காரஞ் செகத்தோர்க் கெல்லா

முரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூல மாகும் வருந்தியு மொருக்க வேண்டும். 13

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி னுலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம். 14

ஏற்றமா மகங்கா ரங்க ளிரண்டினுற் பரம மெய்தி
யூற்றமா மவற்றை நீக்கி யோரகங் கரமு மின்றி
யாற்றலா னிற்றி யென்னி லறவுயர் பதம தாகுந்
தோற்றுட னுனெ னுமை சுருதிகள் சொல்லு முத்தி. 15

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன் முன்னே
ரதமுற மடிந்த பின்ன ரனையசம் பரன்வே கித்து
மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வா னுபாயந் தன்னை
விதமுற வினைய வாறு நினைந்தனன் விஞ்சை வல்லான். 16

தாநவ ரெனமுன் னுஞ்செய் தாமனை முதலா மூவர்
ஞாநமில் லாமை யாலே நானெனை தென்று பொய்யாய்
வநவர் போரின் மாண்டார் மற்றினி ஞாந நன்னூற்
போனவர் விவேகத் தோராய்ப் புணர்ந்தமா யத்தாற் செய்வேன். 17

மெய்யுணர் வுறுத லாலே வெறும்பொய்யா மகங்கா ரத்தி
னையுறுர் விணவோர் சேனை நலிவுற வெல்வ ரென்று
மையுறு மாத்தி னெண்ணி மாயையா லவரைச் செய்தான்
மொய்யுறு வேலை தந்த மொக்குள்போன் மூவர் வந்தார். 18

அனைத்தையு மறிந்தோர் தம்மை யறிவென வறிவாற் கண்டோர்
வினைத்தொட ரிலாதோ ரொன்றின் விருப்பமும் வெறுப்பு மில்லோர்
நினைத்துள நிகழ்கா லத்தி லெய்திய நிலையி னிற்போர்
தினைத்துணை யெனினு மைய மிலாதவர் தெளிவு சான்றோர். 19

பேரினன் வீமன் பாசன் றிடனெனப் பிரிக்கப்பட்டோர்
சீரினு லுலகை யெல்லாந் திரணமாய்த் தேருஞ் சுத்தர்
போரிலே போமி னென்று சம்பான் புகலப் போகி
நேரிலா வமர ரோடு நெடுஞ்சமர் புரிய லுற்றார். 20

எண்ணிலா வருடம் வெம்போ ரியற்றின ரிவர்க ணெஞ்சிற்
றுண்ணென வெனதி யானுந் தோற்றா வுதித்த போது
நுண்ணறி வாலே யாமா ரென்று ற நோக்க லோடும்
புண்ணிய மிலாதோர் வாழ்வு போலது பொய்யாய்ப் போகும். 21

பன்மையாம் விசாரத் தாலே படாகங் கார மற்றோர்
சந்மமே மரண மேயென் றஞ்சுறு சலிப்பி லாதோர்
நிர்மல ரெளிதின் வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்த வெல்லாந்
தொன்மையா நவமாங் கண்ணற் றுகளறச் சமமாய்க் காண்போர்.

ஆதலால் வீர ரான வவர்களா லமரர் சேனை
காதலாற் புசித்து மாய்க்குங் காமுகர் செல்வம் போலப்
போதலே புரிந்து திக்கிற் போயொளித் துலக முண்ட
மாதவா சரண மென்றே மாயனைச் சேர்ந்த தன்றே. 23

அடைக்கலம் புகுந்த வானோர்க் கஞ்சலென் றபய நல்கி
விடைத்துவந் தமரின் மோதும் விண்டுவோ டரும்போர் செய்து
படைக்கல நேமி யேவப் பாய்கன றீய்க்கத் தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன் வாழுந் தூயவை குந்தம் புக்கார். 24

மற்றினி யிந்த வாற்றால் வாதனை யாலே பந்தம்
பற்றுறு மதனை நீங்கிற் பந்தம்போம் விவேகத் தாலே
யுற்றறி வுண்மை சேரி னுளத்தில்வா தனைபோம் போனு
லற்றமில் சித்த நெய்தீர் தீபம்போ லாகு மன்றே. 25

4—3. வீம பாச திடர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—631.

---

## 4—4. தாசூரன் கதை.

ஒழியாத துயர்மாயை யெனுமா பத்தை யொழிக்கமன நாசமோ
ருபாய மாகு, மிழியாத மெய்ஞ்ஞானப் பொருளை யெல்லா மியம்பக்
கேட் டயராம லிதயங் கொள்வாய், பழியான போகத்தி னிச்சை
தானே பந்தமா மதுவிடலே பரம மாகும், வழியான பன்னூலாற்
பயன்கொ லென்ன வருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும். 1

இன்பமிதா மின்பமிதா மென்ற வெல்லா மெரியெனநஞ்
செனநினைக வேற்றத் தாழ்வாய்த், துன்புறுபோ கம்பலகாற்
றோர்ந்து நெஞ்சிற் றேயாம லெளிதருந்திற் சுகமே யாகும், வன்பு
பயின் மனத்தோற்ற நாச மாகு மனத்தினது நாசமே மகத்தாந்
தோற்றம், நன்பரம ஞானிகணெஞ் சிறந்து போகு நடைவிலங்கா
மறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம். 2

ஆநந்த நிராநந்த மிரண்டு மில்லை யசைவுமசை வின்மையுமா
மவையு மில்லை, யீநந்தீர் சத்தசத்தன் றிவற்றுக் கெல்லா மிடை
யல்ல ஞானிமன மென்ற லோடுந், தானந்த மிலாவறிவா யுலகின்
மேலாந் தத்துவத்தி லுலகிருக்குந் தன்மை தன்னை, ஞானந்தான்
வளர்பொருட்டா யுரைப்பா யென்று நாதனியம் பிடவசிட்ட
னவில்வ தானன். 3

வேறிலா தெவ்விடத்து மேவி நின்று மேவாம லுண்மையினால்
வேறும் விண்போற், கூறிலாச் சிற்பாவ மெங்கு நின்றுங் கூறுபடு
மவற்றென்றுங் கூடிப் பற்றுப், பேறிலாச் சங்கற்ப மனைத்து
மின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேத மின்றி, யூறிலா வாகாயங்
கோடி கூறு வுரித்தவற்றி லொருகூற்றை யொப்ப நொய்தாம். 4

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள் பெற்று ஞானிகள்பா
னிமலமா ஞான மாகி, யொன்றுமல வுருவான குடும்ப ரூப மொன்

ருகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த், தன்றனைச்சிந் மாத்திரத்துக் கயலற் றிந்தத் தொத்தாமத் தாமயமாஞ் சகங்களெல் லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாஞ் சூழ்கடலில் வேறு காத் தொடர்ச்சி போலாம். 5

தனைதருபல் பிறப்பாகிக் கொடிதாய்ப் பொல்லாச் சுபாவமாந் தனையறியாச் சுமடர்க் கென்றுந், தனையறிந்தோர்க் கொளியுருவா யெல்லா மொன்றாய்த் தானாக வநுபவிக்குந் தன்மை யாலே, நினை வொடுசெய் வோன்செய்கை செயலிம் மூன்று நிகழ்விக்கும் பாவித்த நினைவுக் கெல்லா, மனையசுவை யாய்நிற்கும் பிறவிப் போக மருந்துவோர்க் கப்போக மாகி நிற்கும். 6

அத்தமந முதயமில்லை யெழுத னிற்ற லயல்போதல் வருத லெனு மனைத்து மில்லை, யித்தலத்தி லில்லையிலா திருக்க வில்லை யித்திறமாஞ் சித்துமல மில்லா மெய்யாய்ச், சுத்தமுறு தானேதன் னிடத்தி னிற்குஞ் சொன்னநெறி யேசகமாய்ச் சொல்பே ராலே, மெத்தவெகு ரூபமாந் தற்சு பாவம் விரிந்தெங்குஞ் சிற்பெயரால் விளங்கி நிற்கும். 7

இன்னசுபா வந்தானே யொளியாய் நிற்கு மிருளாகு மொன்றாகு மீறில் கூறாந், தன்னுடைய தொழிலாலே தானே பூர்ண தத்துவம் விட் டிவனவனு னென்னுந் தன்மை, யுன்னியபா வனையாலே மெள்ளச் சீவ னுருவாகிக் குடும்பியெனு மூகத் தாலே, பன்னியநா நாத்துவத்தி லழுந்திப் பாவா பாவம்பற் றுதல்விடலாம் பதத்தி னிற்கும். 8

அப்பதத்தி னின்றபுரி யட்ட கத்தை யளவிலசை வால மைக்கு மமைத்திடாதா, மிப்பரிசி னின்றாவே வடிவ மான வெழுபிறவி வகைமாலை யியற்று மெங்கு, மொப்பரிய தற்பிரம சுபாவத் தாலே யுளாத்தலெலா மெழுமின்டு மொரிக்கிப் போறு,

மெய்ப்படிவ மில்லாத விண்ணிற் கானல் விரிவதுபோற் சிதினி னைவு விரிந்து தோன்றும். 9

படர்மதத்தாற் றனைப்பிறர்போற் ளுென்று மாபோற் பகுத்த விலா வந்தச்சிற் பாவைத் தானே, யடர்பொய்போற் றுென்றியதாற் சத்த மாதி யைம்புலனு மேதோன்று லறியா நின்றுய், தொடர் கின்ற வதுவிந்த வான்மா வாகுந் தோற்றமெலாந் தானுகித் துன்னி நின்ற, விடமுடைய பரப்பிரம மிதுவே யீதிங் கிருப்பதுவும் பெயர்மலமா மிதின்வே றில்லை. 10

பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்த வெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதி யாமோ, வொருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்று மில்லை, யெரியிடத் திற் சூடுமாத் திரமே யல்லா லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றுஞ், சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச் சாதநங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும். 11

இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றுேதின் மீளாத நிரகில் வீழ்த்த தாகுந், தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தமகத் தாவார்க்கே திகழத் தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப் பறுக்கு மகனு மாங்கே. 12

விளக்குமிர வியுமலரு முண்டா யுண்டாம் வீசொளியும் பகற் பொழுதும் விரையும் போலத், துளக்கமில்சித் துண்டாகி லுண்டா ஞாலந் தோற்றரவு மாத்திரமே சொரூப மாகுங், கிளத்தபா மார்த் தத்தா லில்லை யென்னக் கேட்டலுமே பாற்கடல்போற் கெம்பீ ரத்தா, லளக்கரிதாய்ச் சீதளமா யமல மாகி யற்புதமா நின்மொழி யென் றண்ணல் சொல்வான். 13

இம்மொழிக ளாலிமைப்போ திருளா மீள விமைப்போதோ வொளியாகு மிவ்வா ருகி, மைம்முகிலா லற்பமாய் வெய்யிற் சீதம் வந்துவந்து போகின்ற மழைநா ளொத்தேன், மெய்ம்முநியே யநந்த மாய்ப் பலவா யொன்ருய் வீயாதா யளக்கரிதாய் விளக்க மெய்திச், செம்முறையா மாத்துமதத் துவத்துக் கிந்தச் செய்தொழில்கள் வந்தவா செப்பு கென்றுன். 14

மெய்யான பொருளுடைய வாக்கி யத்தின் மெய்ப்பொருளாய் முன்னெடுபின் விரோத மின்றிக், கையாரு நெல்லியெனக் காட்ட வல்ல கட்டுரையே யாமிங்கு கழறிற் றெல்லா, மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம் விரியவுதித் தாலென்சொன் மன்னும் வித்தைக், கையார வலிதெளிதென் றுள்ள வாறு கலக்கமற நிலைநின் று காண்டி யன்றே. 15

தன்னுருவ மாய்வதற்கே முயல்வ தாயுத் தமமான வவித் தையினுற் சகல மான, வின்ன லுறு குற்றமிலா வித்தை யெய்து மெய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சாற், றுன்னுபகை பகை யாலே தீது தீதாற் றடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத்தல் வேண்டு, முன்னியுறப் பார்த்தலுமே யிதன்சு பாவ மொழிந்து போய்த் தன்மாய்வா லுதவு மின்பம். 16

நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு நாடுவாய் ஞாநியாய் ஞேயம் பெற்ருற், றுனிசெயுமீ துளமாயை யறிதி யன்றே துகளிலா நற்போதந் தோன்று மட்டும், பனிமாயை யில்லையென வென் சொல் லாலே பழுதில்லா வறுதியுறப் பற்றி நிற்பாய், புநிதமுறு பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொருந்தி னேரே. 17

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும், போதமுறு பேற்றினு லன்றி மாயைப் பொரு நதியின் கரைதோன்ருப் பொருந்தத் தோன்றி, லேதமறு

மப்பதமே யிறவா வீடா மிம்மாயை பிறப்பிடமே தென்ன வேண் டாஞ், சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய் சிதைவுற்று விதனியல்பு தெரியு மன்றே. 18

யாதினிற்றோன் றியதென்றும் யாதீதென்று மிறந்தநெறி யாதென்று மிறந்தாற் றோன்று, மாதலினல் வன்றுயரின் சாலே யான வவித்தையெனு நோய்க்குமருந் தருந்தச் செய்தாற், றீது பயில் பிறப்பென்னுங் கடலின் மூழ்காய் செறிகாற்றுத் தன்னுரு வாஞ் சேணி றன்னூற், சாதமுறத் திரிவதுபோற் றன்பாற் றோன் றுஞ் சத்தியினு லாத்துமதத் துவ நின் றொல்கும். 19

நொய்யநெடுஞ் சிற்கடறன் னிடத்தே யற்ப நுடக்கத்தாற் கணம்விளங்கு நுண்மை நோக்கா, லையமறத் தற்பதமொன் றகண்ட மென்றே யழுந்துவா யக்கடலி லசைந்து சற்றே, மொய் யறிவாஞ் சிற்சத்தி கணகா லத்தின் முழுதுறுசத் தியினலு முழங் கத் தோன்றித், தய்யவிடங் காலமொடு தொழில்கண் மூன்று தூயனசத் திகடம்மைத் துணையாய்ச் சேர்க்கும். 20

தனதுசுபா வத்தையறிந் தநந்த மான தற்பதத்தி லிருந்துஞ் சிற் சத்தி தானே, யெனதுருவிவ் வளவென்றே யறிவற் றுற்போ லெண்ணுறுமிப் படியுருவை யிதுபா விக்கி, லநுகதமா யப்பொழுதே பெயர்க ளெண்ணே யாதியாம் பார்வைகள்வந் தடையா நிற்குங், கநவிகற்பந் தருவடிவாய்ச் சித்து ரூபங் கவரிடங்கா லந்தொழிற் குக் கலந்த பற்றும். 21

ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந் தன்னை யாவருஞ்சேத் திரக்கியனென் றியம்பா நிற்ப, ராங்கதுவும் வாதனையைச் செய்யா நின்றே யகங்கார பாவனையை யடையா நிற்கும், வாங்கருமாங் காரமுநிச் சயிப்ப தாகி மலிநமுறு புந்தியா மலஞ்சேர் புந்தி, வீங்கிய கற் பனைவடிவாய் மாநா நெஞ்சாம் விகற்பமிகு மாம்பொறியா மெல்ல வர்தே. 22

கரசரண மயவுடலைம் பொறிக ளென்பர் கவல்வுறவிப் படியன் ே கலந்து சீவன், விரவியசங் கற்பமெனும் பாசத் தாலே வீக் குண்டு துன்பவலை வீசப் பட்டுத், தரமறவீ னதையடைவே யடையா நிற்குஞ் சத்திமய மாமநமித் தன்மை யாகிப், பொா வகங்கா ரதைமேவிக் கோச காரப் புழுப்போற்றன் னிச்சையினுற் பூணும் பந்தம். 23

தானேசங் கற்பித்துத் தங்மாத் திரத்தாற் றனிவலையா முட் டொழில்க டன்னைக் கட்டக், கானேறு சிங்கம்விலங் குற்ற தென் னக் கவலையினுன் மிகவுமநங் கரைந்து சோரு, மானுத மநம்புந்தி ஞாநஞ் செய்கை யகங்காரம்வா தனையுடலம் பகுதி மாயை, யூனுன மலங்கருமம் பந்தஞ் சித்த மோதவித்தை யிச்சையென வுரைப்ப ரன்றே. 24

அப்பாரிசோ ரோரிடத்தி லோரொன் ருக வாசாபா சத்தினு லமைத்துச் சொன்ன, வொப்பரிய சகவிரிவா மிவற்றை யெல்லா முட்கொள்ளும் பலமிதனி லொன்று மில்லை, கப்புடைய நெடு வடத்தை வடத்தின் வித்துக் காந்திருப்ப தொக்குமிடர்க் கவலைத் தீயின், வெப்பமிகக் கோபப்பாம் பெடுத்து நுங்க வேட்கையெனுங் கடற்றிரையான் மெலியு முள்ளம். 25

பெருகியவித் துயர்களா லவச மாய்த்தன் பிதாமகனை மறந்து மிகப் பீடை யுற்றுக், கருகியவிம் மநந்தன்னை யளற்றி லானைக் கரையேற்றி விடுவதுபோற் கரையி லேற்ருய், வெருவுசரா மரண மெனும் விடத்தால் வெந்து மிகுநலந்தீங் கெனும்பகையான் மெலியு நெஞ்சுக், கருள்புரியா நாரமனித வடிவ மான வரக்கரே யருள்வடிவ மான வள்ளால். 26

இவ்வகையே சிற்பாவ சீவ பேத மியல்வடிவாம் பிரமத்தி னிடையே நின்று, வவ்வியபா வனையாலே வந்த கோடி வாராநின் றனகோடி வருவ கோடி, தெய்வவரை யருவிநீர்த் துளிபோல்

வந்தோர் சிலர்பிறவி யொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர், நைவரு செந் மங்கள்சிலர் நூற்றின் மிக்கோர் நாடரிய பவஞ்சிலர்க ணண்ணி நின்றோர். 27

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவ ராஞோர் சிலர்விச்சா தரருரா கர் திரளாய் நின்றோர், சிலரருக்க ரிமகிரணன் வருண ஞஞோர் சிலர்பிரமன் றிருநெடுமால் சிவனுய் நின்றோர், சிலர்மறையோர் சிலரரச ராகி நின்றோர் சிலர்வணிகர் வேளாண்மைச் செயலி னின்றோர், சிலர்விலங்கு பறவைகளூர் வனவாய் வந்தோர் சிலரிலை காய் பழமூலந் திரண மாஞோர். 28

சிலர்மயேந் திரசைலஞ் சைய மேரு தென்மலய மந்தரமாய்ச் சிறந்து நின்றோர், சிலர்கடம்பஞ் செம்பீரந் தாலஞ் சாலஞ் சிறந்த தமா லங்களாய்ச் செறிந்து நின்றோர், சிலருவரி தயிர்நெய்பாற் கருப்பஞ் சாறு தேனுடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர், சிலர்திசைகள் சிலர்நதிக ளாகி நின்றோர் சிலர்மேலோர் சிலர்கீழோர் சீவ ராஞோர். 29

கையினு லறையுண்ணும் பந்து போலக் காலனு லறையுண்டு கணக்கி லாத, மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும் விரகி லார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார், மையினுன் மூன்றுலகாம் பணதி செய்து வருநிற்கும் போமாகி வளர்ந்து வாளாப், பொய் யினுன் மிகவிரியும் வேலை யூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை. 30

தெரிந்துணர்ந்தோ னிவ்வாறு செப்ப லோடுஞ் சீவன்றான் மநப்பதத்தைச் சேர்ந்து நின்றும், விரிஞ்சனெனும் பெயர்பெற்ற தெவ்வா றென்று வித்தாத்தா னுள்ளபடி விளம்பு கென்னு, வரிந்த மன்கேட் டலும்வசிட்ட னுரைப்பான் வள்ளா லந்தநெறி கேட் டலுமே யகில ஞாலம், புரிந்தநெறி யறிதியிதன் றன்மை யெல்லாம் புந்தியுறக் கேட்டுணர்வு பொருந்து வாயே. 31

வேறு.

திசைகால மாதிகளாற் றன்னுடைய சத்தியினாற் றிரியாச் சீவன்
பசையான லீலையினாற் றிசைகால மாதிகளாற் பயின்ற மேனி
யிசையாகின் றுளபோதே சீவனுக்குப் பரியாய மென்னப் பட்ட
வசையான வாதனையின் வசத்தாலே யுலையுமகம் வந்து தோன்றும்.

செயல்செயலின் மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மநச்சத்தி செயலை மேவி, யியல்பின்முத னெய்தாகிச் சத்தவிதை யிரதத்தி லெழுவ தான, வுயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கணத்திலே யுடனே யந்த, வியனலைவின் றன்னெறியா லந்தமநங் கநதையினை மேவு மன்றே. 33

பரிசவிதை யிரதத்தி லெழுவதாங் காற்றசைவைப் பாவித் துன்னும், விரிதருவின் காற்றிரண்டின் மெய்ந்நெருக்கி லேகின்றும் வெந்தீத் தோன்றி, யிருதிறச்சத் தப்பரிசந் திடமாகப் பழக்கமுறு மியல்பி னாலே, யுருவதன்மாத் திரைமேவு மிம்மூன்றி னுடன்மேவு முள்ளந் தானே. 34

கணத்திலிர தத்தியல்பைப் பாவிக்க நீரறிவக் கருத்தி லுண் டாங், குணத்தினையத் திறங்களொடுங் கூடுமநங் கணத்திலே குறித்து நாடி, மணத்தினைப்பா வித்தலுந்தன் மாத்திரத்தாற் பாரறிவு வருமிவ் வாறே, தணத்தபூ தத்தன்மாத் திரம்வளைத்து வளைத்துருவாய்ச் சகமாய்த் தோன்றும். 35

திகழ்ந்தவனற் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணு, மகங்காரமாந் தொழின்மேவிப் புந்தியுடன் விதை யோடு மணுகி யந்தப், புகன்றதெலாஞ் சேர்ந்துபுரி யட்டகமா யுயிர்களுளப் பூவில் வண்டா, மிகுந்தகடுங் கூட்டாவாற் பாவிக்கு மிகவிளங்கு மேனி தன்னை. 36

பாவனைமுற் றிடத்தால மேனியாய் வில்வத்தின் பழம்போற் சித்த, மேவுகரு விற்பாய்ந்த பொன்னிறம்போன் மிகவிளங்கி விமல விண்ணிற், ருவாமுண் டாய்நிற்கு மந்தவொளி தன்னுடைய சுபாவந் தன்னாற், கேவலமேற் றலைகீழ்காற் பக்கங்கை நடுவெயிருக் கிளர்ந்தோ னாகும். 37

முந்தியகா லத்தினல் வெளியாகி நின்மலமா மூர்த்தி யாகிப்
புந்தியொடு சத்துவமொய்ம் புச்சாகம் விஞ்ஞானம் பொறியு மேவு
மந்தவவ னேயகில பிதாமகனாய் முழுதுணர்ந்த வயனு மன்னான்
சுந்தரமா யுத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற நோக்கி.

குன்றாத வறுகுணத்தோன் மூன்றுகா லமும்வெளியாக் குறிக்கும் வேதா, வொன்ருகிச் சின்மயமே யுருவமாய்க் கரைகாணு வுயர்வா னத்தின், முன்ருனுண் டாகியதென் னெனநினைந்தா னழுக்கிலா முழுஞா னக்கண், ணன்ருவப் போதுதித்தோன் பல கோடி சிருட்டிமுத னடத்தக் கண்டான். 39

சாதிகுலந் தருமமெலா முணர்ந்தவற்றை லீலையினாற் ருன்கற்பித்தா
னோதரிய லீலையினாற் சங்கற்பத் தாற்பிறக்கு முயிரை யெல்லா
மேதமுறு கந்தர்ப்ப நகரம்போ லறம்பொருள்வீ டின்ப மெய்த
மேதகைய பலகோடி சாத்திரங்க ளவர்க்காக விதித்தான் வேதா.40

விரிஞ்சனுரு வாமனத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவி *நின்றும்
புரிந்தலரு மலரெல்லாம் வசந்தகா லத்தினாற் பூப்ப தொக்கும்
பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தாற் பிறவி யுற்ருர்
தெரிந்தனைய'சங்கற்ப மறிற்பிறவார் நெய்மாண்ட தீபம் போல. 41

வானநிக ராமனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கு, மானசக நநவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே, யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து

* நின்ற எனவும் பாடம்.

மொன்று மென்றும், ஞானபர மார்த்தத்தா லிவையெல்லாம் பொய் யாக நண்ணு மன்றே. 42

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாங் குடும்பபாரம் வெறும் பொய் யென்றே, யிங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய், சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற் றென் றீதோ நன்றோ, பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட் டாலென் பாச மாயை. 43

தாரதந மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டா, லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ்சிக், கூரிதையா மப்போகத் தழன்றழுக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே, தீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியு மன்றே. 44

ஆனதிறத் தாற்குடும்ப பாரவியா பாரத்தி லணுகும் போது, போனபொருட் கிரங்காமற் பொருந்துபொருண் மாத்திரமே புசித்து வாழ்வாய், தினமுற வருபொருளைச் சிந்தியார் வந்த பொருட் கிதென் றெண்ணார், ஞானபர ரானோர்க்குச் சுபாவமாங் குணமிதுவே நளினக் கண்ணாய். 45

கண்டனவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லனைத்தினும் வெங் காத னீத்த, பண்டிதரா முழுதுணர்ந்த பெரியோரை யீராது பாச மாயை, யுண்டிலையென் பவற்றிடையின் சுத்தமாம் பதம்புந்தி யூன்றப் பற்றி, விண்டவுடற் குட்புறம்பா முலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா. 46

எக்கருமத் திலுமிச்சை யநிச்சையற நின்றுணர்வை யெய்தி னோர்க்கே, யக்கருமங் களிலறிவு பற்றாதா மரையிலைசே ரம்பு போலத், தொக்கபொறி விடயநலஞ் சுவையறநின் மாமாரத் தோன் றில் வீரா, தக்கவுணர் வுணர்ந்தோனுய்ப் பவக்கடல்கள் கடந் தன்றே சாநநந் தீர்ந்தாய். 47

உச்சமுறு பதம்வேண்டி லனைத்துவா தனையிலுநின் றுள்ளந் தன்னை, நிச்சயமா முணர்வாலே நீக்குவாய் மலரின்மண நீங்கு மாபோற், றுச்சமுறு வாதனையாந் தரங்கநீர் பவக்கடலிற் றுளை வார்க் கெல்லா, மச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்று மய லொன் றுண்டோ. 48

பராபரங்கண் டோரனைத்தும் பின்செல்வ ருலகியல்பு பற்றுற் நீங்கார், சுராலயநந் தநவநத்தும் பற்றுர்கள் சூநியத்துந் துயர மெய் தார், விராவுநிய தியுந்தள்ளார் வெய்யவன்போ லநுசரிப்பர் மேன் மை சான்றோ, ரிராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்டமுநி யியம்ப லோடும். 49

பரத்துவகே ளிவ்வாறு பரமமுநி பரமபதம் பகரக் கேட்டுத், திரத்துவமா நிறைந்தான்போற் சிராம னமலமாய்த் தீர்ந்து சித்தந், தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞாந நல்லமுதாற் றதும்பித் தண் ணென், றுரத்துவளர் சந்திரன்போ னிறைவுற்றுன் வசிட்டனு மீண் டுரைப்ப தானன். 50

ஒருகால மரன்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலக மெல்லா, மொருகால மரிபடைப்ப னொருகால முநிவர்படைப் புள்ள தாகு, மொருகாலம் புயத்துதிப்ப னொருகால்வா ரியினுதிப்ப னுயர்ந்த வேதா, வொருகாலண் டத்துதிப்ப னொருகால்விண் ணகத்திலே யுதிப்ப னன்றே. 51

வன்மரங்க ளேநெருங்கு மொருபடைப்பி லொருபடைப்பின் மனிதர் துன்னும், பன்மலைக ளேநெருங்கு மொருபடைப்பி லொரு படைப்பிற் படர்மண் ணருகுங், கன்மயமா மொருபடைப்பி லொரு படைப்பிற் றசைமயமாய்க் காண லாகும், பொன்மயமா மொரு படைப்பி லிப்படியே பலவிதமாம் பூமி தானே. 52

வான்முதலா மண்முதலா நீர்முதலாந் தீமுதலா மற்றை வாயுத், தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று

தலைமை யாகும், யான்முதலோ ரயன்சிருட்டி தரிசநமா வுனக்
குரைத்தே னிந்த வாற்ருன், மேன்முதலா நியமமிதற் கொன்ருக
விலதுபல விதமாய்த் தோன்றும். 53

கிருதமுத லுகநாலு மீண்டுமீண் டுற்பவிக்குங் கிளத்து
ஞாலத், தொருபொருளும் வளைத்துவளைத் தநந்தமடங் குற்பவமா
யுழலா தில்லை, யிருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலை
யா மியாமிங் கோத, வருமறைதேர் தாசூரன் கதைகேட்டி யிராம
வென வறைவ தானுன். 54

வேறு.

இந்தப் புவநத் தூடே யெழிலார் மலரின் பொழில்வாய்
மந்தக் குளிர்கால் கமழு மகத தேசந் தன்னிற்
கந்தக் கதலி கடம்பு கன்னி காரஞ் செறிந்து
சிந்தைக் கினிதா கியதோர் சிறப்பா மலையி னிடத்தே. 55

பரலோ கஞ்சேர் தவமே பண்ணி யயன்போ லுயர்ந்த
சரலோ மாவின் மைந்தன் ருசூ ரப்பெயர் முநிவன்
சுரலோ கத்தின் குருவின் ரேன்றற் கசனை யொப்பா
னரலோ கத்தின் மேலா னவைதீர் தவத்தாற் பெரியோன். 56

தனைய ஞெருவ னேடுஞ் சரலோ மாவா முநிவ
னனைய கிரியின் வநத்தி லநேக யுகஞ்சென் றதற்பின்
புனையுங் கூடு கழிந்து புட்போ வதுபோற் போகி
வினைசெய் யுடலை விட்டு விண்ணோர் வடிவை யெடுத்தான். 57

தனியே யந்த வநத்தே தாசூ ரப்பேர் முநிவ
னினிய தாதை யிறவுக் கிரங்கி யுதகத் தியற்றும்
புநித மான பிரம பூசை முழுதும் புரியான்
கனியு நெஞ்ச னன்றில் கதறு மாபோற் கதறி. 58

தந்தை யன்னை பிரிவாற் சால வெம்பித் தளர்ந்த
மைந்தன் றன்னை யருளால் வநதே வதைகண் டருளி
முந்து ரும னின்று முநிமா மகவா முநிவா
சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோ ரெனநொந் தயரேல். 59

அநித்த மான குடும்பத் தபத்த முணர்கின் றிலையென்
சநித்த பொழுதே மரித்தல் சற்றுந் தப்பா கண்டாய்
பனித்த விழியோ டயர்வாய் பகலோ னுதயஞ் செய்தா
லினித்தன் னிலையத் தமநத் தெய்தா னென்பா ருளரோ. 60

வாளா வயரே லென்று மறைந்து தெய்வ முரைப்பக்
கேளா வுணர்ந்து தளருங் கேத மொழித்து நிலையாய்
நீளா ரணத்தின் படியே நீரின் கடன்கண் முடித்து
மீளா நெறிசேர் தவத்தின் மிகவும் விருப்ப மானான். 61

தக்க பிரம கருமந் தன்னாற் றவமே செய்வான்
றொக்க சங்கற் பத்தாற் சுத்தா சார மிகுந்தான்
மிக்க ஞாந மில்லான் விசுத்த மான புவியிற்
புக்க விடங்க ளெல்லாம் புநித மன்றன் றென்னா. 62

வையஞ் சுத்த மல்ல மாத்தி னுனியே புநித
மைய புட்போ லாங்கே யமர்தற் கான தவமே
செய்ய விற்போ மென்னாச் சிந்தை யார நினைந்து
வெய்ய கனலை மூட்டி விண்ணோர் குழுவை நினைந்து. 63

உடலை யரிந்து வாங்கி யோமஞ் செய்ய லோடுங்
கடவு ளவர்க்கென் முகத்தாற் கலைவே தியன்மெய்த் தசைகண்
மிடறும் புயமு முதல வேவ தென்னே யென்னாச்
சுடருங் கனலோ னினைந்து சுருதி முநிமுன் றோன்றி. 64

கருதிற் றென்ன வென்னக் கைகண் முகிழ்த்துத் துதித்துப்
பரிசுத் தமதா மிடமிப் பாரிற் காணே னதனாற்

றருவிற் றலையிற் றளிர்மேற் றலந்தந் தருள்வா யென்ன
வாமுற் றுதவிக் கனலோன் வாரித் திரைபோன் மறைந்தான். 65

கானத் திடையோர் கடப்பங் காரின் பதத்தைக் கடந்து
வானத் துயர்ந்த ததன்மேல் வருபல் லவமென் றவிசின்
ஞனத் தைய மின்றித் தாசு ரன்று னிருந்து
மேனற் றவமே செய்வான் மிகவும் விரும்பு மனத்தான். 66

வேறு.

ஒருகணந் திசைக ளனைத்தையு நோக்கி யுறைத்தபத் மாதனத் திருந்தான், பெருகிய திசைகண் முழுதினுந் திரும்பிப் பிரமபா வனையறி வரிதாய்க், கருமமாத் திரத்தி னிற்பதாய்ப் பலமாங் கற்கசம் விரும்புறு மனத்தால், வருடமைந் திரண்டு மகங்களே நடத்தி வானவர்க் கவியுண வளித்தான். 67

கோத்திரள் புரவி மனிதரா லியற்றுங் கோதறு வேள்விகண் முற்றுஞ், சாத்திர விதியா லியற்றிநீள் காலந் தவறற நடந்தமை யாலே, மாத்திர மான மனமிகத் தெளிந்து வரம்பில தாதலு மாங்கே, நேத்திர மான ஞானம்வந் தெய்தி நிறைந்தனன் வலிதி னன் னெஞ்சம். 68

பிறவியா வரணங் கழிந்துவர் தனைகள் பேரற மாண்டுள பெரியோ, னிறவிய தளிர்மே லிருத்தலு மொருநா ணிமலமாம் விழிகளுக் கெதிரே, யுறவிரி மலரின் மேகலை யுடுத்த வுயர்வன தேவதை தோன்ற, வறிவனு நோக்கி யார்கொனீ யென்ன வழகிய வணங்குரை செய்வாள். 69

பெரியவர் தம்பாற் பெறலரு நேயம் பெற்றவர் விரும்பிய வெல்லா, மரியன வெனினு மிமைப்பினி லெளிதி லணுகுமென் றய்யமற் றறிந்தேன், றெரிவருண் முனிவ நீயுறை வனத்திற் செறிவன தேவதை யிங்ஙன், விரியலர் கொடியாம் விநோதவீட் டிடையே விருப்பொடு மிருப்பவ ளனே. 70

மேடமா தத்திற் பிறைபதின் மூன்று கலையுற மேவிய நாளி, ஞூடரு மதன னுயர்திரு நாளி னந்தந வநத்திலே வந்து, கூடிய வநதே வதைக்கணந் தன்னைக் குறுகினேன் பாங்கியர் முழுதுந், தேடரு மைந்த ருடன்மகிழ்ந் திருந்தார் சிறுவனில் லாதயான் றளர்ந்தேன். 71

காதலித் தவர்க்குக் கருதிய தளிக்குங் கற்பக மனையநீ யிருப்ப, நாதனே நாத ரில்லவர் போல நான்மகற் கிரங்குத னலனே. நீதரல் வேண்டும் புதல்வனை யன்றி நின்னரு ளென்பொருட் டிலதேற், றீதறு மதலை யிலதெனுந் துன்பஞ் செந்தழன் மூழ்கியே தீர்ப்பேன். 72

என்னலு முநிவ னகைத்தொரு மலரை யீந்தொரு மதியிலே யெளிதா, யன்னமே மகவைப் பெறுதியா னீமுன் னருங்கனன் மூழ்குவே னென்ன, வின்னலால் வலித்து மகவுவேண் டுதலா லினிதுநீ யீன்றிடு மகவும், பின்னுறு வருத்த நெறியினுன் ஞானம் பெறுமெனப் பேசினன் பெரியோன். 73

கேட்டவண் மகவு கிடைத்ததே யென்று கிளர்முக மதிநிலாக் குலாவ, மீட்டுமம் முநியை நோக்கிநின் னேவல் விரும்பியீண் டுறைகுவ னென்ன, வாட்டமின் முநிவ னியைந்திலன் விடுப்ப வந்தன ளணங்குதன் னிடத்திற், சேட்டமா மகவை யளித்தனள் கலையாற் செறிதரு மதியென வளர்த்தாள். 74

இருதுவே யாண்டே யெனுங்குறி களினு லிறந்தன வாறிரண் டாண்டு, திருமுநி பாத மகவொடு மடைந்து சென்னிதாழ்ந் தெதிருற நின்று, பெருமைகண் டருள்வாய் நீதர யானே பெற்றவிப் பெருங்குணக் குமர, னருமறை நூல்க ளனைத்தையு நானே யளித் திட வறிவினு லறிந்தான். 75

கலையெலா நிறைந்தும் பிறப்பிலா ஞானங் கண்டிலன் கடற் பவத் துயரா, லலைவுறு நின்றன் றனையுணர் ஞான மளித்தியென்

றணங்குரை செய்ய, நிலைகொண்மா ணுக்க னமக்கிவ ணுக்கி நீயகல் கெனவவ ளகன்று, டலைமைசேர் முநிவன் ருளிணை விடாது சற்குண மதலையு நின்றுன். 76

வருந்திமெய்ஞ் ஞாநம் பெறத்தகு மகவை மாதவ னருளினுன் மெல்லத், திருந்திய கதைக ளளவைக ளிதிகா சத்திலே செப்பிய திறங்கள், பெருந்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம்பொருண் மற்றும், பொருந்திய நெறிக ளநேகமாய் விரித்துப் பூரண போதமே புகன்றுன். 77

வானதி மூழ்க வதுநெறி யாக வானிலே மறைந்துபோ யொருநா, ளானவேழ் முநிவர் பதவிநின் றணுகி யனையதா சூரன் வாழ் கடம்பின், ருநமே மேவி யிருட்பொழு திருந்து தாபதன் றநயனுக் குரைத்த, ஞாநநற் பொருள்கள் கேட்டன மதனை நாமுனக் குள்ளவா றுரைப்பாம். 78

பிறப்பிலாப் பிரம மிதுவென வறுதி பிறப்பதோர் கதையிது கேளாய், சிறப்பதோ ராசன் வீரமும் புகழுஞ் சிறந்தவன் றெளிஞ ஞம் பெயரோ, னிறப்புறு முலக பாலரா யுள்ளா ரவனுடை யேவலை முடிமே, னிறப்புறு மணிபோற் றங்குவ ரெவர்க்கு நிலை பெற நிறுத்தொணு நெடியோன். 79

சாகச மொன்றும் விரும்புவோன் பலவாச் சாலவும் வியப்புறு தொழிலோன், சோகமு மகிழ்வுந் தருவதாய் முயலுந் தொழில் களின் றெுகுதியை யெண்ணின், மாகட லலைக ளெண்ணினுந் தொலையா வாட்படை வாயுவந் நிகளி, லேகமு மிவனை யடர்வுறு தாகு மிருகையால் விண்ணையென் செயலாம். 80

வரம்பற விரிந்து லீலையாற் புரியு மட்டறு முயற்சிக ளனைத் துந், திரம்பெறு தேவர் மூவரா லெனினுஞ் சிறிதுபிற் செல்லவு மரிதாம், பரம்பிய விவனுக் குடலமா யெல்லாம் பரிப்பவர் மூவருண்

டனைய, ருரம்பயி லுலகை யடர்ந்துநிற் பவர்க ளுத்தமன் மத்திம னதமன். 81

முடிவிலா விசும்பிற் ரேன்றியாங் குறைவோன் மூவகை யுடலுடை முதல்வ, னெடியவவ் விசும்பி லவன்றரு நகர நீண்டவீ திகள்பதி னலா, மொடிவறு பகுதி மூன்றினு லெழிலா ருபவநம் வநங்கள்செய் குன்றங், கொடிநிகர் முத்த மாலையேழ் வாவி குளிர் கொதிப் புளவிரு தீபம். 82

என்பன நிறைந்த விந்நக ரத்தி லிவன்றரு மபவர கினங் கண், முன்புறு கீழ்மே னடுவெனும் பதங்கண் முழுதினு முழல்வுற விதித்த, வன்புறு தூண்கண் மூன்றுள வெலுப்பு மரங்களாற் செறிந்தன புண்ணீர், மென்படர் தோலா னெய்த்திணி தான விரிமயிர்க் கற்றையான் மேய்ந்த. 83

மந்தமா ருதஞ்சூழ் சாலக மொன்பான் மருவின வைம்பொறி யென்னுஞ், சுந்தர விளக்கால் விளங்குவ விரண்டு தோளெனுந் தோற்றமு முடைய, வந்தமில் பரம பாவனைக் கஞ்சு மகங்காரப் பேய்கள்காத் தளிப்பச், சந்தத மிலாத மாயையா லந்தத் தாணிபன் சமைத்தபா வறைகள். 84

அசைதரு மினிய பாவறைத் திரளி லகங்காரப் பேய்களோ டுலாவிக், குசைதரு விநோதம் விவிதமா வியற்றிக் கூடுறை புள்ளென வுறைந்து, விசையினு லவற்றை விட்டகன் றயலே மேல்வரு பாவறை விதித்து, நசையுற மேவிப் பூதவா வேச நண்ணினர் போலவ னடிக்கும். 85

இவற்றைவிட் டவற்றை யெய்துவ மென்றே யெண்ணுற வப்படி யெய்து, மவற்றினின் றிறப்போ மென்றெணு நினைவா லப்படி யிறந்துபோஞ் சித்தங், கவற்றியா லலையப் பிறந்திறந் துழலுங் ககநமே யிவற்றினுக் கிடமாந், தவற்றினை யெய்தி மீளவுந் தோன்றுந் தவழ்திரை நீரிலே வால்போல். 86

மேனிமூன் றுடையோன் சிறந்தகந் தர்ப்ப விதித்தனு ரனைய
தற் புரத்திற், ருனினி திருந்து தொலைவற மேன்மேற் றழைப்புறு
காரிய வசனு, யீரமா மொருகா னன்மையா மொருகா லென்
செய்வோ மென்றிடு மொருகான், மானமா மொருகான் மயக்குறுந்
தெளியும் வருந்துறு மகிழ்வுறும் பல்கால். 87

தளர்ந்தன னென்னுந் தடித்தன னென்னுந் தாழ்ந்தன
னுயர்ந்தன னென்னும், வளர்ந்தன னென்னுங் குறைந்தன
னென்னு மாருத மோதுறு கடல்போ, லுளந்தனு லந்த மன்னவன்
சுழல்வ துரைப்பதெ னென்றலு மைந்தன், கிளர்ந்ததா தையைநீ
தெளிஞனென் றுரைத்த கீர்த்தியோ ஞரெனக் கேட்டான். 88

உண்மையா லந்த மன்னனை யுரைத்தால் வரும்பிறப் பிறப்
பெனும் பொய்யி, னுண்மைநன் குணர்தி யென்றுதா சூர னுத்தம
மைந்தனுக் குரைப்பா, னெண்மய மாகிப் பொய்யெனத் தோன்றி
யிடமுற விரிமுயற் சியதாய்க், கண்மய லான பிறவியி னிலையைக்
கட்டுரை யாகமுன் னுரைத்தோம். 89

தற்பர விசும்பி னுதித்தசங் கற்பஞ் சாற்றிய தெளிஞனு
மன்னன், பற்பல காலுந் தோன்றியு மறையும் பரம்பிய வுலகதன்
வடிவா, மற்பசங் கற்ப முளதெனி னுலகுண் டதுவில தெனினுல
கிலதா, முற்படு மூவர் முதலிய தேவர் மொய்த்தமெய் யவயவ
மதற்கே. 90

மேயதன் பத்திப் பாச்சன்மாத் திரத்தால் விரிஞ்சனும்
பாவனை மேவி, யாயசங் கற்பம் வடிவிலா விண்ணி லமைத்தது
முப்புவி நகர, நாயக ரீரே ழாகிடு மீரேழ் ஞாலமே னகருறு
தெருக்க, டேயஞா லங்கள் செறிபொழிற் றிரள்கள் சொல்லிய
வநமுப வநமே. 91

மேருமந் தரமே முதலவந் நகரின் மேவிய விநோதவெற்
பினமாஞ், சூரியன் றிங்கள் காற்றினு லசையாச் சுடர்களா கித்தில

மாலே, நீருயர் நதியின் றிரள்களாம் வாவி நிகழ்த்திய வேழெனு மவைதான், பேரியல் வடவை கமலமாய்ப் பூத்த பெருங்கடலேழுமே பெரியோய். 92

இனையமா நகராஞ் சகத்திடை முன்ன மியம்புசங் கற்பமன்னவனல், வினையினல் வந்த வுடல்கள்பா வறையா மேற்பதத் திமையவ ரென்றும், வனையகீழ் பதத்தி னுகரே யென்று மனிதரே நடுப்பதத் தென்றுந், தனைதரு வாத வெந்திர விசையாற் சுழல்வன தசைச்சுவ ரகங்கள். 93

பல்வகை தானே யியங்குறு முடலாம் பாவறை தோறுமவ் வேந்த, னல்வழி யுணர்வை நோக்குற நடுங்கு நலமிலா வகங்கார மென்னும், வல்லவிப் பேய்கள் பொய்களா யிருந்தும் வந்துமெய் போலெழு மவற்ருே, டொல்வதாம் விநோதம் புரிதருங் கணத்தி லுண்டுமா மில்லையு மாகும். 94

காயமென் றுரைத்த பாவறை தோறுங் கடலிடை யலைகள் போற் ருேன்றி, மாயுமே வியற்று மனைகளில் விடாமல் வருமிவ னியற்றிய வெல்லா, மேயதோர் கணத்தில் வீண்களாய் நசிக்கும் வீணிலே திரிதரு மிவன்ருே, னுயதன் சங்கற் பத்தினு விருக்கு மவ்வள வருந்துய ருழக்கும். 95

இறையுமோர் சுகமற் றிரங்குவோன் ருனுண் டென்பதோர் பாவனை யாலே, நிறைசக மியற்றுந் தானில தென்றே நினைத்திடி லக்கணத் திறந்து, குறைவறு கதிர்முன் னிருளெனப் போகுங் குறித்தசிற் றின்பமுற் றமிழு, முறைவுறு மிவனுக் குடல்கண்மூன் றுளவா முத்தம மத்திம மதமம். 96

முக்குணந் தானே மூன்றுட லாகி மூலமா மூன்றுல கிற்கு, மக்குணந் தன்னிற் றமங்கொள்சங் கற்ப மாவது பகுதியின் செயலாற், றுக்கமாய் வுருந்திப் பாதலப் புழுவாந் தாயசத் துவங்கொள்

சங் கற்ப, மிக்காற் றரும ஞாநம்வீ டௌதாய் வேந்தர்வேந் தென மிக விளங்கும். 97

இராசத குணசங் கற்பமிவ் வுலகி லியல்புறு குடும்பியா யியங்கும், விராவிய விந்த மூன்றையும் விட்டு மெய்ம்மையாய்த் தானில தென்னி, னிராகுல மாக வனையசங் கற்ப நிமலமாம் பரபத மடையுந், துராசையாம் பார்வை யனைத்தையு நீக்கித் துகண்மாக மாத்திறு னிறுத்தி. 98

உள்ளினும் புறத்து மெழுந்தசங் கற்ப மொருக்கிட வொருப் பட நினைவா, யெள்ளருந் தவங்கள் கற்பகோ டிகணீ யியற்றினும் பாதலம் பூமி, தள்ளருந் துறக்க மேவினு முனக்குச் சாற்றுசங் கற்பமாய் வல்லாற், றெள்ளிய பரம பதத்தினை மேவத் தியக்கமி லுபாயம்வே றில்லை. 99

துயர்களும் விகாரங் களுமிலாப் பிரம சுகஞ்செய்சங் கற்பநா சத்தை, முயலுதி நனிசங் கற்பமாங் கயிற்றின் முடிவறு பாவனை யெல்லா, மியல்புறு கோவை யாலெழு மந்தக் கயிற்றினை யெளி தினி லறுத்தான், மயல்கொள்பா வனைக ளெங்ஙனே தூளாய் மடியுமோ வறிகில மைந்தா. 100

துனிசெய்சங் கற்ப மின்றிமுன் வந்து தோன்றிய தொழில் வழி நிற்பாய், பனிசெய்சங் கற்ப மாண்டிடி லறிவு பார்வைக ளனைத்தினும் பற்றுத், தனியுயர் பிரம பதமடைந் தகில விகற்பமாந் தனையெலாந் தள்ளி, யினியனு யேகத் துவத்திலே சுழுத்தி யிதய முற் றின்பமே பெறுவாய். 101

என்னலு முயர்சங் கற்பமே தென்ன வெழுந்ததும் வளர்ந் ததுமாய்ந்து, சன்னமா கியது மெங்ஙன மென்று தவஞ்செய்தா சூரனை மைந்தன், பன்னியே கேட்ப வதற்கவ னுரைப்பான்

பரமமா யுண்டெனல் வடிவாய், மின்னிய சமமா மறிவுகாண் பவற்
றின் மேவுற வெழுதல்சங் கற்பம். 102

அற்பமா யெழுந்து தானுள தாகி யடைவிலே பையப்பையப்
பருத்துத், தற்பர மநமாம் வெளியினை மூடிச் சடத்துவந் திடத்தி
லுண் டாக, வுற்பவ முகில்போல் வளர்வுறு மைந்தா வுணர்வுகாண்
பவற்றினை யுன்னி, நிற்பதாந் தனக்கு வேறுபோற் கண்டு நிகழ்த்து
சங் கற்பமாய் நிகழும். 103

அறிவெனும் விதைசங் கற்பமா முளையா மனையசங் கற்பமாந்
தன்னைப், பிறிவுறத் தானே செய்துதான் பிறக்கும் பெரிதுற
வளர்ந்திடுந் தானே, செறிதுய ரொழிய வின்பமொன் றில்லை யாத
லாற் செப்புசங் கற்ப, நெறியுற நினையே னிற்புறு நிலையி னிமிட
மும் பாவனை நினையேல். 104

இவ்வள வான பாவனை யாலே யின்பமா மினையசங் கற்பங்,
தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாந் தாக்குபா வனையெலா
மொழித்த, வவ்வகை யாலே யிறந்துபோந் தன்னெஞ் சலர்வுறு
பூவினைக் கசக்கிற், கைவரு வருத்த மொன்றுள தாகுங் கழறிய
விதற்கது வேண்டா. 105

எழுந்தசங் கற்ப பாவனை விட்டா லிறந்துபோ மிதனையிங்
கிதனு, லழுந்துற மாய்த்து மநத்தினுன் மநத்தை யறுத்துநின்
னறிவினீ நிற்பா, யுழுந்துருள் பொழுதின் முடியுமீ தரிதோ வுலக
மும் வாநமு மொக்கு, முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பத்தான்
முளைத்தவை யன்றிமுன் னிலதால். 106

தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சம்பந்தந்
தொழில்விசே டத்தால், விண்டுபோ மதுபோற் புருடனு மலத்தை
மேவியே போக்குத லியலுங், கொண்டசந் தேக மொழித்துநீ
முயல்வாய் குருவின்வல் லபவிளக் கந்தாங், கண்டன மெனல்வீ
ணுருநீ தானுங் கண்டன பரம்பொருட் பொலிவே. 107

எனவவ ருரைத்த யாவையுங் கேட்டவ் விரவிலங் கவரைநா
னெய்த, மநமகிழ்ந் தருச்சித் தென்னொடத் தளிர்மேல் வதிந்தன
ணிருவரு மெய்ம்மைக், கநகதை களினுற் காதலுற் றவர்போற்
கங்குலைக் கணமெனக் கழித்தவ், வநகனை நீங்கிக் கங்கையுற்
றனனு னவன்கதை போலுமிச் சகமே. 108

## 4—4. தாசூரன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—739.

---

## 4—5. கசன் கதை.



முடிவறு காலந் தன்னின் மொழிதரு மாண்டு நூறு
நொடியள வெனினும் பற்று திதனையே நெடிதாய் நோக்கி
யொடிவறு பார வேட்கை யுறுவதென் பொருள்க ளுன்னிப்
படர்வதா முள்ளத் தாசை பற்றற வொருக்கி நிற்பாய். 1

மாலற வெங்ங னின்று மங்ஙனே வாழ்வாய் பாரிற்
கோலநன் மணிகள் வேண்டா திருக்கவுங் குறுகிப் பாயுந்
தூலநன் னிழல்போ லுண்டா மாத்திரந் தோற்ற மான
ஞாலமும் பரமந் தன்னி னலம்பெறத் தோன்று மன்றே. 2

ஆதலாற் பரமந் தன்பா லகர்த்தனே கர்த்த னேயென்
றோதுபா வனைக ளுண்டா முற்றபற் றிலாமை யாலே
சாதமி லகர்த்த னகுஞ் சந்நிதி மாத்தி ரத்தான்
மேதகு கத்த னுமிவ் விரண்டலால் வேறு மேவா. 3

அகத்தனிற் கத்தன் றன்னி லமைந்ததே ததனி னிற்பாய்
முகத்தமா மிரண்டு மின்றி முளைத்தெழு மநதை நுங்கி

மிகத்தனி திரமாய் நிற்றி யகத்தனு விளம்பு நேரிற்
சுகத்தனு நிற்றி யேனு நன்றிது துயரொன் றில்லை. 4

முன்னிய கத்த னாகி யான்சக முறைசெய் கின்றே
னந்நிய நினைவி லாமை யாலதில் விகார மில்லை
யென்னது நீநான் செய்தேன் செய்திலே னென்னும் பார்வை
யுன்னிய பொழுதே துன்ப முடலைநா னென்பா ருண்டோ. 5

மொய்யுட லுனே யென்னின் மூவேழு நரகு மஃதே
வெய்யவன் றுயரா மேனு மெய்யையா னென்ன வேண்டா
வையமில் கேள்வி நல்லோர் நினைவரோ வனைத்தா மூனுங்
கையுறத் தின்ப ரேனு நாய்ப்பிணங் கவரார் நீசர். 6

நாமுட லென்னு மாசான் ஞாநக்கண் குருடாய்ப் போகுந்
தோமுறு மதனைத் தாரத் தூர்ப்பரேற் சோதி ஞாந
மாமுகி லிலாநி லாப்போல் வயங்கிடு மினைய கண்ணு
லேமுறு பிறவி வேலை யிருங்கரை யெளிது தோன்றும். 7

அனைத்தினுங் கத்த னல்லே னவனிவ னல்லே னென்ன
நினைத்துளத் துறுதி யாகி நிற்றியா லஃதின் றென்னி
லனைத்தினுங் கத்த னுனே யளவறு மதுநா னென்ன
நினைத்தசை வொன்று மின்றி நிச்சய மாகி நிற்பாய். 8

அன்றெனி லொன்று மல்ல வொன்றுநா மாகு மென்றே
நின்றவிப் பதத்தி னன்று நின்பதந் தனினீ நிற்பா
யொன்றெனும் பதத்தைக் கண்ட வுத்தமர் தன்பா னிற்பர்
துன்றுவா தனையே பந்தந் தொல்லைவீ டதனைத் தீர்தல். 9

புலன்களிற் பழகிச் சித்தம் பூண்டவா தனைகண் முன்னே
யலம்பெற மாற்றி வீட்டிற் கடுத்தவா தனையுந் தீர்வாய்
நலந்திக ழருள்சந் தோட நட்புதா சிநமிந் நாலு
மலந்தவிர் குணங்க ளாக மநத்தமுந் தாது செய்வாய். 10

உள்ளுறு தொழில்கண் முற்று மொருக்கியோ ருணர்வைப் பற்றி
மெள்ளவாங் கதுவு மந்தக் கரணங்க ளுடனே விட்டுத்
தள்ளுவ வெல்லா மெத்தாற் றள்ளினு யதுவுந் தள்ளித்
தெள்ளுணர் வுள்ளஞ் செய்கை தேசிரு ளனைத்துந் தீர்ந்து. 11

வாதனை வடிவ மான விவைகளு மற்றி வற்றைப்
பேதமாய்ப் பழகு வோனும் பிராணனி லியக்கந் தானு
மியாதுமூ லத்தோ டீர்த்து விண்ணக மென்ன நின்ற
லியாதுதீர் சாந்த னுயென் னுயினை யதுநீ மெய்யால். 12

உளத்தினி லனைத்து மாற்றி யுலகிலோர் பற்ற தின்றித்
துளக்கிலா நிலையி னின்றோன் றுகளறு முத்த னுவா
னளக்கரு மீச னுவா னவன்மிகு சமாதி தானுங்
கொளத்தகு கருமந் தானுங் கூடினும் விடினு முத்தன். 13

இருதயத் தாசை யொன்று மிலாமையா லெண்ணப் பட்ட
கருமங்கள் செய்துந் தீர்ந்துங் கையுறு பயனென் றில்லை
யொருவழிப் படநீள் கால முளமொருப் படுத லாலே
பெருகுவா தனைதீர் நெஞ்சிற் பேசுநா லனைத்தும் வேண்டா. 14

மறுகுவா தனைக டீர்ந்த மௌனத்தை யொழிய வேறோ
ருறுகதி நல்ல தில்லை யுணர்வன வுணர்ந்த தாகுந்
துறுதிசை பத்துஞ் சுற்றி மீண்டதாந் தொல்லை ஞாலத்
தறுதியா யுண்மை கண்டோர் சிலர்பின்றோ ரவத்தின் மாய்வோர். 15

தேகத்தை நோக்கி யன்றோ செகமெலாந் திரிவ தல்லா
லேகத்தை நோக்கி யன்றே வெங்கணும் பஞ்ச பூத
நாகத்தை மண்ணைக் கீழை நாடினு மாறு காணே
மோகத்தை விடுது மென்றே திடமுற்றோர் முழுதும் பற்றோர். 16

ஊகமின் மூகர்க் கெல்லா மூழிவெங் கடலாஞ் செந்ம
மோகமி லூகத் தோர்க்கு முன்னுறு கோவின் முளாஞ்
சோகமின் ஞாநி நெஞ்சிற் றொடர்ந்தசிற் றின்பம் பற்றுப்
போகமில் சிற்றூர்ப் புன்பெண் பொலிநகர் விடலைக் கென்னும். 17

பிரமமாஞ் சுத்த வேலை நுரைகளாம் பிறங்க லெல்லாம்
பரமவா தித்தன் முன்னர்க் கானலாம் பரவை ஞாலந்
திரமதா மிதனை முன்னே செப்பினன் வியாழன் றந்த
வரமகன் கசனும் பேரோன் மற்றது வள்ளல் கேட்பாய். 18

கசனுயர் சமாதி நீங்கி யொருபகற் களிக்கு நெஞ்சன்
வசமறத் தழுத முத்த வசநத்தன் யாது செய்கேன்
றிசையுற வெங்கு செல்கேன் றீர்ப்பதென் கொள்வ தென்று
மிசையுயர் கற்ப நீர்போன் மேதினி யெங்கு நானே. 19

மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்
வானில்லை யகத்தி லெங்கு நானன்றி மற்றொன் றில்லை
யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லைத்
தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா நந்த மென்றான். 20

### 4—5. கசன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—759.

---

## 4. திதிப் பிரகரணம்.

பெற்றகோ ளுதசத் துவகுணப் பிறப்பினர் புவிமேற்
சிறத்து வாழ்வது வான்றிகழ் நிறைமதி நிகராம்
வற்குறு துன்பத்தில் வாடல ரிரவுதான் வரினுஞ்
சிறக்கும் பொற்கம லத்தலர் குவியுமோ சிறிதும். 1

பகுத மன்றியே மற்றுள தொழில்களிற் பற்றூர்
தகுதி யாகிய மேலவர் நெறியிலே சரிப்பர்
மிகுதி யானிறைந் தசைவறு முளத்தினுன் மிகுவர்
தொகுதி யானநட் பருண்முதற் குணங்களாற் சுடர்வார். 2

இயற்கை யாகிய குணத்தின ரிழிவுயர் விரண்டு
நயக்க லாதவர் சமமுளோர் நன்னெறி நடப்போர்
வியக்கு மாறுதன் கரைகடா வேலையை யொப்போர்
மயக்கி லாதவ ரிரவிபோ னியதியை வழாதோர். 3

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
யெள்ளற் பாலதா முலகமே தியாமெவ னென்றே
தெள்ளற் பாலது குரவரா லறிவினுற் றீர. 4

வருந்து கிற்பது தனையறி நெறியிலே மநத்தாற்
றிருந்து கிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்து கிற்பது தீயவ ரல்லவர் புணர்ச்சி
யருந்து கிற்பது நானென்ப தாக்குகிற் பதுவே. 5

தீர்க்கத் தக்கது நரம்பெலும் பெனுமுடற் றியக்கம்
பார்க்கத் தக்கது முழுதுயிர்க் குள்ளுறை பரம
மீர்க்கத் தக்கதே ரிரவியி னிடத்திலும் பாரி
னீக்கத் தக்கிலாப் புழுவினுஞ் சித்தொன்றே நிற்கும். 6

தாம தத்துட னிராசதஞ் சாத்திக மென்னு
நாம முக்குணப் பிறவியு முயற்சியா னண்ணுஞ்
சேம முத்தியைச் செய்திடுஞ் சாத்திகச் செய்கை
யிராம வுத்தம ராகவ வென்றுமீட் டுரைப்பான். 7

4. திதிப் பிரகரணம் முற்றிற்று.

ஆக விருத்தம்—766.

# 5. உபசாந்திப் பிரகரணம்.

## 5—1. சநக ராசன் கதை.

சுரர்குருவின் மகனுரைத்த படியேயிவ் வுலகெலாஞ் சொரூப மாகும், விரவியநீள் பிறப்பிறப்பா மிம்மாயை யிராசததா மதத்தை மேவும், புருடார்தரித் திடவற்ருய்த் தூண்சுமக்கு மண்டபமே போல நிற்குந், திரமுளசத் துவகுணத்துன் போல்வார்கள் சநநபயந் தீர்ந்து நிற்பார். 1

வழுவறுசத் துவகுணத்தோர் தோலுரிக்கு மரவென்ன மாயா பாச, நழுவுவரெல் லாம்பிரம நாமதுவே யென்றெண்ணி நாமும் வேறே, முழுதுலகம் வேறென்னு மோகமொழிப் பாய்பிரம மூலச் சித்தி, லெழுவனகற் பனையெல்லாங் கடலிலலை போன்மெய்யா யில்லை யன்றே. 2

சோகமிலை மோகமிலை பிறப்பில்லை பிறப்பிறப்பிற் சுழல்வா ரில்லை, யேகமென விங்கென்று முள்ளபொருளேயுள்ள திரங்க வேண்டா, மூகமுற வருவனபோ வனநினையேற் ருெந்தனைக ளொன்று மில்லா, மாகநசத் துவகுணத்தோ டொருவனு யிடரெல்லா மாற்றி நிற்பாய். 3

சமமாகிச் சொரூபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்த ஞகி, யமர்மநந மௌநியாய் நன்மணிபோற் றெளிந்துதுய ரனைத்துந் தீர்வாய், நிமலமுற நிகழ்காலத் தொழிற்செய்தி யாவையினு நேய மின்றி, நமதெனக்கொள் ளுதல்விடுத லிரண்டுமறத் துன்பமெலா நாசஞ் செய்வாய். 4

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதி லுண்டாம், பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலல் லாற் படுவ துண்டோ, செநித்தவரின் மேலோராய் நல்லோராய்

மித்திரராய்த் தெளிந்தோ ராகி, யகித்தமறு முத்தராய் ஞாநிகளாங் குணமெல்லா மவரைச் சேரும். 5

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்புந் தன்மை, கொத்தொன்று வநமூங்கிற் குழலிசையான் மகிழ் விலங்கின் கூட்டம் போலு, மித்தன்மை யாவருக்கும் பொதுமை யினு லியம்பியதா மிதனில் வேறாய்ச், சத்தென்ற வழியிரண்டேழ் பவந்தீர்ப்ப வர்க்கவற்றைச் சாற்றக் கேண்மோ. 6

தேசிகன்சொற் பிழையாம லநுட்டிக்கிற் பையப்பையத் தியக்க நீங்கிப், பேசியசென் மத்தாத லடுத்தசில பிறப்பினு லாதல் பேறும், மாசறுவிற் பத்திசிறி துண்டாகு மநத்தாற்றன் மநநத் தாலே, யேசறுமா காசபலம் வீழ்வதுபோன் மெய்ஞ்ஞாந மெளிதி லுண்டாம். 7

இவ்விரண்டி லாகாச பலம்போல மெய்ஞ்ஞாந மினைந்த தன்மை, செவ்வியவள் ளான்முன்னோர் கதையாலே யான்செப்பத் திருந்தக் கேட்பாய், தெவ்வுலகி லாபத்தென் றொன்றுமிலோன் விதரணத்தோன் செல்வ மிக்கோ, னவ்வியமில் விதேகநா டரசாள் வோன் சநகனெனு மரசர் கோமான். 8

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்கு வீரா, னற்குணஞ்செய் வசந்தனு ணறுமலர்சூழ் நந்தநத்தி னயந்து மேவி, தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனுய்ச் சரிக் கும் வேலே, சிற்குரிய மநமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியிற் கேட்டான். 9

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்பு கீத, நெறியார்மன் னவன்கேட்ட படியுரைப்ப நெடியவனே நினைவிற் கொள்வா, யறிவானு மறிபொருளுங் கூடியகூட் டரவி லெழு மறிவா நந்தம், பிறியாத வாந்மதத் துவத்தெழுந்த தாமதனைப் பேணல் செய்வாம். 10

காண்பானுங் காண்பனவுங் காட்சியும்வா தனையுடனே கழல விட்டுச், சேண்பாவு காட்சிக்கு முதலொளியா மச்சொருபஞ் சிந்தை செய்வா, மேண்பாலா முள்ளதில தெனுமிரண்டி னிடை யெய்தி யிறவி லாதாய், மாண்பான வொளிக்கெல்லா மொளியாமச் சொருபத்தை மதித்தல் செய்வாம். 11

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தநவரத முரைப்ப தாகி, நிகழொளியா யாத்மதத் துவமான சொருபத்தை நினைத்தல் செய்வாந், திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந் தேடன், மிகவரிய கௌத்துபத்தை யெறிந்துசிறு மணி தேடும் வேட்கை போலாம். 12

மாளாத காதலெனும் வற்சநா பிக்கொடியின் வநத்தைச் சுட்டு, நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றே விப்பயன்று னேரா நிற்குங், கோளான பொருளனைத்தின் முன்பொடுபின் பினிமை யிலாக் குற்றங் கண்டு, மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறொன் றன்றால். 13

எழுந்தெழுந்து சீறுகின்ற விந்திரியப் பாம்புகளை யிதயந் தன்னி, லழுந்துவிவே கத்தடியால் வச்சிரங்கொண் டிந்திரன்வெற் படர்வ தென்ன, விழுந்திடமோ துறவேண்டுஞ் சாந்தியினுற் சமமேவி யிடர்தீர் நெஞ்ச, முழுந்துசுக வடிவாந்தற் பதநிலையைப் பெறுமிதுவே முத்தி யென்ன. 14

தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப்பா டியகீதந் தெளியக் கேட்டுக், களிதருவெஞ் சினக்கருட னொலிகேட்ட பாம்பென்னக் கலங்கி மன்னன், குளிர்பொழினின் றகமடைந்தா னனைவரையும் விடைகொடுத்துக் கோயில் புக்கா, னளிர்சுதைசெய் மேனிலத்தி லொருவனே யிருந்துன்னி நாட லுற்றான். 15

பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன வநவரதம் பதைத்து லாவி, யிறக்கின்ற வுலகநடை நோக்கிவாய் விட்டிரங்கி யியம்ப

லுற்று, னறக்கன்றி யவத்திலுழன் றலமருமிவ் வுலகிடையா னந்தோ வந்தோ, நிறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலு ருண்டு நெரிந்தே னந்தோ. 16

காலமொரு கான்முடியா திதனிடையெண் ணுருண்டோர் கணமு மில்லை, சாலவிது தனைமதித்து வன்காத லிடைவீழ்ந்து தளர்வ தேனுன், ஞாலமதி யாற்கெட்ட வெனைப்போல வினரார் சொல்லற் பாற்றே, சீலமறு வாணுளைப் பெரிதாக நினைவதே சீசீ யந்தோ. 17

எல்லையிலா வண்டத்தி லியானுளும் புவிநோக்கி லிறையு மில்லை, யல்லலுறு மிதுபெரிதா வாதரித்து நிற்பதே யந்தோ வந்தோ, புல்லிமையற் றினிதாகி யுதாரமாச் செயப்படாப் பொருளீ தென்னத், தொல்லுலகி லொருபொருளுங் காணேனித் தொடர்ச்சி நிலை யென்னே யென்னே. 18

தலைவர்தலை மேலுறைவோர் நாட்களினுற் றுழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர், நிலையில்பெரு மையையுறுதி நினைக்கின்ற நெஞ்சே யின் னினைவீ தென்னே, தொலைவில்பெரும் போகங்கள் பெரி யோர்கள் கிளையோடுந் தோன்றித் தோன்றி, யுலைவுறமாண் டார் முன்னு ளிந்நாளிங் கிவையனைத்தி லுறுதி யென்னே. 19

மண்ணுடு மன்னவரு மவர்தமு மாண்டன நுண் மணலை யொக்கும் விண்ணுடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவிண் மீனை யொக்கு மெண்ணுடும் பிரமருமண் டமும்பூதங் களுமிறந்த வெல்லை யில்லைக் கண்ணுடு மவையெங்கே நின்வாழ்க்கை நிலையென்னே கவலு நெஞ் சே. 20

செல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத் தியக்க மான, பொல்லாத நீள்கனவாஞ் சூநியத்தி லிச்சையிறை பூண்டே னென்னிற், கல்லாத புல்லியனேன் சீசீநா னநவரதங் காணு நாட்க,

ளெல்லாம்போ யினபோமா விறவாதொன் ருய்நன்ரு மெழினுட் காணேன். 21

நடுவின்முடி வினிலடியி னன்ருன பொருளொன்று ஞாலத் தில்லைப், படுபொருளெல் லாமிறப்பா மலத்தினு லேபூசப் பட்ட தன்ரே, கடுவினைக ளுடோறுங் காய்துயர நாடோறுங் கரை யொன் றில்லாக், கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்ரு ரறிவில் லார் குரம்பைக் கூத்தால். 22

பாலகனு யஞ்ஞாநத் தழுந்துவனற் காளையாய்ப் பாவை மாராற், சாலவருந் துவன்விருத்தன் ருணுகிக் குடும்பத்தாற் றளர்ந்து சாவ, னேலவிவ னெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்த வாறே, ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேள மாய்மநப் பேய் நடிக்கு மன்றே. 23

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகி லென்றுந், தெள்ளுற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமை வாழு, மெள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்க ளிருக்கு மென்ருற், கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொரு ளேது குறிப்பு ளேற்கே. 24

விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமா மேலோ ருண்டாற், பழிப்பரிய வன்னுர்முன் னென்போல்வா ரென்னென்று பகர லாவ, ரிழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங் காயி, லொழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம் வேண்டில். 25

வெம்மாய வாழ்வன்ரே துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விளம்பு கின்ற, தம்மாவிங் கிதனிடையே யழுந்துமவர்க் கின்பமுள தாவ தெங்ஙன், மைம்மாயை யென்னுமரம் பணையிலைபூ காய்பழத் தால் வரம்பற் ரேங்க, விம்மால்செய் மாம்வேரா மிம்மநந்தான் சங்கற்ப மென்ப தாகும். 26

சங்கற்ப நாசத்தா லெளிதாக மநநாசந் தானே யெய்து, மங்குற்ற மநமிறக்கிற் சநநமர ணங்களெனு மாமு மாயு, மிங்கிப்பா லெனைத்திருடுங் கள்ளனைக்கண் டேன்கண்டே னிவன்பேர் நெஞ்சம், பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாளெனுந் தேனின்று பொன்று விப்பேன். 27

இத்தனைநாண் மநமுத்தைத் துளைத்திலே னின்றுதுளைத் தியைந்த நூலாற், சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தே னெல்லாஞ், சுத்தபர மாநந்தந் தோற்று விக்கு நல்லறிவாஞ் சோதி பெற்றேன், மெத்தவிவ னெனதிங் கிவையெனும்பொய் யுள்ளொழித்தேன் மீண்டு நாடேன். 28

பேதிக்கு மநமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன், வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாந்த வாழ்வு பெற்றேன், சாதித்த விவேகமே யுனைவணங்கி னேனென்று சநகர் கோமான், சேதித்த மநவலையெல் லாமொழித்துத் தானேசித் திரம்போ னின்றான். 29

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சநகர்பிரான் மாய்த்து நெஞ்சை, மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப் பார்த்தான், றாளாண்மை யாலியற்றும் பொருளேது கைக்கொள் ளத் தக்க தேது, கோளான கற்பனையென் சுபாவவறி வாமெ னக்குக் குறிக்குங் காலே. 30

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுருவ லால்வேறு தோன்றக் காணேன், வத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளனைத்துந் தள்ளே, னித்தமாய்த் தன்னிலையி னிற்குமென தறி வுருவி னிலையா நிற்பே, னுத்தவா றேதுவரு மதுவருக வென் றழுந்தி யொருமை யானான். 31

வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்து வந்து, தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச் சநக னெண்ணித், தீனேய வருகாலஞ் செல்கால மிவையளவுஞ் சிந்தை செய்யா, னூனேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலோ டுலாவ லுற்றான். 32

பேசியதன் விசாரத்தாற் சநகர்பிரான் பெரும்பேறு பெற்ற தல்லால், வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச மலர்க்கண் மாலே, யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடைவ தல்லாற், றேசிகரில் லாவீனர் செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொ ரூபம். 33

புறப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியி லுள்ளோர், சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்றுமுதற் செய்யிற் பேறு, மிறப்பான வாபத்து விளைநிலமா யிருந்துதுயர் வேலை யாகிப், பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப் பிளக்கல் வேண்டும். 34

இலங்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சரக்கறையி லிருக்கும் போதங், கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போற் கணத்தி னல்குந், துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய் நல்லறிவு தோன்றி னோரை, விலங்குகவ சத்தோரை யம்புகள்போற் காமாதி விகற்பந் தாக்கா. 35

பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவற் றுக்களித்துப் படர்ந்து மீண்டு, திரமான வகங்கார முகில்விவே கக்காற்றாற் சிதறிப் போகும், வரமான பதம்வேண்டிற் றன்மநத்தி னசைமுதன் மாற்ற வேண்டு, முரமான புவியைமுத லுழுதன்றோ விளைபயன்க ளுறுகின் றாரே. 36

5—1. சநக ராசன் கதை முற்றிற்று

ஆக விருத்தம்—802.

# 5—2. புண்ணிய பாவநர் கதை.



மோக வற்சநா பிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோக மாசுண மிருந்தர சாள்வதோர் சூழ
லாக மேமுத லியானெனக் காணுமஞ் ஞாந
மேக மாகிய பராபரந் தோன்றினா லிறக்கும். 1

அநித்த மிச்சக மென்பதை நாடொறு மகத்தி
னுணித்து நோக்கினர் சநகனைப் போலநுண் ணறிவாற்
றனித்த மெய்ப்பொருள் பக்குவத் தறிகுவர் தநத்தால்
மனித்த ராற்கரு மத்தினாற் றேவரால் வாரா. 2

சநந மஞ்சினர்க் கவருடை முயற்சியே சாணாந்
திநமு மிங்கிவ னானெனுஞ் சிறுமைதான் சிதையி
லநக மாயுல கெங்குமாம் விசாலமுண் டாகு
மநனு றத்தன துயர்ச்சிதான் காண்புற வருமால். 3

வேறு.

பற்றுவீ டென்றி ரண்டிற் பற்றலும் விடுத ரூனு
முற்றவை மநத்து ரூப முயர்பந்த மதுவே றில்லை
முற்றுறு பற்று வீட்டின் மோகமுந் துயரும் விட்டுத்
துற்றுள பற்று வீடு துடைத்தசை யாது நிற்பாய். 4

மயலின்மை யநித்த மின்மை மடமின்மை வருத்த மின்மை
செயலின்மை கரும மின்மை தியக்கின்மை விகற்ப மின்மை
பயமின்மை துவட்சி யின்மை பகையின்மை குறைவொன் றின்மை
கயமின்மை கடிந மின்மை கடிநமாய்க் கழற லின்மை. 5

வீடுபெற் றிரண்டு நீத்த மேலவ ரிடத்து மேவி
நீடுவா தனைக ளின்றி நிகழ்த்திய குணங்க ளிற்கும்

நீடுறு நினைவா னாலாற் பிணிப்புற்றுப் பிறவி வேலை
யூடுற மயன்மீன் வாரு முயர்ந்தவா தனையாஞ் சாலம். 6

வாதனை யென்னு மிந்த வலைபுந்தி வாளா லீர்ந்து
மோதுகு றைக்காற் சிந்து முகிலெனச் சிந்தி நிற்பாய்
பாதவங் குடாரத் தாலே படுப்பபோ னெஞ்சை நெஞ்சாற்
றீதற மாய்த்து மேலாம் பதத்திலே திரமாய் நிற்பாய். 7

எகுதல் வருத றுஞ்சல் விழித்திட லிருத்த னிற்ற
லாகிய வெல்லாம் பொய்யென் றழுந்தியுள் ளாசை தீர்வாய்
சேகுற வலையுஞ் சித்தம் பகுதியாற் சித்தின் பின்னே
போகலூன் மணத்தாற் சிங்கந் தனைத்தொடர் பூசை போலாம். 8

மடங்கல்வீ ரியத்தாற் பெற்ற தசைதின்னு மார்ச்சா லம்போற்
றொடர்ந்துசென் மநனுஞ் சித்தாற் றோன்றிய பொருளைப் பற்றும்
படர்ந்துகாண் பவற்றைப் பற்றின் மநங்கெடாப் பந்தம் போகாத்
திடங்கொள்காண் பவற்றை நீக்கிற் சித்தம்போய் முத்தி யாகும். 9

யானிவை யிரண்டு மில்லென் றெண்ணிமே ருவைப்போ னிற்பா
யூனிற மில்லா விண்போ லுளத்தனாய் நல்லு ளத்தே
தானும்மை யமுமாய்க் காண்பான் காண்பன தம்மி னூடே
மேனிகழ் காட்சி யென்னு நின்னைநீ விடாது தேர்வாய். 10

இனியன வினிமை கொள்வா னிரண்டும்விட் டிவற்றி னூடே
தனிநிக ழினிமை நாடித் தற்பர மயமாய் நிற்பாய்
நனிபல துய்ப்பான் றுய்ப்ப திரண்டுக்கு நடுவே தானே
யநிசம்பற் றின்றி நிற்கு மதுபற்றி யதனு ணிற்பாய். 11

காதலாற் கட்டி லுய்யார் கயிற்றினாற் கட்டி லுய்வா
ராதலா லாசைக் கட்டை யசங்கற்பத் தறுப்பாய் நானென்
றோதுபா வனையை நானென் னாததோர் வாளால் வீட்டி
யேதமில் சுபாவம் பாவித் தெழுபவ மிலாவீ டெய்தி. 12

வாரா வமுதாஞ் சாந்தியைவிட் டழியும் போக மாதரிப்போ
ரோரார் மலர்க்கற் பகக்கான்விட் டெரிகூர் விடவெங் கானுறுவார்.22

அயனு டுற்ருய் பாதலத்தி லணுகி ஞயா கிலுஞ்சாந்தி
வியனு ரமுதை யொழிந்தந்த மிக்க நிருவா ணம்பயிலாய்
பயனு யதுபோல் விசித்திரமாய்ப் பாவாபாவ மயவடிவே
யியல்பா மிந்தச் செயல்கள்பெரி திடாரா மென்று மினிதாகா. 23

சத்தா திகளா மித்தொழில்க டம்மான் மண்டூ கம்போலப்
பித்தாய் மூர்க்க மநமேயேன் பிரமிக் கின்ருய் விடாதவமே
யெத்தாற் சிறிது தனையடைந்தா யெதிலே யின்ப முறுகின்ருய்
நித்தா ரமுதாய்ச் சமமாகு மதினீ நிலைசே ராநெறியேன். 24

வேறு.

படர்மூர்க்க மாமனமே வீணுய்த் தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்று சத்தம், தொடர்கின்ற புந்தியினல் மிருக மேபோற் றுஞ்சுறவேண் டாதோலின் ருெழிலை மேவி, யடர் பரிசோன் முகமாகு மதனுற் றுன்ப மடியாகப் பிடிக்கன்பா மியானை போல. மடமைமிகு மூர்க்கமா மநமே யென்று மாருத வாபத்தை மருவ வேண்டாம். 25

ஒளியுருவத் திரணேக்கு விழியின் செய்கை யுற்றுநீ வெவ்வி ளக்கை யுணரா தாகி, விளிதலுறும் விட்டில்போல் வேக வேண்டா வெய்யமந மோகாவின் விருத்தி மேவி, யெளிதருந்தி யுணவுகளி னிரதத் தாலே யிரைத்தூண்டிற் கவர்மீன்போ லிறக்க வேண்டா, நளினவித யத்துளுயிர் நெறிபோய்க் கந்த நாட்டத்தாற் கட்டுண் ணே னனவண் டேபோல். 26

உரைத்தமிரு கங்களிறு விட்டின் மீன்றே ேைசயூ ருளி யிரத நாற்ற மென்ன, நிரைத்தவிவற் ருென்ருென்ருன் மாய்ந்து போகு நிலையழிக்கு மவையைந்து நேரே கூடிக், கரைத்தலுறு

பவர்க்கின்ப மெங்கே யுன்றன் கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம், புரைத்தெழுநெஞ் சேயதுவே போகு மாகிற் பொருவில்சய மஃதுனக்குப் புகலுங் காலே. 27

வேறு.

எதுபய ஞக நிற்கிங் கித்தண்ட மியான்செய் கின்றேன்
முதுவிசா ரத்தின் மிக்க முத்ன்மையோர்க் குளமொன் றில்லை
யதிகமா முடிவில் சித்துக் கற்பமா நிலையென் னெஞ்சில்
விதியதா யுளதோ யானை வில்வக்காய் புகுத லுண்டோ. 28

தசைபயில் பாதந் தொட்டுத் தலைமட்டும் வெவ்வே ருய்ந்து
மிசைவுற யானங் கில்லை யர்னெனு நிலையெங் குண்டோ
திசையெலாம் விழுங்கி மேலாஞ் சித்ததாய்க் காண்ப தின்றி
யசைவற வெங்குந் தாஞ மென்றுல கனைத்துங் காண்கேன். 29

உயர்வுறு மதற்கு நாம கற்பனை யொருமை பன்மை
வியன்மகத் தணுவென் றேது மிதமுறு குறிகள் காணே
ணியலறி வாத லாலே யான்காணு மென்பா னீயே
துயர்தரு மேது வாகத் தோன்றினை பேதை நெஞ்சே. 30

முதுவிவே கத்தாற் போத மொய்ம்பினு லிந்த வுன்னைக்
கதுமெனக் கொல்லா நின்றேன் காணுதி கவலை நெஞ்சே
யிதுதசை யிதுபுண் ணீரீ தென்பிவை யுளவு யிர்ப்பாய்ப்
பொதுளிய வாத மிங்கே யகமெனல் பொருந்திற் றெங்கே. 31

தசைகள்வே றுதிரம் வேறு தடியென்பு வேறு மெய்யி
லசைவுவே றறிவு வேறு வகமெனல் பொருந்திற் றெங்கே
விசைவிழி யிதுதோ லீது வியன்செவி யிதுமூக் கீது
பசைவுறு நாவி திங்கே யகமெனல் பயின்ற தெங்கே. 32

அகமென லெங்கு மாகு மற்பமிங் ககமன் றுகு
மிகழுமிர் நல்ல நோக்கே நோக்கய னெறிவே றில்லைப்

புகரில்சின் மயனு மென்னைப் போதமிற் றூர்த்த நெஞ்சே
மிகவருத் தினையான் கன்றை வனச்செந்நாய் வெருட்டு மாப்போல்.

தெய்வயோ கத்தா லின்று தேறினன் சொரூபச் செம்பொன்
கைவழி கவரஞ் ஞாநக் கள்வன்மீண் டிவனைச் சேரே
னைவகைப் புலன்க ளொன்று வாதனை யற்றி ருந்துந்
தைவரு புறனிற் றத்தம் புலன்களிற் றுவா நின்ற. 34

வாதனை புலன்கட் கெல்லா மன்னுகா ரணமன் றுகு
மாதலான் மூர்க்க மான வைம்பொறி நீவிர் நெஞ்சி
னேதவா தனைகண் மாற்றிக் கருமங்க ளெல்லாஞ் செய்வீர்
வேதனைத் துன்ப மொன்றுங் கிஞ்சிலு மேவா தென்றும். 35

வேறு.

கூடுசெயுந் தன்வாயி னூலாற் பொன்றுங் கோசகா ரக்கிருமிக் கூட்டம் போல, வோடுபுல னெனுஞ்சிசுக்காள் மயலால் வீணே யுலர்ந்திடுவீர் புலனெல்லா முறையு ளான, சீடுமந னேயொடுங்கிப் புலன்க ளோடு நீவேறற் றுத்துமதத் துவத்தை நேரே, நாடுதிபற் றற்றென்றுய் முத்தி யான ஞாநவடி வினைநிலையாய் நண்ணு வாயே. 36

ஆசகலா விடயவிட விடேசி யாகி யநந்தமா நானெனும்வா தனையைத் தீர, மாசறவிட் டிச்சையெலா மொழிப்ப தென்னு மந்திரயுத் தியினலே மறுசென் மம்போய்த், தேசமுறு பகவானு யச்ச மெல்லாந் தீர்விடமா வாய்மநமே திரள்சங் கற்பம், வீசுதரு மயல்கொடியாய் நீயாங் காட்டை வெட்டிநெடும் பூமியிலே விநோ தஞ் செய்வேன். 37

வேண்டியவா விளையாடித் தற்ப தத்தை மேவினன்கே வலமா னேன் வெற்றி யுற்றே, னீண்டுவுயர் நிருவாண மானேன் செய்வ திலதானேன் பிறிவற்றே னிடம்வே றற்றே, னீண்டதெளி வுடை

மையொளி யுடைமை யுண்மை நிகழ்வுடைமை யறிவுடைமை நீங்கா மெய்ம்மை, மாண்டசுக முடைமையுப சாந்த நீர்மை மகிழ்வுடைமை நிறைவுடைமை மகிமை பான்மை. 38

ஆவரண மில்லாமை யுதாரத் தன்மை யழியாத தேசுடைமை யகண்ட நீர்மை, யாவதுந்தா னுழுறைமை யச்ச மின்மை யேகமாந் தன்மைமந மெழுந்தோ டாமை, யோவலிலா துடனுறையிக் குணங்க ளென்னு முத்தமிகள் சுமங்கலிக ளொப்பி லாதார், பாவனையொன் ருஞ்சொருப மடைந்தேற் கென்றும் பன்னியரா யுளங்கவரும் பாவை மாரே. 39

தேங்காது தன்வசமாய் விரிந்த புந்திச் செயலாலே யிவ்வாறு திறத்தி லெண்ணிப், பூங்காவி சிறிதலர்ந்தாற் போலப் பாதிப் புரைவிழியோன் புண்டரிகா தநத்திற் புல்கி, யோங்கார மேனுக் குந் தொநிய தான வுத்தமனீண் முழக்காலே யுச்ச ரித்தான், பாங்காக நாவறையு மணியி னூடு பயின்றுதடை யற்றேன்ச படர்வ தேபோல். 40

சான்றபிர ணவமோது மவன்றன் சித்துத் தற்பதத்தை நோக்குதலுந் தனியோங் கார, மூன்றறவெவ் வளவுமே லூற்று நின்ற துயர்ந்தகன்று விமலமா முணர்விண் கண்ணே, மூன்றரை மாத் திரையுடைய பிரண வத்தின் முற்கூறு வெளியாக முழங்கி யெங்கு, மான்றபிரா ணங்கடொநி கிளப்பு மெய்யி லழகிதாய்க் கிளர்ந்தோங்கி யதிரு மெல்லை. 41

இன்னுயிரைப் புறத்தகற்ற வல்ல தான விரேசகப்பேர் கிரமந் தா னியாக்கை முற்றுங், கொன்னுறுபா ழாக்கினதா னிறைந்து யர்ந்த கும்பமுநி குரைகடலைக் குறைத்த தேபோற், பின்னமில்சிற் சுவைநிறைந்த வாகா சத்திற் பிராணநிறைந் துளவிதயப் பெருந்தீ மண்டி, யன்னவுடன் முழுதுமெரித் துளதோங் காரத் தாதியாங் கிரமத்தி லவத்தை யீதே. 42

அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்த தன்றே யடையோகத் தாலல்ல வடையோகந்தான், வெவ்விடர்நல் குவதன்றோ வதற்குப் பின்பு வியனேங்கா ரத்தினது வேற்றுக் கூறு, தவ்வலறச் சம நிலையா மவச ரத்திற் சலநமிலாக் கும்பகப்பேர் தரிக்கப் பட்ட, வெவ்வமறு கிரமமுள தான தன்றே யியம்பியவிப் பிராணங்க ளெல் லாற் றிற்கும். 43

புறத்தகத்துங் கீழ்மேறிக் காகா சத்திற் புரிந்தசையாப் பிரா ணங்கள் புரண மாகித், துறத்துருத்தி யிடைதடைப்பட் டனபோ னின்று தோன்றிமுத லேயுடலைச் சுட்ட வங்கி, நிறத்தவிடி போற் கணத்தி லவிந்த தன்றே நீகார வெளிறெனவெண் ணீறு யங்க, முறத்தெரிந்த தாலதற்கே யுடலென் பெல்லா மொழுங்காகத் தோன்றிநரம் புடனே நின்ற. 44

சுகமாய கருப்பூரப் பாய றன்னிற் றுயில்வதுபோ லெலும்பு நிரை தோன்றிற் றன்றே, மிகமோது பவநத்தா லந்த நீறு விசைந் தெழுந்து கணப்போதில் விசும்பைச் சுற்றித், திகழ்வான சாறந் காலந் தன்னின் மேகஞ் செறிபனிபோ லோரிடத்திற் சென்று சேர்ந்த, விகலாத விவ்வவத்தை வேண்டு மட்டு மியலோங்கா ரத்திரண்டாங் கிரமத் தெய்த. 45

அவத்தையிது நிகழ்ந்ததட யோகத் தன்று லடையோகம் பேரிடரை யளிப்ப தன்றோ, வவற்றினிற்பின் பிரணவத்தின் மூன்றாங் கூறு யமையுமுப சாந்திதரு மவச ரத்தி, லுவப்புறுபூ ரணத்தாலே பூர கப்பே ருளகிரமம் பிராணங்கட் குண்டா யிற்று, லுவத்திரமி லாவந்த வவச ரத்தி லுயிரெல்லா முணர்வினமு தத்துட் புக்க. 46

உகுபனிதோய்ந் தாலொப்ப வதிசீ தத்தை யுற்றபிரா ணங்க ளெலா மொழுங்கி னலே, ககனமுறு புகைதண்கா ராகு மாபோற் ககனநடு வுறமதியாய்க் கலையின் கூட்ட, மிகவுநிறைந் தந்தமதி

மண்ட லத்தில் வியன்சுதைதா ரையையுயிர்கண் மேவப் பெற்ற, திகழ்விசும்பி னின்றிழிந்த வமுத தாரை சேடமா முடனீற்றிற் சென்று வீழ்ந்த. 47

அரன்சிரசின் றிழியமுத கங்கை போன்ற வமுததா ரையி னுலே யமல மாகிக், கரங்களொரு நான்குடன்வெண் மதித்தே சாகிக் கருணைமால் வடிவென்னக் காண லாகி, யுரங்கிளருத் தால கன்மெய் தோன்றிற் றன்றே யுயாமுத மயமான வுயிர்க ளெல்லாங், குரம்பையது தனைநிறைத்துச் சூழ்ந்துள் ளான குண்டலிநி தனைப் பூரை குயிற்றி நின்ற. 48

இத்திறத்திற் பங்கயவா தநத்தி ருந்தோ னியாக்கைநிலை யழியாம லியற்றிப் பின்னர், மத்தமுறு பிரமரம்போற் சுழலு நெஞ்சை வன்பினுற் றகைவுற்ருன் மௌநி யாகி, மெத்துபிரா ணபாந வேக நோக்கி மெல்லெனவுண் டாக்கினன்வல் விடய நின்று, தத்துபுலன் களைவருந்தி வேறு செய்தான் சற்றுமறப் புறப்பரிசந் தள்ளி னுனே. 49

பற்றறுதிண் ணியமதியோ னுள்ளே தோன்றம் பரிசமெலாந் தள்ளுகின்ற பார்வை யாலே, யற்றனவாக் கினன்மூல வாயில் செம்மி யங்கத்தொன் பதுவாயி லநில மெல்லாங், குற்றமற முகம டைத்தாற் புறத்து வாரங் கும்பத்துக் கடைபடல்போற் குறித்த டைத்தா, னுற்றலய மெனுங்குணத்தைச் சேர்ந்த நெஞ்சை யுயரிதய வாகாயத் தொடுக்கி னுனே. 50

ஊரத்தமத கரியையுபா யத்தால் விந்தத் துட்குழியிற் சேர்ப் பதுபோ லொடுக்கி நெஞ்சைச், சாற்ககநம் போனிமல தெளிவைச் சேர்ந்து தள்ளினுன் பற்றிபாய் தன்மை யாலே, வாத்துடைய விகற்பமெலா மீள மீள வருவனவேண் டியபடியே வந்து தோன்ற,

பரப்புறுதோற் றங்களேவன் னெஞ்சான் மாய்த்தான் பகைவரைவா ளாற்சூரன் படுப்ப தேபோல். 51

விகற்பமெலா மிறத்தலுமே யிதய விண்ணில் விவேகபா நுவை மறைத்து விரிந்த கங்குல், சகத்தினினு ளஞ்சநத்தின் பார்த்தப் போதே தன்னுள்விவே கத்தாலே தவிர்த்தா னத்தை, யகத்திரு ணன் ருய்க்கெடலுஞ் சுடர்வந் தெய்த வம்முநிவ னதனையுங்கண் டகற்றி மாய்த்தான், நிகழ்ச்சியொளி யகலுதலுஞ் சுழன்று நெஞ்ச நிசியினடுப் போலுறக்க நேர்ந்த தன்றே. 52

போகாத துயிலினையு மறுத்தான் றூக்கம் போகுதலு மாகாச போதம் வந்த, தாகாச போதமழிந் திடலும் வல்லே யவன்மநமோ கஞ்சேர்ந்த வந்த மோக, நோகாமன் மநத்தினைவிட் டேகு மாறு நூக்கினுன் பேரிதய நோக்கு மிக்கோ, னேகாத விரவுதரு மந்த கார மிவ்வுலகி னின்றகற்று மிரவி போல. 53

வேறு.

அன்ன காலையி லிருள்சுடர் துயில்மயக் கனைத்தையு மறுத் தோட்டி, மன்னு மோரவத் தையையடைந் தொருகணம் வருத்தமா றியதுள்ள, மின்ன றீர்ந்துட னேயனைத் துருவமா மறிவையெய் தியதன்றே, நன்னெ டுங்கரை தடுக்கரின் றெதிர்த்துமுற் றலநிறைந் திடுநீர்போல். 54

விஞ்சு நீள்பகற் பரிசயத் தாலுந்தன் மெய்யறி வுணர்வாலும்
நெஞ்சு சிந்மய மடைந்ததா லிரணிய நிகழ்சிலம் பாமாபோல்
வஞ்ச வன்மநத் தன்மைபோய்ச் சிந்மய மருவிய மநந்தீரச்
செஞ்செவ் வேவல்லே வேற்றுமை யானதாற் சேற்றினுட் குட
மென்ன. 55

தங்கு காட்சிவிட் டமலமாய் ஞாநத்தின் சமமடைந் தது போதம், பொங்கு வாரிதி திரைமுதற் பகிர்ச்சிபோய்ப் புனல்சம மடைந்தென்ன, வெங்கு மோர்மதி யாயறி வுற்றவ னீறில்போ

கத்தெண்ண, மங்கி யாண்டண்டம் பரித்துயர்ந் தமலசிந் மயவிசும்
புருவானுன். 56

அவ்வி டத்தினிற் காண்பது காட்சியற் றநந்தமா நல்லின்பஞ்
செவ்வி யாநந்த முற்றன னமுதமார் தெண்கடற் குளித்தென்ன
மெய்வி டக்கழன் றநீதனு யொருதல மேவினன் சதாநந்தப்
பௌவ மாயின னெங்கணு மொத்ததற் பாவமே வடிவானுன். 57

அந்த ணன்றன தறிவெனு மங்கமா நந்தமா நிலேயோடை
வந்த மர்ந்தது சாற்கக நத்திலே வயங்குமா மதியென்ன
வுந்து காற்றிலா விளக்கென வோவியத் துருவெனத் திரையில்லாச்
சிந்து வென்னநீர் கருக்கொண்டு பொழியலாச் சேண்முகி லென
நின்றுன். 58

இந்த மிக்கபே ருலகினிற் றற்பதத் திருக்குமம் முநியைக்கண்
டந்த ரஞ்செறி சித்தர்விண் ணவர்குழு வற்புதப் பலபேரும்
வந்து சுற்றின ரரம்பையர் நிரம்பினர் வாசவன் றனிமூதார்
தந்த ளிப்பவ னங்கவை யனைத்தையுந் தள்ளினன் விருப்பின்றி. 59

அலங்கன் மாதரிங் கிதங்களைச் சைசவத் தறிகிலா னெனச்சற்றுங்
கலங்க லாதகெம் பீரமா மதியினன் கடவுள்வான் பேற்றெண்ணம்
விலங்கி யன்னதன் ஞநந்த வீட்டிலே மேவினன் மதியாறு
துலங்கி யோங்கிய வுத்தரா யணத்திலே சுடர்விடு கதிரென்ன. 60

மூவ ராகிய முதல்வரு மமாரு மொய்த்தசித் தரும்வாழுஞ்
சீவந் முத்தியாம் பதமடைந் தருந்தவன் செறியுமா நந்தத்தி
னேவ லின்றிய நிறைவினு லாநந்த முதிர்ச்சியாம் பதமுற்று
ஞவ தானபே ராநந்த மதுவிலவ் வறிவினூற் றிகழ்வுற்றுன். 61

ஒருக ணஞ்செறி வருடமா றென்னினு முயர்ந்தவப் பதமுற்ருேர்
வருப வந்தரு மேதுவாய்க் காண்பன மருவுமிவ் விழிமேவார்
பெருமை யானவிப் பதத்திலுத் தாலகன் பிறைகளோ ராறுலே
யருகு ருவகை சித்திபூ மியைக்கடிந் தமைந்திருந் துணர்வுற்றுன்.

விழித்து நோக்கினன் சித்தரை யவர்களு மிக்குய ரிவன் றன்னைப், பழிச்சி யன்பொடு பகவநீ காண்டியெம் பணிதல்பொன் னுலகத்தி, விழிச்சு மிவ்விமா னத்துவந் தேறுதி யிந்திர பதத் தின்பங், கழித்த பூமிக ளனைத்தினு மில்லதோர் கற்பமப் பயன் றுய்ப்பாய். 63

பகவ செய்தன தவமெலா மிந்திர பதமுறற் பொருட்டேயென்
றகம லர்ந்துரை பன்னிய சித்தரை யதிதிய ரெனநோக்கி
முகம லர்ந்துபூ சித்தனன் மயங்கலன் முந்துறு பெருஞ்செல்வ
மிகவி ரும்பலன் வெறுக்கலன் றிண்ணியோன் விபுதரே குதிரென்
றுன். 64

மொய்த்த கூட்டத்தை விடுத்தனன் றன்செயன் முயன் றிருந் தனன்போக, பெத்த நீங்கிய வவனையச் சித்தரும் பின்பு சின் னுட்பேணி, சித்தம் விட்டனர் தாஙகளே யகன்றனர் சீவந் முத் தனுங்கானின், மெய்த்த மாதவ ரிடங்களிற் சுகத்திலே வேண்டஎ வுலாவுற்ருன். 65

ஒருதி நத்தெல்லை யொருமதி யெல்லைமற் ருேர்வரு டத் தெல்லை, பெருகு மாண்டெல்லை யெல்லையோ ரோர்காற் பேதமிற் றியாநத்தின், மருவி யொன்றிடும் விழிக்குமந் நாண்முதல் வருந் தொழில் களிற்சேர்ந்து, திருவி கற்பமே யாயின ளெருமையாய் நின்றனன் சித்தோடும். 66

பரந்த சித்தின தொருமையின் செறிவினைப் பழகலாற் பெருஞ்சித்து, நிரந்த ரித்தெங்குஞ் சமமதா யினன்புவி நிறைவுறும் வெயிலென்னத், திரந்த ருஞ்சித்தி னொருமையை நெடும்பகற் செறிபரி சயஞ்செய்ய, வரந்தை தீர்ந்தசற் பாவசா மாநிய மடைந் தன னதனுலே. 67

தெரிவ தாமிவற் றுதயமத் தமமுருன் சித்திர ரவிபோலப்
பெரிய தாய்ச்சம வின்பமாம் பதவியின் பேற்றினு லுபசாந்தி

புரியு நெஞ்சினன் பிறவியு மையமும் போய்ச்சரற் ககநம்போல்
விரியு நிர்மல சாந்தமெய் யொளிநிறை வேதந வடிவானுன். 68

வேறு.

என்ற வசிட்டன் றனைவள்ள லெதுசத் தாசா மாநியமென்
றன்று வினவ வவனுரைப்பா னகல்சிற் சாமா நியவடிவா
யொன்று வொன்ரு யில்லாமை யுறுபா வனையி னுறைப்பாலே
தன்ற னுள்ளங் கரைந்தேகிற் சத்தா சாமா நியமதுவே. 69

தேற்ற மாங்காண் பனநீங்கிச் சித்தி னிடையே சித்திறக்கிற்
சாற்று முயற்கொம் பெனநொய்தாஞ் சத்தா சாமா நியமதுவே
தோற்றும் புறனுள் ளாய்ப்பலவாய்த் துவக்க மாகு மிவையனைத்து
மாற்றி யகன்று மநநிற்கி லதுசத் தாசா மாநியமே. 70

உன்னு வெதிர்காண் பனவொன்று மொழியா தியாமை யுறுப்பென்
தன்னுற் றன்பா விறக்குமெனிற் சத்தா சாமா நியமதுவே [னத்
முன்னு முடல்சேர் முத்தருட விலதா முத்த ரிருவர்க்கு
மென்னு ளினுஞ்சேர் பெருங்கண்ணீ திதன்பேர் துரியா தீதபதம்.

அறிந்து சமாதி யடைந்தோர்க்கு மநபூ தியினின் றெழுந்தோர்க்கு
செறிந்து தோன்று மூடர்க்குத் தெரியா தாமிப் பெருங்கண்ணு [ஞ்
முறிந்து பிறவி யறுஞ்சீவந் முத்த ரான சித்தரொலாம்
பிறிந்தி டார்விண் பயில்காற்றும் பெரிதா மண்ணி லிரதமும்போல்.

மூவர் முதல்வா நவரென்னை முதனு ரதனை முதன்முநிவர்
மேவ லுற்ற திப்பெருங்கண் வேற்றுப் பயமெல் லாநசிப்பித்
தோவ வில்லா விப்பதத்தி லுத்தா லகனுற் றிருந்தனனு
லாவ நீர்வ தெவ்வளவவ் வளவுஞ் சகமா மகத்திடையே. 73

கால மநேகஞ் சென்றதற்பின் கந்த மாத நக்கிரியிற்
கோல முழையி லம்முநிவன் கூரம்பை விட்டுக் கூரம்பையிலாச்

சீல முத்த னுயிருப்பேன் றீர்வென் றென்றே சிந்தித்துச்
சால நல்ல தளிர்த்தவிசிற் றளைத்த பதுமா சநத்திருந்தான். 74

அரைநோக் காக நோக்கியிருந் தபாந வாயி லடைத்ததனாற் [க்கி
புரையொன் பதுவா யடைத்துளத்தாற் பொறியும் புலனு மொன்ரு
திரையில் கடல்போற் றன்சித்தின் செறிவைப் பாவித் தாருயிரின்
விரைவை நிறுத்தி வணங்காமன் மேனேக் கியகந் தாத்தினனாய்.75

நாவி னடிச்சென் றுறச்செறியுண் ணுவி னடியை யுடையோனு
யோவின் முகக்காந் தியனுகி யுள்ளிற் புறனின் மேற்கீழில்
வாவும் விடயத் தினிற்பாழின் மநமுங் கண்ணுமு ரூனுகி
வீவ தான வெயிற்றினிரை யெயிற்றி னிரையை மேவானாய். 76

அங்கத் துயிரின் மிருதிதகைந் ததனு னெய்தா யவிர்முகத்தோ
னங்கத் துருவுள் ளுணர்வுருவே யாகி யெழலாற் புளகிப்போ
னங்கத் துருவுள் ளுணர்வுருவே யாகிப் பழகி யறிவொன்ரு
யங்கப் பொழுதப் பழக்கத்தா லகத்துத் தமமாஞ் சுகமடைந்தான்.

ஆநந் தத்தின் பெருக்கைநுகர்ந் ததனுற் சிற்சா மாநியம்போய்த்
தானந் தமது வெலாம்பரிக்குஞ் சத்தா சாமா நியமடைந்தான்
றீநந் தவிர்சம னுயிருந்தான் சிந்தா குலமெல் லாந்தீர்ந்தான்
மாநந் தருமா நந்தமிலா மகாநந் தத்தான் முகமலர்ந்தான். 78

அநக பதமுற் றுடல்புளக மாறி நெடுநா ளிற்கரைந்து
மநமும் பிறப்பின் மயக்கமும்போய் மகாசத் துவமா யோவியம்போற்
கநமில் ககநத் துவாமதிபோற் கதியிற் சின்னு ளினிற்சுவறி
யிநன தொளியின் மரப்பசைக ளிறப்புப் போலா யிறப்புற்ருன். 79

## 5—6. உத்தாலகன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1091.

## 5—7. சுரகு க்கதை.

இந்தவொழுங் காலுணர்வை யுணர்வி லுணர்ந்துலகி லியங் கா நின்றே, யந்தமறும் பெரும்பதத்தே யாறுதியாற் காண்கின்ற வனைத்து மாளச், சந்ததஞ்சா தித்ததனைப் பெறுமளவு நூல்குரவன் றனிநெஞ் சாலே, பந்தமறு தத்துவத்தை விசாரித்தே பெற வேண்டும் பதுமக் கண்ணாய். 1

மயலின்மை சாதனைநூற் பொருட்போதங் குருயமமாம் வழிக ளாலே
யுயர்பதவி பெறலாகு மன்றியுணர் வொன்றினு லுறுதற் காமா
லியலுபதே சம்பெற்றுக் கூரியதாய்க் களங்கமிலா திருக்கு மாகில்
வியனுறுசா தநமுழுது மிலதேனும் புந்தியினால் வீடு கூடும். 2

என்றுனை முகநோக்கி யிகத்தொழிலோ டிருந்தேயுஞ் சமாதி யெய்தி, யொன்றுன வுணர்வுற்றான் போலிடர்தீர்ந் தானொருவ னொருவன் செய்கை, யின்றுனாய்த் தனியிடத்திற் சமாதியடைந் தானிவரின் மிக்கோ னேவ, னன்றுக வருளுகென விராகவன் கேட் டலும்வசிட்ட னவில்வ தானான். 3

ஆற்றுமதத் துவமன்றான் முக்குணத்தால் வருஞ்சகமென் றறிந்தோர்க் குள்ளே, தோற்றுகின்ற சீதளமே ததுதனையே சமாதியெனச் சொல்லு மன்றே, யூற்றமறக் காண்பவற்றே டுறவு நமக் கிலதென்றே யுரத்துத் தண்ணென், றேற்றசமா தியிலிருப்ப னொருவனொரு வன்றொழிலோ டிருப்ப னன்றே. 4

இவ்விருவ ரிதயமுந்தண் ணென்றிருக்கில் வேற்றுமையோ ரிறையு
யவ்விதய சீதளமே யகந்தவப் பயனுமவ் வறுபூ திக்கே [மில்லை
கவ்வியிருப் போனுள்ளங் காரியத்தா லலையுமெனிற் கவலை யாகுஞ்
செவ்வியவச் சமாதாந முன்மத்த நடநம்போற் சிறப்பின் றாகும். 5

வருத்தமிலா வுந்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மநத்தோ ஞுகிற், றிருத்தமுற வவன்கூத்துத் தெளிவுற்றேன் சமாதிக்குத் தீர நேராம், பெருத்ததொழிற் சேரறிஞர் பெரியவநஞ் சேரறிஞர் பேத நாடி, லொருத்தரொருத் தரைவிஞ்சா ரிருவருமொத் தைய மில்வீ டுற்று ரன்றே. 6

சாலவும்வா தனைபோகி லிம்மநஞ்செய் தொழில்புரிந்துந் தான் செய் யாதாஞ், சீலமந நெடிதகலி லருகிருந்தார் செப்புமொழி தெரியா தாப்போற், றாலமநந் தொழில்விடினுஞ் செய்ததாம் வாதனையே துன்னு மாகிற், கோலவுட லசைவறினுங் கநவிலே வரைநின் றுங் குழிவீழ் வார்போல். 7

தொலைவிறெழிற் செய்யுமநந் தொழினீங்கி லதுதானே சுகச மாதி யலைவறுகை வல்லியமும் பரமாநந் தமுமென்றே யறிவாய் நெஞ்சி னுலைவுதிர மெனுமிரண்டு மத்யாநந் தியாநமெனு முபயத் துக்கு நிலையுறுகா ரணங்களா மாதலிலிம் மநமுளைக்கு நீர்மை தீர்ப்பாய். 8

சிந்தனைவா தனையின்றித் திரமான மநத்தினையே தியாந மென்ப, ரந்தவுப சாந்தமுமக் கேவலத்தன் மையுமென்று மதுவே யாகு, மிந்தவுயர் பதப்பொருட்டு வாதனைசா லவுநேர்மை யெய்த வேண்டுஞ், சந்ததம்வா தனையில்லா மநந்தொழிலில் லாப்பதத்தைச் சாரு மத்தால். 9

நெருக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழிற்றிரமா நீங்காத் துன்பம், பெருக்கவிடு மாதலினுல் வாதனையை மிகநேர்மை பிறக் கச் செய்வாய், வருக்கமுறு பலபொருளி ஞனெனும்பா வனை மநத்தான் மாற்றி யெங்ங, னிருக்குதியங் ஙனமிருப்பாய் வரையிலே மனையிலே யெங்கே யேனும். 10

இல்லுறைவோர் சமாதாந விதயத்தோ ரகங்கரமா மேதந் தீர்ந்தோர் புல்லுமனை யேகாந்த வநமாகுங் கடைவீதி புக்கிக் காண்போர்

செல்லவர வுலாவியும்பற் ருமையினுற் கடைவழிச்செல் லாதார்போ
நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கு நாடு தானே.[ல்வார்

துயில்விழிப்புச் சொலல்செலவு தொடர்ந்தாலு மகமுகமாந்
தொடர்பா லென்றும், பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற்
காண்பவரே பரம சிலர், செயிரிலா வகமுகத்தா லெல்லாமா காச
மாய்த் தீருஞ் சித்த, முயிரனையாய் சீதளம்வந் துண்ணிறையிற்
சீதளமா முலக மெல்லாம். 12

இதயமய லாலெரியி லுலகெலாங் காட்டெரிபோ லெரிந்து
தோன்று, முதயமுறு முயிர்க்கெல்லா முள்ளிருப்ப தேபுறத்து
முண்டாய் நிற்குஞ், சுதைபயிலூர் புவிகால்விண் டொகுவரைநீ
ணதிதிக்குச் சூழ்ந்த வெல்லாம், புதைதலுறு முட்கரண தத்து
வத்தின் பங்குகளாய்ப் புறத்தி னிற்ப. 13

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க
ளுய்ப்போ னுயுந், தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னநவரதஞ்
சமாதி யுற்றோ, னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப் பிறர்
பொருள்க ளோடே யென்ன, வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே
கண்டானே யெல்லாங் கண்டோன். 14

இன்றிறவு வந்தாலுங் கற்பாந்தத் தெய்துகினு மிலங்கு ஞானி,
கன்றியசேற் றுறுபொன்போற் களங்கமுறு னெல்லாமாய்க்
கண்ணு யாறிப், பொன்றலடி முடிவின்றி யொன்றுயின் பத்தள
வாய்ப் பொலிதே சாகித், துன்றியகாட் சிகளில்லாக் குறியுடைத்தா
மெனச்சுருதி சொல்லு மன்றே. 15

எல்லாமென் றுரைத்ததெலா மறிவித்தற் பொருட்டேயா
மிசையச் சொன்ன, சொல்லாலென் வீணன்றே யாதலினு
லோமென்று துணிக வித்தை, நல்லாயிங் கிதற்குமுத னுளதோ

ரிதிகாச நவிலக் கேட்பாய், புல்லாரென் வேடர்குலச் சுரகுவப்பே
ரோன்சரிதை புதுமைத் தன்றே. 16

இமகிரியின் கோடான கைலைவரை யினிலேம சடர்க
ளென்னு, மமர்வரிவில் வேடருள ரவர்க்கரசன் சுரகுவெனு மசை
யா வீரன், சமநிலையாற் கோமுறையா லருண்முனிவா லுலகநெறி
சமைக்கு நாளி, னமதுவலி யாலுலகை நலிகுதுமே லவர்சோக
நமக்கே யன்றோ. 17

அல்லாது தண்டமுறை யியற்றோமே லுயிர்காப்பற் றவத்தின்
மாயும், பொல்லாதிவ் வரசென்றே யூசலா டுளத்தினனாய்ப் புந்தி
நைந்தான், மல்லாரும் புயத்தவன்பான் மாண்டவிய முநிவரனும்
வணங்கிப் போற்றி, நல்லாயுன் வரவினான் மிகவாழ்ந்தே னல்லோரி
னுட்டப் பட்டேன். 18

தருமமுழு தையுமுணர்ந்த பகவரீ நெடுங்காலந் தளர்வு
தீர்ந்தா, யருவினையே யனையப்பா டறுத்தியா லையம்போ லரந்தை
யுண்டோ, விருநிலத்தென் கோற்கீழோ ரென்கருணை முனிவுகளா
லின்ப துன்ப, மருவுகின்ற கவலையைக்கண் டரியேற்றின் முன்
கரிபோன் மறுகு கின்றேன். 19

அருணன்வெயில் போலெங்கு நிறைசமமென் மதியிலே
யணுகு மாறு, கருணையினா லுணர்த்தியெனுங் காவலற்கு மாண்ட
வியன் கழறு கிற்பான், பொருவறுதன் விசாரத்தா லிமைப்
போதின் மநவழுக்குப் போகா நிற்கும், வருசரற்கா லந்தோன்று
மாத்திரத்து மூடுபனி மாய்வ தேபோல். 20

யானுரிச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங் ஙனமென்றே யிதயத் துள்
யானும விப்படியே யாராயின் மகத்துவமே யடைதி சாலத் [ளே
தானுன சுபாவனா யிருந்துளநின் விசாரத்தாற் றுனே நெஞ்ச
நீறாடும் படிதோன்றித் தன்னுருவிட் டிளைப்பாறித் துன்ப நீங்கும்.

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மாதுக் கிவ்வுலகின் வியாபா ரங்கள், செம்புகர்வே ழத்திறுக்கான் குளப்படிபோற் ருென்றுமா றீந ரெஞ்சுக், கம்புவியிற் ரெழில்சிறிதே யாகினுநீந் திடவரிதா மாவின் பாதப், பைம்புனலுங் கிழக்கொதுகுக் கெல்லை கரை காணுத பரவை யன்ருே. 22

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பரஞ்சுடரா யெறிக் குஞ் சோதி, யத்தனையத் தனைதோன்று மெந்நாண்மட் டனைத் தும்விடா யந்நாண் மட்டுந், தத்துவமாம் பொருளெய்தாச் சகல மும்போ னுற்சேடந் தானுஞ் சித்தந், தொத்தறவேற் றுமையெல் லாம் போகாதேற் சமமான சோதி தோன்ருு. 23

பேதமுறு பொருளொருமை தோன்ருதேற் றன்னைத்தான் பெறுவ தெங்கே, யாதலினுற் றனைப்பெறுதற் பொருட்டாக வனைத்தினையு மகற்றல் வேண்டு, மேதமற வனைத்தையும்விட் டாயென்னிற் சேடித்த திறவா வீடா, மேதகைய பதமதுவாஞ் சுரகுவெனும் பெயர்கீர்த்தி வேடர் வேந்தே. 24

வேறு.

சகல காரண காரிய பரம்பரைத் தன்மையாஞ் சகமேவி
மிகவ ளர்ந்தவத் துவின்மல வாதனை மநத்தினை மிகநீக்கித்
திகழு மங்கமா மதையுமேல் விடுதியேற் றீதறு நலனுண்டாம்
புகழ்ந ராதிப வென்றுதன் னிடமுறப் போயினன் றவப்பாலன். 25

முநிய கன்றபின் னெயினர்கோன் றனியிட முந்திநன் மதியாலே
யகிச நானென்ப தாரென நாடின னடிமுதன் முடியீருந்
தனியு டம்பைநா னென்பது புதுமையாஞ் சடவுடல் காண்கேனுன்
றுனிசெ யிவ்வுட லசேதநந் தசைமுதற் றன்னுமா தவினன்ருே.26

காண மீரைந்து மன்னியஞ் சடமெனுங் கணக்கினு னன்றித்
திரளெ னக்கில வுடன்முத னுனலன் சேடமே தெனநோக்கில்

விரவு சீவனே சேடமா மின்னதும் வேறென்றாற் றெரிகின்ற
துரவி தானவே றென்றினாற் றெரியு மீ துயர்ந்ததத் துவமாகா. 27

தெரிவ தாகிய விதனையு மகற்றுவன் றெரிபொரு ளுணுமோ
பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம் போறி வியானகு
மரிய யன்சிவ னிந்திர னந்தக னாதியா மிடந்தோறும் [தம்.
சுரிகொண் முத்தினுண் ணூலென நிற்குமாற் றேன்றுமிவ் வுயர்போ

பகவ னாகுமிவ் வாத்தும தத்துவம் பரமமாஞ் சிற்சத்தி
சகளி கழ்ச்சியா னோயின்றி வெருவுறுந் தனிவடி வுடைத்தாகிக்
கருப முற்றையும் விழுங்கியெப் பொருளினுங் கலந்துநுண் ணியதா
மிகும பாவபா வங்களற் றயனுறை வீடள வுளதாகி. [கி

சத்தி யாவுக்கு முறைவிட மாமிது தனித்தனிச் சத்தாகிப்
பத்தி யாகியிச் சகத்தினிற் காண்பன யாவையும் பலவாகச்
சித்த சைந்துள விசாலமா மல்லது சிறிதும்வே றிலதாகுந் [றே.
தொத்து பற்றின்றிக் காண்பதற் றெழுபவந் தொடர்மயக் கழுமற்

சுழுத்தி யிற்றிர முற்றவன் றெழிலெனத் துகளறு சமனாகி
யழுத்த மாகிய வாத்தும தத்துவத் தமர்ந்தன னெனத்தீர்ந்து
விழுத்த கும்பத மெய்தினன் விவேகத்தின் மெய்மைநிச் சயத்தாலே
வழுத்த ருந்தவக் கௌசிகன் விப்பிர மாபினை யடைந்தென்ன. 31

வரகு ணங்களா மனைத்துமிற் றுயில்பவன் மநத்தொழி னிகராகி
சுரகு வென்பவ னசைவறு சிகையினாற் றுலங்குறு சுடரொத்தான்
விரவு நல்லரு ளருளின்மை விருப்பொடு வெறுப்புமச் சாந்தொந்தம்
பரவு நன்மதி மூடமென் றினையவும் பயில்வற நிகழ்வுற்றான். 32

வேறு.

ஒன்றாயு ணர்ந்தசு ரகுப்பெய ருத்தமற்கும்
பன்னுதலின னும்பெயர்ப் பார்த்திப மாமுனிக்கு

நன்ருனவன் பால்வரு நன்மைந யந்துகேட்பாய்
குன்ருர்புயத் தாயென மாதவன் கூறலுற்ருன். 33

பாரக்கர்கு லப்பரி கப்பெயர் பாரின்வேந்தாம்
வீரக்கழ லோன்சுர குப்பெயர் வேந்தனண்ப
னீரக்கன மாரிம றுத்தலி லியாருந்தஞ்சக்
கோரக்கனன் மண்டுதல் கண்டுகு லந்துநொந்தான். 34

இன்னுதன நாடுவிட் டேகிவ நத்திலெய்தி
யன்னுதாம் போய்த்தவஞ் செய்தவிழ் பன்னமுணுப்
பன்னுதநா மம்படைத் துத்தவப் பான்மையாலே
நன்னுதலும் பெற்றன னற்றவ மொப்பதுண்டோ. 35

ஒருமூவல கென்னும டத்தொரு மித்திருந்தான்
பொருண்மேவுகின் றசுர குப்பெயர் பூபன்றன்பால்
வருவானெதிர் தோன்றலு மற்றவ னன்போடெய்தி
யிருவோருமன் புற்றிருந் தின்னன பேசலுற்ருர். 36

நினையிப்பொழு தெய்தலி னீங்கரு மின்பமுற்று
வினையற்றதென் றசுர குப்பெயர் வேந்தைநோக்கி
யுனையுற்றுமாண் டவ்விய ஞேதிய ஞானமொப்பத்
தனையுய்க்குமெய்ம் மைப்பதஞ் சார்ந்தன னியானுமென்ற.37

வேறு.

மிகத்தெ ளிந்துகெம் பீரமாய்ச் சமமதாம் விழியா
லிகத்து றுந்தொழின் மன்னவ வியற்றுதி கொல்லோ
பகுத்த காலத்தை யறிவுற நினதுபா வனைதான்
றெகுத்த வாதியும் வியாதியுந் தொடர்கில கொல்லோ. 38

அடையும் போதினி தாகிய போகத்தி லழுந்தா
திடைநி லாய்கொலோ சங்கற்ப மற்றினைப் பாறித்

தடையில் சாந்தமாய் முத்தியாய்ச் சலநமொன் றில்லா
நடைப யின்றுயர் சமாதியை நண்ணினை கொல்லோ. 39

வெறிதி ருக்கினுந் தொழிலினை மேவினும் விடாம
லறிஞ னென்றுதான் சமாதிவிட் டகன்றவ னுகுஞ்
செறியு ஞானஞ்சேர் மநத்தினர் சகத்தொழில் செயினும்
பிறிவி றத்துவ நிட்டராய்ச் சமாதியிற் பெயரார். 40

பிரம வஞ்சலி யுடன்பது மாதநம் பெறினும்
விரவ சாந்தர்கள் சமாதியின் மேலவ ராசைத்
திரண பாவக னுகிய சிற்றுணர் வொன்றே
வரச மாதியாம் வெறிதிருக் குமதன்று வள்ளால். 41

ஒருமை யாயென்று மநமிறந் துண்மையை யுணரில்
வரச மாதியாஞ் சொல்லினுர் மநத்தினி னிறைந்தோர்
மருளின் மெய்ம்மையோர் மதிதம்மை மறக்கிலா சிறிதுந்
தருந்தொ ழிற்றிற மறக்கிலாக் காலமே சமமாம். 42

நெறிகொள் காற்றுத்தன் கதியினை மறப்பிலா நெறிபோ
லறிஞர் புந்திவே றறிவதில் லறிவையே யயரா
பிறிவில் புந்தியி லொருமையோர் சமத்துவப் பெரியோர்
செறிதொ ழிற்பிறி வகற்றினோர் தற்பதம் பெற்ருேர். 43

ஆத லாற்பன்மை யொருமையா முடற்ரெழி லனைத்திற்
போது செய்கிலா வுத்தம வாக்கினுற் பொலிந்த
சேத நத்தவ ரெங்குளர் சித்திர மாகப்
பேத மற்றறி வறிந்தனை தற்பதம் பெற்ருய். 44

உள்ளு றக்குளிர்ந் தனையுவா மதியென வுள்ளத்
துள்ள கங்காரத் துயரறத் துரிசற நிறைந்தாய்
தள்ள லாகிலை பெற்றெங்கும் விளங்குதி தானே
தெள்ளி யோயென்ற பரிகற்குச் சுருமேற் செப்பும். 45

பரந்த சொற்களாற் பயனென்கொல் பயனெலாம் பாறி
நிரந்த ரஞ்சம மாய்மநந் தன்னுளே நிகழ்ந்து
சுரந்த வின்பமாய் நிகரிலா வொருவிழி தோன்றித்
திரந்த னிற்றெரி கின்றதா லென்றனன் றெளிந்தோன். 46

## 5—7. சுரகு கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1137.

---

# 5—8. பாச விலாசர் கதை.

இத்திறஞ் சுரகு பரிகனென் றிசைத்த விருவருஞ் சகத் தொழுங் கெண்ணிப், பத்திசெய் தொருவர்க் கொருவர்பூ சித்துப் பரிந்துதம் பணிதலை நின்று, ரத்தியாத் துமமே நித்தமும் வடிவா யகமுக மாய்மகிழ் வெய்திச், சித்தினை விடாம லநுபவிப் பவர்க்குச் சிறிதுமோ ராகுலஞ் சேரா. 1

ஆசைவன் பாசத் திரளினுற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கணுங்கி, யேசுறு போகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினு லுலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும் வீரனே சீவனு மெருது. 2

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக் கிவை யுடற் புண்ணு, யீவறு பிறவிக் குழியில்வீழ் சீவ வெருத்தினை யிக்குழி நின்று, மோவலின் முயல்வா லெடுப்பதே வலியா முயர்ந் தனு நிகளுற வுளதே, னுவிகர் நாவாய் தருவபோ லூக நல்குவர் பவக்கடல் கடக்க. 3

எவ்விடத் தில்லை நல்லனு நிகளா மீர்ங்கனி மலர்குளிர் சோலை
யவ்விடங் கானன் மேடதா மாங்கே யமர்பவ ரறிவிலா ரன்றே

கவ்விய செல்வ நட்புநூல் சுற்றங் கருமமா திகளெலா முதவா;
செவ்விய மநமே யுதவுறல் வேண்டுஞ் சீவனைச் செல்கதி யேற்ற. 4

நெறியுற விடாம லுடனுறை நட்பா நெஞ்சமாத் திரத்தினைக் கூடிச், சிறிதுநா டுதலுஞ் சீவனுய் வுறுமாற் சிங்கியா மிந்தவு னுடலை, முறிதரு காட்ட மோட்டினே ராக முற்றுறு கருத்தினு ளேக்கி, யறியிலிவ் வளவா லறிந்துசேர்ந் திடலா மண்டரு மிறைஞ் சுபே ரறிவை. 5

நிறைபெருங் கடலொத் துரையெலாங் கடந்து நிகரறப் பற்றற வெறிதாய்க், குறைவில்சிற் சுடரின் கொழுந்துடன் கூடிக் கோதற வசைவறக் குலாவு, மறைவறு துரிய விழிவெளிப் படுமேன் மற்றத னுடனது நிகரா, முறைமையிற் றுயில்வோர்க் கண்ணிதா வுவமை மொழியலாய்த் தோன்றிடு மன்றே. 6

ஆனவவ் வவத்தை வடிவெலாம் பரிக்கு மம்பரம் போலகன் றுளதா, மீனநெஞ் சுடன்சே ரகங்கா மிறந்தா லெப்பொரு ளிடத்தினு மிருக்குந், தீனமில் பரமா நந்தமாய்த் தோன்றுந் திகழ்பர மாத்தும வடிவாந், தானனி முயலிற் கிடைத்திடுந் துயில்வோர் தன்மைபோற் றம்மினு டிவதாம். 7

உரைகளுக் கெட்டா துளத்தநு பவிக்கி லுறுவதா முரைத்தவத் துரியங், கரையறு மிவைகண் முழுதுமப் பொருளாங் கநபரி ணமியா முள்ளம், வரைவற வொடுங்கி லுட்புற மெங்கு மன்னிய சராசர வடிவாம், புரையறு தேவ தேவனும் பரமப் பொருளநு பவப்படுந் தானே. 8

வேறு.

அதற்பின் விடய வாதனைக ளறுவ தாகு மதற்பின்னர்
விதப்பி லாத பொருளினுடை விளக்க மாகு மதற்பின்னர்
சுதப்பண் பில்லாச் சமத்துவத்தாற் சொரூபந் தன்னிற் பரிணமி
மிதத்தி லுளதா முயர்ந்தோர்க்கு மெண்ண வொண்ணு வடிவிதுவே.

மநத்தை மநத்தான் மாய்வித்து மாசில் பொருளைக் காரேலோர்
திநத்து முலகின் றுயர்மாயாச் சித்த மிறக்கிற் செறிசுகத்தாற்
கநத்த வுணர்வின் மதிநிகழுங் கழறு மிதற்கோ ரிதிகாச [கே. 10
மினத்தி லினியாய் கேட்டியென விசைத்தான் வசிட்ட னிராமனுக்

சைய மென்னு நெடுங்கிரிமேற் றவவத் திரிமா முநியுறையு
ளுய்ய வதன்பா லிருமுநிவர் சூழ லொன்றி னுறைகிற்போர்
மெய்ய ராகு மவ்விருவர்க் கிருவர் பிறந்தார் வியன்புதல்வர்
செய்ய விலாசன் பாசனெனச் செப்பும் பெயரோர் செறிநண்போர்.

ஒழுங்கால் விருத்தி பெற்றிருந்தோ ரொன்றே யிரண்டா யினவென்
வழுங்கா வுளத்தோ ரவர்தந்தை யன்னை யென்போ ருயிரிறப்ப [ன
விழுங்கா நின்ற பொருமலொடு மேற்செய் பிதுர்க்கள் விதிகண்முடித்
தெழுங்கா தலினு ளெந்திரங்கி யிருபா லகன்று ரிருவருமே. 12

அளவில் காலம் வநத்துறைந்தா ரரிய தவத்தா லுடல்வாட்டிக்
கிளரு மாசை விட்டகன்றார் கிட்டப் பெற்றார் கேணமையினு
லுளமுங் கண்ணுங் களிப்பெய்தி யுயர்ந்த விலாச னுரைசெய்வான்
வளரு முலகி னல்லுறவே மன்னு முயிர்போல் வந்தனையால். 13

இதுநீள் கால மெங்குறைந்தா யிதய விடர்தீர்ந் தனைகொல்லோ
பொதுவா யுனைநீ யறிந்தனையோ போத விஞ்சை பலித்தனவோ
சதுரா நலனுண் டாயினையோ சாற்று மென்ற மொழிகேட்டு [கி.
முதுவாய் மையினுற் பாசனிவை மொழிந்தான் விலாசன் முகநோக்

உயிர்போ லுறவே விதிவயத்தா லுன்னைக் கண்டே னுளங்குளிர்ந்
தேன்
செயிர்சேர் பிறப்பி லுழல்வேற்குச் சிறந்த நலனுந் திறனெங்கே
பயில்வ தறிவ தறிவளவும் பாயு முள்ளங் கெடாதளவும்
வெயில்வெம் பவநீங் காதளவு மிக்க நன்மைத் திறமெங்கே. 15

மநத்தின் முளேக்கு மாசையெலாம் வடித்த குடாரத் தான்மரம்போ
கநத்த வேரோ டறுமளவுங் கண்ணு ஞானம் பெறுமளவு [ற்
மநத்த பேதம் போய்ச்சமமா மளவும் போத முறுமளவுஞ்
செநித்து மரிக்குந் துயரல்லாற் சிறந்த நன்மைத் திறமெங்கே. 16

மடமை நோய்க்கு மாமருந்தாய் வருமாத் துமதத் துவப்பேற்றை
விடநின் றவர்க்கு வன்பிறப்பாம் விடேசி மேன்மேல் வந்திடுமா
விடாரின் பத்தி னிடைப்பட்டு மிறப்புப் பிறப்பில் வீழ்ந்தலேந்துந்
தடமா ருலகி லுழலுயிர்கள் சருகி னுலர்வ ரென்றிசைத்தான். 17

5—8. பாச விலாசர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1154.

---

## 5—9. வீதகவ்வியன் கதை.

இன்னணமே நன்மைவிஞத் தம்மிற்ரு மியம்பியுறை யிருவ
ருக்கு, முன்னியநற் காலத்தான் முத்திதரு மெய்ஞ்ஞான முந்திற்
றன்றே, யன்னதினு லுரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தா
லன்றி மாய்க்கப், பின்னேயொரு நெறியில்லேப் பாசத்தாற் பிணிப்
புண்ட பிணிநெஞ் சுச்சே. 1

பற்றிலதாய் நிர்மலமா மநவிவகா ரம்பயின்றும் பந்த மேவாப்,
பற்றுளநெஞ் சளவிறவம் படைத்தாலும் பந்தமே பயிலு முள்ளிற்,
பற்றிலதா யினியதொழில் பயில்சீவன் புறத்தொழில்கள் பண்ணி
னுலும். பற்றறப்பண் ணுவிடினும் பண்ணுவோன் புசிப்போனும்
பான்மை மேவா. 2

என்னனுமே பற்ருவ தெத்தன்மை யெப்பற்ரு லெய்தும்
பந்தந், துன்னரும்வீ டெப்பற்ரு லெய்தலாந் தொடர்பற்றைத்

துடைக்கு மாறேன், பன்னுகெனு மிராமனுக்கு முசிபகர்வா னுட லுயிரைப் பகுப்ப தொன்று, முன்னுகிலா துடலினைநம் புதல்பற்ரு மதனலே யுளதாம் பந்தம். 3

ஈதனைத்துஞ் சொருபமே யானிங் கெத்தை யிச்சிப்பே னெதை யிகழ்வே னெனல்பற் றின்மை, மாதுயர்தீ ரிதுசிவங் முத்தர் மெய் யின் மன்னுமா லியானில்லைப் பிறரு மில்லை, மேதகுமின் பங்க ளெலா மேவின் மேவ மேவாதேன் மேவாதா யிடுக வென்றே, யோதியவா றுள்ளேபற் றின்மை யுண்டே லுயர்வீட்டுக் கிதுநெறி யென் றுணர்தி யன்றே. 4

கருமமிலா மையைவிரும்பார் கருமம் பற்ரூர் கருதுபலன் விட்டிரண்டுங் கண்டா லொப்போர், மருவியபற் றிலாதவரென் றுரைப்பர் மேலோர் வருகரும பலாதிகளைக் கருமத் தாலே, யொரு வலற மனத்தாலே நிபுண மாக வொருவுதல்பற் றின்மையென வுணர்தி யித்தாற், பெருகவளர் தொழிலனைத்துங் குற்றந் தீர்ந்து பெறலரிய முத்தியையும் பேரு நல்கும். 5

புழுமுதலாம் பல்பிறப்பிற் ரேன்றிப் பல்காற் பூதமெலாங் கடற்றிரைபோற் பொன்றுந் தன்மை, பழுதுதரும் பற்றினது படர்ச்சி யாகும் பற்றுத்தா னிருவகையா மவற்றி னென்று, நபூவு பய னிலியொன்று வணங்கற் பாற்ரு நவின்றபய னிலிமூடர் நண் ணற் பாற்ரும், வழுவறுதத் துவமுணர்ந்தோர்க் குடைமை யாக வணங்கற்பாற் ரூம்பற்று மருவுந் தானே. 6

ஆத்துமதத் துவவுணர்வால் விவேகந் தன்ன லடைவாக வுண் டாம்பின் பணுகாச் செந்ம, மேற்றமுள தொழுதகைய பற்றீ தாகு மீதன்றிப் பயனிலியாம் பற்றே தென்னி, லூற்றமுறு முணர் வின்றி யுடல முன்ன முறுபொருளி னலுண்டா முலகந் தன்னிற், ரேற்றழிந் பிறவியின் னெள்ள தாக்கூர் தோன்றலே யிவை யிரண்டுந் [illegible] கொள்ளே. 7

வளையாழி கதைகரத்த செங்கண் மேனி வணங்கப்பாற் ளூம் பற்றின் வசத்தி ஞலே, யிளையாமல் விவிதமாந் தொழிலி ஞலே யெவ்வுலகு நன்ருக விரங்கிக் காக்கு, முளையாத விஞ்ஞாநக் கதி சேர் சித்த ருலகபா லகராதி யுரைத்த வாறே, விளையாடி வணங் கப்பாற் றென்னும் பற்ருல் விரிந்தசக மூர்த்தத்தின் மேவி நின்ருர். 8

கேடான நல்லதெனு நினைவி ஞலே கிளர்போக வசத்தாலே கிட்டி நெஞ்சம், வீடாத பயனிலியாம் பற்றி ஞலே வெறும்பிணத் துக் கழுகுபோல் வீழு மன்றே, பாடான பயனிலியாம் பற்று ளோர்க்குப் பன்னரகங் களும்வீடாய்ப் பண்ணப் பட்ட, வீடான பயனிலிப்பற் றுள்ளோ ரென்னு மிளவிறகா னரகவெரி யெரியு மன்றே. 9

விச்சையெனும் விழிநன்ருய் விளங்கப் பட்டு வெம்மாய விட யத்தின் மீட்சி யெய்தி, யிச்சையுறு பற்றென்ப தெங்கு மில்லா வியன்மநத்தோ டிருப்பவரே யிறவா முத்தர், நிச்சயமா யெப் போது மெவற்றின் பாலு நிற்பவனு யனைத்துடனு நிற்போ ஞகி, யெச்செயலுஞ் செய்வோனுஞ் சீவந் முத்த னியற்றியவிம் மநத் தின்ற னியல்பு கேளாய். 10

தொழிலினிளை விற்பொருளில் விண்ணின் மேல்கீழ் சூழ் திசையிற் புறப்போகத் தொகுதி தம்மி, விழிதருமைம் பொறி நடையி லுள்ளி னிற்கு மின்னுயிரிற் சென்னியிலா நநத்தி னுவி, வழியும்விழி களின்மூக்கிற் புருவந் தன்னி லகங்காரத்திற் சீவனி னுள் ளாகா சத்தில், விழிநனவிற் சொப்பனத்தில் சுழுத்தி தன் னில் வெள்ளைமுத னிறமைந்தின் வியன்வண் ணத்தில். 11

சலநத்திற் றிரத்திலடி நடுவி லீற்றிற் சமீபத்திற் றூரத்திற் சரீராங் கத்திற், பலபண்டந் தன்னிற்சே தநத்திற் சத்த பரிசாதி களின்மகிமை பயிலின் பத்தி, லுலவுவாத் திற்போக்கிற் காலப்

பண்பி லொருசிறிதும் பற்றும லுணர்வி லாறி, நிலவியகாண் பன
சிறிது பயின்று மெங்கு நிராசையாய்ப் பரசுகத்தி னிற்கு நெஞ்சே.

செப்பியவத் திறநின்று பற்றொன் றின்றிச் சீவத்தன்
மையைச்சேராச் சீவந் முத்த, ரிப்புவியிற் றொழிலெல்லாஞ் செய்க
தீர்க வின்பவுணர் வன்செய்கை யியற்றி னாலுந், தப்பறவே விட்
டாலுந் தொழில்க டம்மாற் றருபயன்க ளொருசிறிதுந் தாக்க
மாட்டா, மைப்புயல்கள் பலவிதமா யெழுந்த போதும் வானகத்திற்
பற்றாத வகையே போல. 13

அன்றியே யதுதனையுந் தீர நீக்கி யறிபொருளின் முடிவான
வறிவாற் றன்னி, யொன்றுமுப சாந்தனாய்ப் பளிங்கு போலுள்
ளொளிமேவிச் சீவனொரு மித்து நிற்ப, னன்றுணர்சிற் சுகராகிப்
பெரியோ ராகி ஞானபர ராய்ப்பரம நன்றாய்ப் பெற்றோர், நின்றசை
வார் புறத்தின்மயிற் பீலி போல நிலைகலங்கார் மேருவைப்போ
னெஞ்சி னுள்ளே. 14

அறிபொருளை விட்டகன்றா லழியுஞ் சித்த மந்தநிலை வியாபார
மனைத்து மில்லாச், செறிநனவிற் சுழுத்தியா மிதனை நாளுந்
தீராத பரிசயமே செய்யச் செய்யப், பிறிவின்முது துரியமா
மென்பர் மேலோர் பிழையிலா விதனிலே நிலைமை பெற்றுக்,
குறியறுமா நந்தவே காந்த சீலக் கொள்கையா லநாநந்தங் கூடு
மன்றே. 15

அந்தவநா நந்தமா நந்த மென்னு மறிவினதீ தந்தனை
யடைந்து ளோனைத், தொந்தமிலா யோகியெனச் சொல்ல லாகுந்
துரியாதீ தந்தனையுந் துன்னி னேனும், பந்தமுறு பவம்போய்த்தா
மதத்தால் வந்த பலவபிமா நங்கள்போய்ப் பரம வின்ப, நந்தலிற்றன்
மயமாஞ்சற் பாவந் தன்னி னன்னீரி லுப்புப்போ னன்றா
யொன்றாம். 16

சடமசட மெனுநோக்க மிரண்டி னூடே தனியாகி நின்றபர தத்து வத்தை, யிடவியபே ராரணிய முதலாம் வேத மிராமனே பலகாலு மியம்பு மன்றே, படருறுகாண் பனகாட்சி மேவும் போதிற் பரம்பொருளின் பற்ருகிப் பயின்ற வின்பந், திடவநுபூ தியின்வடிவா மாத லாலே திகழ்பிரம சாரமெனச் செப்புந் தானே.

தெரிபொருளுந் தரிசநமுஞ் சேரும் போதிற் சேர்ந்தசுக வறிவுமிகச் சிறந்த தாகுந், தெரிபொருளால் வளைப்புண்டாற் பந்த மாகுந் தெரிபொருளை விட்டகன்ருற் றிடங்கொள் வீடாந், தெரி பொருளுந் தரிசநமுஞ் சேரும் போதிற் சேர்ந்தவநு பூதியிடர் தீர்ந்த தாகுந், தெரிவுறவாங் கதுபற்றி நிற்பாய் நீநின் றிரநிலையாஞ் சுழுத்திதனைச் சேரு வாயே. 18

அதுதுரிய நிலையடையு மடைந்த போதி லாங்மாத்தான் றூலமல வணுவு மல்ல, திதமுறமுன் னிலையல்லப் படர்க்கை யல்லச் சித்தசித்துண் டில்லையெனுந் திறங்க ளல்ல, வுதிதமுறு நானல்லப் பிறனு மல்ல வொருவனல வநேகனல வுலக மென்றே, யிதுவெனக்காண் பனவாகிச் சித்த மாதி யிருமூன்றிந் திரியத்துக் கிடமாய் நிற்கும். 19

ஆங்கதுவே யதீதபத மாத லாலே யதுகிஞ்சி லன்றெங்கு மதுவே யாகும், பாங்குறுவீ டென்றம்ப ருலகி லில்லைப் பாத லத்திற் பூதலத்திற் பார்க்கி லில்லை, வீங்கியவா சைகளெல்லா மிறந்த கால விரிந்தமந மிறப்பதுவே வீடென் ருேது, மோங் கியவீ டெனக்குளதென் றுள்ளே யெண்ண முண்டாகின் மீண்டு மந முறப்ப விக்கும். 20

நினைப்புமிகி லிவனுக்குப் பிறப்பி றப்பு நீங்காது வன்பந்த நிலைய தாகு, மனைத்தினுக்கு மதீதமா யுருவ மெல்லா மாகியகன் ருத்துமதத் துவமே நிற்கில், வினைத்தொடராம் பந்தமெது முத்தி யெய்தி [illegible]

தெளிந்து நிறைந்தமல நெஞ்சாய் நல்ல சாந்தியையுற் றோர்விரும் பார் சற்று மொன்றும். 21

வெந்தோடு மாபத்தாங் கருவேற் காட்டை வெட்டுமெழுப் பரம சுக மேவுந் தாநஞ், சந்தோடஞ் சாந்தியெனு மரப்பூங் கொத்துச் சாற்றுறுமிந் நிராசையுறிற் றளர்வு தீரு, மந்தோபார் குளப்படியா முளையா மேரு வாசைகுரு விக்கூடா மவநி மூன்றும், வந்தோர் புன் றுரும்பாகு நிராசை பூண்ட மாருத வலங்கார வடிவு ளோர்க்கே. 22

காயத்தின் வேருகத் தன்னைக் கண்டோன் காயமீ ரினுமறி யான் கன்னற் கட்டி, தீயிற்கா யினுமரிந்த போது மின்பந் தீராத வாறுபோற் றெளிந்த ஞாநி, மாயத்தின் மோகத்தாற் பேத மாகான் மணந்தபர புருடன்மேன் மநஞ்சேர் மங்கை, நேயத்தான் மனைத் தொழில்கள் செய்யு மாப்போ னிகழ்தொழிற்செய் யினும்பரத்தி னிலைமை நீங்கான். 23

பண்டத்திற் பற்றின்மை யாலே சித்தம் பயில்சாந்தி முத்தி தரும் பகர்ந்த முத்தி, பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட் டாலும் பேறுகும் பற்றறுத்த பெரியோர்க் கென்பர், மண்டுற்ற நேயமற வாழ்வோ ரின்பம் வருஞ்சீவந் முத்தராம் வளர்நே யத்தாற், றெண்டுற்று வாழுமவர் பந்த முற்றோர் சொன்னமூன் றுமவனே தூய முத்தன். 24

வருதொழிலின் விருப்புறுன் வத்த மாந வழிநில்லான் சென்ற வற்றை மநத்தி னெண்ணான், கருமமுழு வதுமியற்றுந் தொடர் பந் தத்திற் கலந்தவர்பான் மநம்பற்றான் கவலை கூரான், மருவிய வோர் பத்தர்பாற் பத்த னுகும் வஞ்சகர்பால் வஞ்சகனும் பாலர் தம்பாற், பருவமுறு வாலனும் விருத்த ரானோர் பால்விருத்த னுந் தீரர் பாலு மாங்கே. 25

விடலைபால் விடலையாந் துயருற் றோர்பால் வெந்துயர முறு நிலைமை விடாத புந்தி, திடமுள தா மாநந்த நிறைந்து தோன்றுஞ் செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பே செய்யு, மடமையிலா வறிஞ ஞந் தெளிந்தோ னுகு மதுரமுள ஞந்தீ மநமில் லோனுஞ், சுடர் குளிரின் மதிகருகி லெரிகீழ் நோக்கிற் றுளங்கிவிய வான்சீவந் முத்தன் றாயோன். 26

இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொ ரூப மிவ்வண்ணம் பலசத்தி யிலங்கு மென்றே, புதுமைகளின் வியப்புறுர் சீவந் முத்தர் புனலசைவால் வேற்றுமையே போலத் தோன்று, முதுசுழி போ லவும்விண்ணின் மயிலின் றேகை முன்புகடி தசைத்தலுமே முத்தின் கூட்டங், கதுமெனமெய் போற்றேன்றல் போல வுந்தான் காநத்தசக மாநத்தசைவாற் கடிது தோன்றும். 27

வேறு.

என்ன வோதலு மியாதினு லசைந்திடு மியா தினு லசையாது, சொன்ன நெஞ்சகந் திருத்தலா நெறியெது சொல்லெனு மிரா மற்குப், பன்னு மாதவ னுரைசெய்வா னெள்ளிலே யெண்ணெயும் பனிதன்னின், மன்னு வெண்மையும் போன்மநத் தசைவுதான் மருவியே மிகத்தோன்றும். 28

சித்த நாசத்தி னெறியிரண் டியோகமுந் தெளிந்தஞா நமு மாகு, மொத்த யோகந்தான் மநத்துறு தொழிலினை யொருவழிப் படமாற்றல், சுத்த ஞாநந்தா னலம்பெறக் காண்பதாந் தொடர்மந மேதென்னின், மெத்து மாகம பூடண முரைத்தது விசையுயி ரசைவாகும். 29

உரைசெய் யாருயிர் தடைப்படி லுள்ளமு மொழியுநெஞ் சசை வற்றூற், புரைசெய் சென்மம்போ மாதித்தன் போய்விழிற் புவித் தொழில் போமாபோல், வரைசெய் மார்பனே யென்றலு முட

லெனு மனையின்விண் ணிடைநாளும், விரைவி லோய்வற வுழல்
பிரா ணதியை விலக்குமா றெதுவென்றான். 30

முனிவ னேதுவா னுலொடு மறிஞரை முன்னியே விராகத்தை
நனிமு யன்றுகற் றிதனினற் குடும்பமா நடைவிலங் கதுவிட்டுத்
தனிநி ராசைதா னிறைந்திடில் விரும்பிய தற்பொருட் டியாநத்தா
லநிச நீள்பக லொருமையே விளங்கிட வடுத்தசா தனைதன்னல். 31

ஏக தத்துவக் கநபரி சயத்தினு லிவ்வுயிர் தடையெய்துந்
தேக பூரகா தியிலுயி ரிளைப்பறத் திடமுறு பழக்கத்தா
லூக மாகவே காந்தமுற் றுள்ளுணர் யோகபா வனைதன்னன்
மேக மேனியாய் பிராணனி லசைவுதான் விலக்கிடப் படுமன்றே.32

பிரண வத்தினுச் சாரண முடிவினிற் பிறந்தசொல் லுறுமுண்மை
விரவு நாட்டத்தாற் றயில்பவ னுணர்வுதான் வெளிப்படி லுயிர்நிற்கு
பரவு தாலுமூ லஞ்செறி யிதழினைப் படருநா வாற்றள்ளி [ம்
யுரவி னலுயர் புரையிலே பிராணனை யோட்டின லுயிர்நிற்கும். 33

நாடு மங்குலி பன்னிரண் டெல்லையி னசியி னுனிதன்னி
னீடு வாநத்தி லறிவுக ளிறந்திடி னிலைபெற வுயிர்நிற்குந்
தேடு சாதனை யாலுயர் புரைவழி சிங்குவை மேல்விரலீரா
றாடு போயுயி ரெல்லையி னின்றுணர் வொளிக்குமே லுயிர்நிற்கும்.34

புருவ நாப்பணே கண்மணிப் பார்வைதான் பொருவில்சாந் தியின்மா
தெருளுங் கேதந வறிவங்கு தெரிவறிற் றிரிவுறு தயிர்நிற்குங்[ய்ந்து
கருது கின்றவிந் நெறிகளா லநேகசங் கற்பகற் பிதபேதத்
தருள்செ யும்பல தேசிகர் சொற்களா லசைவற வுயிர்நிற்கும். 35

இந்த யோகங்க ளறிவெலா மிளைப்பற வியற்றுசா தனையாலே
வந்து மேற்பிற வாதவர்க் குபாயமாய் வந்துறும் பழக்கத்தா

லுந்து மாருயி ரசைவுதான் கெடுமெனி லுள்ளமுஞ் சமித்தாறுஞ்
சிந்தை தான்சமித் தாறுமேற் செல்கதி சேடமாய் விடுந்தானே. 36

விகற்ப வாக்கெலா மெப்பத நோக்கியே மீளுமப் பதந்தானே, விகற்ப மற்றிடிற் சேடிக்கு மௌனமுநி விளம்பலும் விறல்வீர, ணிகழ்த்தி யோகத்தை யுறுமநம் பொறிகளி னெறிசெலாச் சமந் தன்னை, நிகழ்த்தி ஞயினி யுண்மைஞா நத்தையு நிகழ்த்தென முநிசொல்வான். 37

ஆதி யந்தமி லேற்றமே தன்வடி வாகிய பரமிங்குச்
சோதி யாய்நின்ற தென்னுமிவ் வுறுதியே துகளறு மெய்ஞ்ஞாநம்
பேதி யாநின்ற கடபட வடிவமாம் பெரும்பொருட் பலசத்தி
தீதி றற்பரம் வேறில தென்றுணர் திண்மையே நற்காட்சி. 38

செகங்கண் மூன்றினு முண்மையாம் பொருளறி திறமெது வெனச்செப்பில், செகங்க ளியாவையுந் தற்பொருள் வடிவெனத் திரமுறு நிறைவாகுஞ், செகங்க ளியாவையுஞ் சொரூபமே யிதிற் றிக ழபாவபா வனையெங்கே, செகங்க ளிற்செறி பெத்தமுத் திக ளெனத் தியங்குவேற் றுமையெங்கே. 39

பிறிது காண்பன வில்லைநெஞ் சில்லைமெய்ப் பிரமமே யவையாகிச்
செறியு மாலிவை யாவுமொன் ருகிய சிற்பர விசும்பாகு
நெறிகொள் பந்தம்வீ டெங்குள விதுவென நிகழ்பெரு வடிவாகிக்
குறிய றும்பெரும் பிரமமே நின்றது குறைந்திறந் ததுநெஞ்சே. 40

ஒருமை யாகவே யுணர்வினு லுணர்தியா லுருவைநன் குறநோக்கிற்
றருவுங் கற்களும் படங்களு முதலிய சற்றும்வேற் றுமையில்லை
மருவு சங்கற்ப மெங்குள சீவனும் வையகப் பொருளியாவு
மருக லின்றிய சாந்தரூ பம்பெறு மடிமுடி வுறநோக்கில். 41

அந்த ரூபமெப் போதுநீ யாகுவை யண்ணலே யிரண்டொன்றென்
றுந்து பேதத்தாற் சனிமர ணங்களென் றுன்னுறு மயக்கத்தாற்

ஞேர்ந்த வுள்ளத்தாற் றூன்றணிப் பிரமமே தோன்றுகின் றதுதன்னு
சிந்து கின்றநீ டிரையினூற் பன்மையாற் றெரிதருஞ் சலம்போல. [ற்

சுத்த மானதற் பரத்தினைத் தழுவியே தொடர்ந்தவுண் மதியாலே
யொத்து நிற்பவர் தம்மையெப் போகம்வந் துறுபிணி செயவற்று
மெத்து போகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம்
புத்தி யைச்சிறி தசைத்திடா வசந்தனூற் பொருப்பசை வதுமுண்
டோ. 43

உரைத்த பன்மைக ணினைவிலே யுள்ளவா முண்மையா யிலவுள்ளே
நிரைத்த பல்வகை வாவியிற் பிறிவிலா நிகழ்தரு நீர்போலக்
கரைத்த லன்றியிவ் வறுதிசேர் மதியுளோர் களங்கமில் வீடுற்றோர்
புரைத்த லன்றியே நலனுறக் கண்டநற் பொருளுமிங் கிதுதானே.

ஈது வேறென்று முத்திசென் றுறுநெறி யியம்புதுங் கேள்வீரா
வீத கவ்விய னென்றொரு பெருந்தவன் விந்தவெற் பிடைவாழ்வோ
காத லாலுயர் கன்மகாண் டத்திலே காலமட் டறநின்று [ன்
கேத மாதியே வியாதிவன் பவந்தரு கிரியையான் மிகநொந்தான்.

நிருவி கற்பமாஞ் சமாதியின் பொருட்டுமுன் னிகழ்கிரி யைகளெல்லா, மொருவி விட்டனன் பந்நசா லையினிடை யுற்ற னன் கலைத்தோன்மேன், மருவு பெத்தபங் கேருகா சநத்தநன் வருகுதி மிசைவைத்த, விருக ரத்திரள் விரலின னிவ்வகை யிருந் தன னெருப்பட்டு. 46

பரந்து திக்குறு மநத்தினைப் பையப்பையப் பார்த்துமீட் டனனுள்
நிரந்த ரித்தனன் புறத்துள பரிசங்க ணீத்தன னெழுங்காலே [ளே
துரந்த சித்தத்தின் றிரநிலை விரும்பினன் றுகளறு மநத்தாலே
புரந்த நற்றவ வீதகவ் வியமுநி புலப்பட நினைவுற்றான். 47

வியப்பு டைத்திது மீளுவித் திருக்கவும் விசையுயி ரசைவுற்றுத்
திவக்கு நெஞ்சகந் திரநிலை யன்றியே சிறுசரு கென்வோடும்

பயக்கு மின்பமில் கடநின்று படமுறும் படநின்று கடமெய்து [ல்.
மயக்க மேவுபல் பொருள்களிற் போய்விழு மரங்களிற் குரங்கேபோ

விழிமு தற்புல னய்மநத் துவாரமாய் மேதையிந் தியமென்றே
யொழிவி லாவபி தானஞ்செ யைம்புல னுணர்ந்துகாண் புறநானே
கழியு மிந்தியங் காளவ மாகவே கலங்குகே னந்தோநீ
ரழிவில் சிந்மயப் பகவனுய்ச் சகலசான் ருகிநின் றனனுனே. 49

அன்ன தன்மையுற் றறிவினன் மிக்கயா னறிந்தகண் முதலேந்தும்
பிந்ந மாகியே வானுல கத்தினைப் பிரிந்தபா தலம்போலாம்
பந்ந கங்களும் வழிச்செலு மவர்களும் பறையரு மறையோரு
மென்ன வச்சமுற் றுயர்ந்தசிந் மாத்திர மிந்தியத் தருகெய்தா. 50

சாறு வாகனுய்ச் சாரண னுகிநாற் றடந்திசை பலியேற்கப்
பாறு நெஞ்சமே வீணிலே வருந்துதல் பயனில படிமீதே
யாறி யேவிளை யாடுநீ யுனையறி வென்னும்வா தனைபொய்யாம்
வேறு பாடுதான் மிருந்துள மநத்தொடு மெய்யுணர் வொன்ருகா.51

சுகமி ருக்குன னனென வகங்காரத் துன்மதி யிதுதீதா
மகம திப்பினு லிவனவ னுகுநா னென்னுமிவ் வாரம்ப
மிகவ கற்றுவா யுன்வடி வெதுவெனில் விசாரமின் மையதாகு
மிகவி சாரத்தா லழிந்திடும் பரிதியா லிருள்கழி வதுபோல. 52

முன்னந் தோற்றமற் றிப்பொழு துனக்கென வுருவின்றிம் முறையாலே, பின்னுந் தோன்றலை யென்னுடை நெஞ்சமே பெரிதுநீ பெறுநன்மை, யின்ன நீர்தெய்வ சகாயத்தா லிடரிலா வின்பமுற் றியானென்றுந், துன்னு சாந்தனுய்த் துரியமா மென்சொருபத்திலே சுகிக்கின்றேன். 53

எனவொ ருப்பட்டு வாதனை தீர்முநி யிந்திய மலைவின்றி
மனனை வன்பினு னிறுத்தினன் விறகினை மாய்த்ததீச் சிகையுள்ளே

நனிய டங்கல்போ லிவனுயி ரொழுங்கிலே நன்சொடுங் கினமூக்கி
னுனிநுண் பார்வையாற் சிறிதலர் கமலமே நோக்கங்க ணிகரான.54

சிரங்க ழுத்துட ருரங்கள் சமமுறச் சிலையிலே வகுத்தென்ன
நிரந்த சித்திர மென்னமுன் னூறியாண் டிருந்தன னிமிடம்போற்
பரந்த காருநாள் வெள்ளத்தி னெக்கரிற் படிந்ததிங் கிவன்மேனி
யுரங்கொண் மாமுனி யுணர்ந்தனன் மண்ணினு ளுடலசைந் தில
தென்றே. 55

தரைம றைத்தலா லறிவிலே தோன்றிய சரீரத்தி லுயிர்முற்றும்
புரைக ளியாவையு மடைதலா லசைந்தில போதமுற் பவித்துள்ளே
விரையுந் தன்மந வடிவமா யிதயத்தில் விரிந்தறிந் ததுயாவு [ன்.
நிரைகொள் சொப்பநம் போலவ னவ்வயி னெஞ்சுற விவைகண்டா

ஈசன் வெற்பயன் முநிவனுய் நூறியாண் டிருந்தது நூருண்டு
காசி லின்பவிச் சாதர ஞனதுங் கடவுளர் தொழவிண்ணில்
வாச வன்னென வைந்துக மிருந்தது மதிச்சடை யிறைவற்கு
நேச மாங்கண மாயொரு கற்பநா ணின்றது மவன்கண்டான். 57

விரவு தோற்றா வாலிவை யனைத்தையும் வீதகவ் விய ஞேக்கிப், பரனுக் காட்செய்த பலத்தினு லிறந்தன வறிந்துகாண் வலியுண்டாய்ப், புரண மாகமுற் பவங்களிற் பொன்றிமுன் போய தன் னுடன்முற்றுங், காவ றக்கண்டு வீதகவ் வியப்பெயர் காய மாய் வரக்கண்டான். 58

மறையு மிவ்வுட லெடுத்துமென் றெண்ணிநன் வான்கதி ரவன்பாற்போய், முறைசெய் பிங்கலன் றனைக்கொணர்ந் தெடுப் பது முடியுமென் ஷெருப்பட்டா, னறையுங் காற்றுரு வாய்ப்புரி யட்டக வங்கமாய்க் கதிரோன்பாற், பொறைகொண் மாமுனி சேர் தனு மிதயத்திற் புகுந்தவா றினன்கண்டு. 59

முன்ன நின்றபிங் கலன்றனைக் கதிரவன் முழுதுணர்ந் துடனேவ
வன்ன வீதகவ் வியப்பெய ருள்ளமு மாதித்த னுண்ணின்று

தன்ன தாக்கையில் விந்தவெற் பருகுபோய்ச் சார்தாக் கதிரோனுற்
சொன்ன பிங்கலன் வந்துகை நகத்தினுற் றுன்னில முறக்கிறி.60

மாநி லத்தினை யகழ்ந்துபிங் கலன்றா வருங்களே பரந்தன்னின்
மோந மாம்புரி யட்டகம் புகுந்தது மொழிந்தபிங் கலன்போனு
ஞன மாதவன் மூழ்கினன் செபித்தன னரிச்சித்தான் கதிரோனே
ஞாந நெஞ்சினு னிறையுடன் முன்புபோ னலந்திகழ்ந் ததுமீண்டும்.

வேறு.

சமம யித்திரி சாந்திசீ ரறிவருண் முதிதை
யமர்கு ணங்களா யனைத்தினு நெஞ்சுபற் றின்றிக்
கமர்கொள் விந்தநீர்த் தடக்கரை நாள்பல கழித்து
நிமல நெஞ்சினுற் பராபர முணர்முநி நினைப்பான். 62

பொறிக ளின்றிரண் முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள் சேடத்தைக் கூடியே மலையென நிற்போ
மறியத் தோன்றியு மறைந்தபோ லாகுது மறைந்துஞ்
செறியத் தோன்றின மொத்துநிற் குதுநொய்ம்மை சேர்ந்து.

உணர்வு விஞ்சியு முறங்கின னெக்குதுஞ் சுழுத்தி
தணிவ றப்பெற்று முணர்ந்தவ னெக்குதுஞ் சமனுய்க்
கணமும் வேறறத் துரியமே பற்றியிக் காயத்
தணவி நின்றுமோ ரசைவறு சோதிநா மாவேம். 64

என்று நாடிநற் றியாநத்தி லாறுநா ளிருந்து
சென்று ணர்ந்தனன் கண்டுயில் சேர்பதி கனைப்போ
லொன்று சித்தனுய் வீதகவ் வியட்பெய ருயர்ந்தோன்
றுன்று சீவன்முத் தியிலடைந் தநேகநாட் சுகித்தான். 65

தீது நன்மையின் வீடுபெற் றுஞ்சிதைந் தேக
வீத கவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ் சிலனுய்ப்
போதன் மீளலும் பிறவியுங் கருமமும் போக்கி
யோது தேகந்தீர் கேவல வீடுற வுணர்ந்தான். 66

சித்த ஞமுநி யொருபகற் கிரிமுழை சேர்ந்து
பெத்த பங்கயா சநத்தினன் ருன்றன்னிற் பேசு
மெத்து மாசையே நிராசையை மேவுதி முநிவே
யொத்து ளாறுதி விநோதித்தே னெடும்பக லும்மால். 67

வேறு.

போகங்கா ளுமைத்தொழுதே னெடுநா ளும்மாற் புவியில்விளை யாடியவா போதும் போதுஞ், சோகந்தீ ரிவ்வீடு மறக்கச் செய்த சுகங்காளுங் களைத்தொழுதேன் றுயர்கா ளும்மா, லாகந்தான் வேகலினு லன்றோ வன்பா லாத்துமதத் துவமுணர்ந்தே ஞத லாலே, யோகஞ்சேர் முத்தியெனக் குதவி னீர்நீ ருபகரித்த வுமைத்தொழுத லுரிமை யன்றோ. 68

நெடுநாளை நண்பனு முடலே யுன்னை நீக்குகின்றேன் மெய்ஞ் ஞாந நிரம்பக் கற்றுக், கெடுங்கேடுன் ஞலுனக்குத் தேடிக் கொண் டாய் கிளராசை யெனுந்தாயே கேளா யென்சொற், றடுமாறி நனி வாடித் தளர வேண்டாஞ் சாந்தனு யானகன்றேன் றரும மேநீ, யடுங்கோர நரகந்தீர் துறக்கத் தேமுன் ஞக்கினையால் வாழியுனைத் தொழுவே னன்பால். 69

உடன்பிறந்த நண்பரா முயிர்கா ளும்மை யொழுங்கிலே யொழிக்கின்றே னுய்ந்து வாழ்தீர், நடந்தகல்கே ஞனென்ன விவ்வா றுள்ளே நாடுமந மேடீணக ணன்று யாறி, யிடம்பெறநின் றோங்கார மெல்ல வோதி யிகப்பொருள்கள் புறத்துள்ள விதயத் துள்ள, தடம்பெரிய நுண்ணியமு வுலகி லுள்ள சங்கற்பத் தமைந்த வெலாந் தள்ளி ஞனே. 70

ஓங்கார முடிவாகத் தீர்க்க மான வோசையெனு நாலுடனே பொறிக ளுற்ற, தேங்காத புலனெல்லா மணத்தைக் காற்றுத் தீர்வதுபோற் றீர்ந்தனன்சே ணிடையே கங்கு, னீங்காது போலி

ருண்மாத் திரமுன் ேறான்றி நிகழ்தலுந்தள் ளினன்சோதி நேர்
முன் ேறான்றப், பாங்காகக் கணமதனைப் பார்த்துத் தீர்த்தான்
பயிலிருடே சிரண்டுமறப் பாறிப் போன. 71

அவத்தையிது தனைமநத்தாற் பற்றி மேலோ னங்குதித்த மநந்
திரண மென்ன முற்றுந், தவிர்த்தனனே ரிமைப்பிலதற் பின்னப்
போதே சஞ்சித்தசிசு வறிவொத்துச் சால நொய்தாய், நிவக்குமொளி
பெறுமறிவைப் பெற்றுப் பாதி நிமிடம்பா தியிலெண்ண நீக்கி
நின்றான், றுவக்குறுகாற் றசைவுவிடல் போலச் சித்தின் றொடர்
காட்சி மாற்றினன் றுகளி லாதோன். 72

வருசிற்சா மாநியத்தை யடைந்தான் சத்தா மாத்திரமே வடி
வானன் சுழுத்தி மேவி, யிருபொற்குன் றெனநின்றான் சுழுத்தி
யூற்ற மெய்தியபின் றுரியவடி வெளிதி னுற்று, னருகுற்ற நிரா
நந்த மாயு மாயா வாநந்த மாயசத்தா கியுஞ்சத் தாகி, யொருவுற்ற
வசநங்கட் கெட்டா தான வொருபொருடா னய்நின்று னெப்பி
லாதான். 73

சூநியமென் பார்க்கதுவாய்ப் பிரம மென்று சொல்லுவார்க்
கதுவாய்விஞ் ஞாந மென்று, தானியம்பு வோர்க்கதுவாய்ப் புருட
னகிச் சாங்கியர்க்கு மியோகியர்க்கீ சன்று னகி, யீனமில்லை வாக
மர்க்குச் சிவனய்க் கால மென்பாருக் கதுவாய்மத் தியர்கட்
கெல்லா, மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க் காணு மநத்தினர்க்
கெல் லாமான பொருடா னனன். 74

நூலனைத்தின் சித்தாந்த மேதெல் லோர்க்கு நோக்கியதே
தோர்ந்ததே தெல்லா மேது, ஞாலமெலா முறைவதே தசைவொன்
றில்லா நல்லதே தொளிக்குமொளி தருவ தேது, பாலுறுதன்
னநுபூதி யொன்றய்க் காணப் பட்டதே தொன்றயும் பலவா
மேது, சாலுகளங் கம்படைத்தும் படையா தேது சகலமுமா
யலாததே ததுதா னனன். 75

அடர்பிறப்போ டிறப்பின்றி யாதி யன்றி யாதியா யொன்றாகி
யநேக மாகித், தொடர்சகள நிட்களமாய் விண்ணி னொய்தாய்த்
தூய்தான நிலையீச னாகி யொல்லைத், திடமுறவே முப்பதினா யிர
மாண டெல்லைச் செருக்குறவேண் டியபடியே சகத்து லாவிப்,
படர்மநமீண் டெழாதவகை சமித்தொன் றானன் பகர்வீத கவ்விய
னாம் பரம யோகி. 76

5—9. வீத கவ்வியன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1230.

---

## 5. உபசாந்திப் பிரகரணம்.

### ஆகாச கமநாதி அபாவ நிரூபணம்.

என்ன வுரைத்த முநிதன்னை யிராம னோக்கி யுரைசெய்வா
னான்னு சீவன் முத்தியினோ ருடல்கட் கெல்லா மாகாயந்
தன்னி னடத்தன் முதலான சத்தி காணே மென்னென்ன
வன்ன வினாவுக் குத்தரங்க ளறிய வுரைத்தா னருள்வசிட்டன். 1

பெரிய வுணர்வில் பெத்தர்களும் பேணு மருந்தான் மந்திரத்தாற்
கிரியை தன்னாற் காலத்தாற் கிளர்ந்த வூகத் தாலியற்றின்
விரியும் விண்போக் காதிகளை மேவா நிற்பர் மெய்யுணர்வோர்க்
குரிய வல்ல விவையவர்க ளுண்மை நோக்கே விடாதுறுவார். 2

அறிந்தோ ரறிவா லறிவினிடத் தமைவ தல்லா லாசையின்பின்
பிறிந்தோ டார்கள் சகப்பொருளின் பேத மெல்லா மாயைகளே
மறிந்தே மாயை கெடவென்றோர் மறித்து மதனின் மூழ்குவரோ
செறிந்தே யறிஞர் களும்விரும்பிற் சித்தி யுறமுன் பகரொழுங்கால்,

அவ்வா றுன விவனவனு னந்த மாகாப் பிரிவற்றுத்
தவ்வா தெல்லாம் பரித்தொன்றுய்ச் சால நிறைந்தெல் லாநிறைவித்
தெவ்வா யினுமோர் சமனுகி யியலா சார மியலொளிகொண்
டொவ்வா தாய்ச்சித் தாய்நின்றே னெழியே னென்றே பூசிக்க. 46

அமல விம்மாப் பூசையினு லதிகத் தெளிவை யெய்திடலாஞ்
சமம தாயெல் லாமான தடம்புந் தியினு லுடலறிவு
சுமடென் றப்பா லாஞ்சித்தைப் பெற்ற தொன்றுற் றெடர்பாக
விமல மானேர் பூசிக்க வேண்டு மென்பர் விடாதென்றும். 47

எட்டா தொன்றை வேண்டுமென விதற்கா யிரங்கா திச்சைவழி
முட்டா வறிவாற் பூசித்தன் முறைமை யந்த பாநத்தாற்
றட்டா துயர்ந்த செல்வத்தாற் சயநா சநம்வா கநங்களினுற்
கிட்டா நின்ற சுகமனைத்தா லறிந்து கிளர்பூ சனைசெய்க. 48

ஆதி வியாதி பயின்மோக வாரம் பத்தா லனைத்திடரா
னீதி பயிலு மிராச்சியத்தா னிறையு மிடியால் விசித்திரமாந்
தீதி றெழில்க ளாமலராற் சித்தை யறிந்து பூசிக்கக்
கோதில் போக நவைபோகங் கொளனீக் குதலா லருச்சிக்க. 49

நிருவி கார பாவனையா னேர்ந்த பொருளை யினிதருந்தி
யொருவி யிறந்த பொருளினையே யுருமை யுணர்வின் பூசனையாம்
வெருவு துன்ப மின்பமுதன் மேவு மனைத்து முணர்வுருவாய்க்
கருதல் வேண்டு மழிவறசிற் கடவுள் பூசை யொழியாதோர். 50

என்று மெல்லா வடிவாலு மெல்லா விடங்க டம்மாலுந்
துன்று மெல்லாம் பிரமமெனத் துணிந்து பூசை செயல்வேண்டு
மன்றெ னுமல் விரும்பாம லடைந்த போக மெலாமறிஞர்க்
கொன்று சுபாவத் தாற்புசித்தற் குரித்தாங் கடற்கு நதித்திரள்போ [ல்.

நீச முயர்வா னோக்கங்க ணேர்ந்தா விறையும் பற்றுமற்
றேச காலத் தொழிற்குரித்தாய்ச் சேரா நின்ற சுபாசுபத்தை

யாசு விகார மறக்கைக்கொண் டதனற் பூசை செயல்வேண்டும்
பேசு பரமார்ச் சனைவி தியிற் பெரிது மிவைநற் றிரவியமே. 52

இனைய திரவி யங்களெலா மினிதாஞ் சாந்தி யொன்றுலு
நினைபா வனையாற் புளிப்புறைப்பு நிறைந்த கைப்புத் துவர்ப்பனைத்
றினையு மின்றிச் சித்திரமாங் தித்திப் பாலே செறிந்தனவா [தின்
யனைய சாந்தி மதுரத்தா லறவே நிறைந்த தருந்தவனே. 53

தக்க சாந்தி பயிலிரத சத்தி யாலே பாவிக்கிற்
றெக்க பொருளாய்க் காண்பதெலாஞ் சுதையா யிமைப்பிற் றூய்மதி
னுக்க விரதம் போலாகு முயர்ந்த சமமாஞ் சாந்தியினுன் [யி
மிக்க வறிவா கியுங்கற்போல் விளங்கு முணர்வாற் பாவிக்க. 54

தேச காலத் தொழிலொழுங்காற் சேர்ந்த பொருளின் சுகாசுகத்தின்
வீசு மயக்கங் களினுலே மெய்யிற் கடவு ளருச்சனைசெய்
தாசை யெல்லாம் புந்தியினு லன்றி நிற்பா யுயர்மாயை
நீச மாயை தனைநீக்கு நெடுஞ்சங் கற்ப நஞ்சறுக்கும். 55

கருதி மலத்தான் மலமறுக்குங் காரு வென்ன மாயைதனைப்
பெருமா யையினுற் செறல்வேண்டும் பெரிய மாயை காரணமாம்
பொருளன் றுயுங் குருவாக்காற் புகலும் பொருளாய்க் காரணமாய்
மருவு முணர்வாந் தன்னுருவை வழுவா தளிக்கு முணர்வோர்க்கே.

குரவ னுபதே சத்தொழுங்கு குறிப்பான் மகன்பான் மிகவளர்ந்து
விரவு மென்னிற் காட்டரிதாய் வெளிநில் லாதா கிலுந்தானே
பரம ரூபம் வெளிநிற்கும் பன்னூற் பொருளாற் குருமொழியாற்
றரவு மரிதாந் தன்னறிவாற் றுனே யறிந்து பெறவேண்டும். 57

ஆசான் மொழியா னூற்பொருளா லன்றிப் பெறவு மரிதாகுந்
தேசார் குருநூன் மாணுக்கன் சிறக்க விம்மூ வருங்கூடிற்
பாசா தீதப் பரமெய்தும் பன்னு ணீங்கா விக்கூட்ட [போல்.
மேசா வுணர்வைத் தரும்பகற்போ தெல்லாத் தொழிலுந் தருவது

சொன்ன நெறியி லறிஞர்திறந் தோறுந் தேவார்ச் சனைபுரியி
லென்னை முதலோர் தொண்டர்களா லேத்த மிக்க பதமடைவ
ருன்னு சகமில் லாதிருந்து முண்டு போற்றேற் றிடுந்தோற்ற
மன்ன தொழிந்து வேறில்லை யரிய தவத்திற் பெரியோனே. 59

முந்தைப் பிரம முதலான மொழிகட் கெல்லாந் தெரிகின்ற [றித்
தெந்தப் பொருளாங் கதுசித்தென் றெண்ணு வாயன் னதுதோன்
தொந்தித் தறியும் பொருள்போலாய்த் தொடரும் பெயர்க்கு முரித்
யந்தக் கரண பாவனையா லகந்தை தனையும் பின்செல்லும். [தாகி

சேரு மிந்த வகந்தைக்குத் தேச கால பாவனையாய்ச்
சாரும் பாங்கித் திரளான சத்தித் திரளுண் டாந்தானே
நேரு மிவைசூழ் சற்பாவ நிகழ்சி வப்பேர் பெற்றுடனே
கூரும் புந்தி யெனலாகிக் கோளின் மூட ரிடத்திருக்கும். 61

சத்தங் கிரியை ஞானமெனுஞ் சத்தித் திரள்க ளுடன்கூடி
யொத்த கணந்தா னொருகணத்தி லுன்ன றன்னை யுண்டாக்கு
மெத்த சங்கற் பத்தருவின் வித்தா மென்ன மனம்விளையுந்
தொத்து புரியட் டகவடிவாஞ் சொல்லுக் கதுபாத் திரமென்பர்.62

அன்ன மனதுக் குயர்பரம னாலே வடிவாஞ் சத்திகளை
யின்ன வளவென் பதற்கரிதா மிதுதான் விசும்பு முதலான
துன்னு வடிவங் களைமேவித் தொகுதத் துவங்க டமைச்செய்யு
முன்னு பாழிற் கூளிகள்போன் மொழிந்த மனவா தனைதோன்றும்.

சகப்பேர் பெறுமிவ் வாதனைதான் றவிரி லழியாச் சாந்தியதா
மகப்பா வனையி லிச்சகத்தி லலகைத் தோரா நீர்தன்னி
லுகப்பா மறுதி யுள்ளோர்க ளுபதே சிக்க வொண்ணாதோர்
மிகப்பா விகளாஞ் சீசியென் றிகழ்வா ரவரை மெய்யுணர்ந்தோர். 64

பரம முணர்ந்தோர் விவேகியர்க்கே பரம வுபதே சம்பகர்வர்
திரமின் மயக்கத் திழிந்தோர்க்குச் செப்ப நினையார் சொப்பநத்தில்
வரனை நனவிற் கந்நிகைக்கு மகிண னுக்கு மியல்பொக்கும்
விரத முநியே நீசொன்ன வினவுக் குண்மை விளம்பினமால். 65

இனிதுண் டாக வுனக்கென்பா லேகு வோநா மென்றுமையும்
புநிதன் றானும் பரிவாரம் புறத்துச் சூழ விண்ணகன்றான்
பனிநன் மலரஞ் சலிசொரிந்து பணிந்தே னன்று முதலந்தத்
துனியி னெறியான் மெய்யுணர்வைத் தொடர்பாற் பூசை செய்கின்
றேன். 66

இன்று மென்றும் பதருமமியற்று பூசா விதானத்தாற்
றுன்று கின்ற வாதனைகள் சுமையன் றியிலே சுமக்கின்றே
னன்று வந்த கிரியைகளோ டாசா ரங்கண் மலராக
நின்ற பூசை தனிற்குறைவு நிறைவு காணே னிராப்பகலே. 67

கொள்ளு வானுங் கொள்பொருளுங் கூட லுயிர்க்கெல் லாம்பொது
நள்ளு மந்தக் கூட்டத்தே ஞாந யோகிக் கவதாந [வா
முள்ள தேதங் கதுதானே யுயராந் மாவுக் கருச்சனையாந்
தெள்ளு மிந்நோக் காற்சங்கஞ் சேரா மநத்தாற் சகத்துறைவாய்.68

இவ்வா றுலக மெனும்பெருங்கா டெய்தி வருந்தா யென்றலுமே
வெவ்வா ளிராம னுரைசெய்வான் விட்டே னைய மெலாமிகவுந்
தவ்வா தறியற் பாலவெலா மறிந்தேன் சலியா தருள்பெற்றேன்
கைவா ரணநே ராசைதனைக் கடிந்தே னென்றி லசைவில்லேன்.69

பிறவிக் கடலிற் றீரநிலை பெற்றுப் பிறழ்கற் பனையெல்லா
மறவிட் டயர்வற் றறவலிதா யறவே தெளிந்தா நந்தத்தை
யுறவுட் குளிர்ந்து நன்றான துள்ள மென்று மெய்ஞ்ஞாநத்
திறவித் தகனும் வசிட்டனுடன் செப்பி மேலுஞ் செப்புற்றான். 70

6—2. தேவ பூசை கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1470.

———

## 6—3. வில்வ பலக் கதை.

நின்னுரை யமுத தாரை நிறைந்துமுள் ளமைவு தோன்றுப்
பின்னரும் பூர ணத்தைப் பேசென விராமன் கேட்ப
மன்னுமா முனிவன் சொல்வான் வருபொருண் முதற்க ணத்தே
யின்னல மாகு மற்றக் கணத்தவ்வா றினிமை யாகா. 1

ஈதநு பவியா தாரா ரிச்சிக்க வினிதாம் வத்துக்
காதலி யாத போது கைப்புறு மாத லாலே
யாதா மூல மாகு மினிமைக்கிவ் வினிமை தானும்
போதுமென் றிடப்போ மிச்சை போக்கினு லனைத்தும் போமே. 2

பன்மையா மாசை தீர்க பாவனை யறுக சித்த
மின்மையா யொழிக சங்க மிலாமையா யுனக்குச் சொல்வாம்
புன்மைவா தனைபற் றுவுட் கரணத்தாற் புரியுஞ் செய்கை
வன்மையாற் கலக்கங் கோடி வருகினும் வருத்தஞ் செய்யா. 3

விழிப்பினோ டிமைப்பிற் சித்தஞ் சகத்தினை விளைத்தொ டுக்கு
மொழித்துவா தனைபி ராண னொடுக்கத்தா லுளத்தை மாய்ப்பா
யிழித்தபே தைமையின் றேற்ற மொடுக்கமா மிரண்டி னுலுஞ்
சுழித்திடு கரும மெல்லாந் தோன்றிடு மொடுங்கு மன்றே. 4

ஆதலாற் குரவ னன்னூ லகல்கிலாச் செறிவால் வன்பிற்
பேதமை யுளத்தை மாய்ப்பாய் பிராணனைத் தடைசெய் தாலும்
வேதந வசைவு தீர விடுகிலுஞ் சித்தம் போகுந்
தீதறு மதுவே மேலாம் பதமெனச் செப்பு மன்றே. 5

தெரிபொரு டரிச நஞ்சேர் கூட்டத்திற் சேர்ந்த வின்பம்
விரிபர மார்த்த மாகு மதற்குமே லினிவே றில்லைப்
புரிதரு பிரம நோக்கா மதனினுற் பொன்றுஞ் சித்தம்
வரிசையாஞ் சித்த நாசம் வஞ்சமி லின்பந் தானே. 6

தேய்ந்திடல் வளர்த லில்லைத் தெரிவுறு மறைந்து போகா
வாய்ந்துணர் ஞானி சித்தஞ் சித்தமன் றதன்பே ருண்மை
யேய்ந்தநா நாத்து வத்தோ டந்நிய மெய்தல் சித்தந்
தோய்ந்தபோ தத்தாற் செம்பு சொன்னமா வதுவே போலாம். 7

சித்தெனுந் தத்து வந்தான் சித்தமாய்ச் சகத்தி லோர்காற்
றுருத்திய விநோதஞ் செய்து துரியமா மவத்தை மேவி
நித்தமாந் துரியா தீத நிலைமையா மாத லாலே
பித்துறு முலகாய்ப் பன்மை யாய்நிற்கும் பிரம மொன்றே. 8

முற்றுமாம் பிரம மன்றி மொய்ம்மந முதல வேறு
யுற்றவை சிறிது மில்லை யுளத்திலோர் பணதி போல
நிற்றலுந் தோன்று மத்தை யறிசுக நிகழ்த்து கின்றேன்
கற்றவர் வியக்க நன்றாய்ப் புதுமையாங் கதைநீ கேட்பாய். 9

கோடிமா கோடி கோடி யிலக்கங்கள் கொண்ட காத
நீடிய வகல மொவ்வா தகன்றது நெடுமா கற்பம்
வீடிய நாளு முற்று றதுமிகப் பழைய தேனும்
பீடியன் மதிக்கொ ழுந்திற் பெரிதுமெல் லியது மாதோ. 10

கற்பத்திற் பெருங்காற் றுலுங் கலக்குறு ததுபே ரண்டத்
துற்பத்தி மூல மாவ தொருவில்வப் பெருங்கா யுண்டு
சொற்பத்து மதன்பாற் றோன்றித் தொலைவுறு பிரமாண் டங்க
ளற்பத்தி லெண்ண வொண்ணு வதனியல் பின்னங் கேளாய். 11

என்றும்பக் குவமாய் நின்று மிறையுமூப் பிடர்செ யாது
நின்றபல் கனியின் சார மனைத்தையு நிறைந்து நிற்குந்
துன்றிய வதன்பான் மச்சைக் களவில்லைத் துன்னு மச்சை
யென்றது சிற்சொ ரூபத் தியற்சமத் காரந் தானே. 12

சஞ்சல ரூப மாஞ்சிற் சத்தியாஞ் சமத்கா ரத்தாற்
செஞ்செவே சமமாந் தன்பாற் சிற்கண்டான் விரிந்த தோதில்

விஞ்சிய வியோம மீது காலத்தின் விகார மீது
துஞ்சலி னியதி யீது துவள்வுறு தொழிலீ தென்றும். 13

இதுபிர மாண்ட மண்ட மாசையி னெழுங்கீ தென்றும்
விதமுறு வில்வக் காயுள் வியன்சமத் கார மச்சை
யதுலனே யென்ற லோடு மண்ணலு முரைப்பான் ஞாந
முதல்வநீ வில்வக் காயாய் மொழிந்தது தெரிந்த தன்றே. 14

வில்வக்கா யென்ற தைய பெருஞ்சித்தின் மிகுந்த சத்தை
புல்லுற்ற வகங்கா ராதிப் பொருளெலாஞ் சித்தின் மச்சை
சொல்லுற்ற விரண்டா யொன்றாய்த் தோன்றுசிற் சொரூபத் துக்கு
மல்லற்றே சிகனே யென்றும் பிரிவிலை மற்றுங் கேளாய். 15

புகல்பிர மாண்ட மென்னும் பூசணிக் காயுண் மச்சை
யகல்வட மேரு வாதி யகிலமு மான வாபோன்
மிகவுயர் சித்தாம் வில்வக் காயினுள் விரிந்த மச்சை
பகர்பிர மாண்ட மாதி யுலகங்கள் பலவு மென்றான். 16

## 6—3. வில்வ பலக் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1486.

---

## 6—4. சிலைக் கதை.



மீண்டு மோர்கதை விசித்திர வியப்பது வீரநீ கேளென்று
நீண்ட மாதவ னுரைசெய்வான் சிக்கென்று நெருங்கிமெல் லியதாகி
யீண்ட கன்றுவித் தாரங்கண் முடிவின்றி யிலங்குமோர் பெருங்கல்லு
மாண்ட துண்டத னிடைவிரி கமலங்கண் மலர்ந்தன வரம்பில்லை. 1

இலைக டம்மிற்றுங் கோத்தன நெருங்கின வெதிர்சில தெரியாத
சிலதெ ரிந்தன மீதுதா ளாயின சிலசில கீழ்த்தாளாய்

நிலைகொண் மூலமில் லாதன சிலவிவற் றிடையெலா நிகழ்சங்கம்
பலதி ரண்டன சக்கர முடிவிலே பண்ணிய பதுமம்போல். 2

என்ற போதுசா லக்கிரா மப்பெய ரிடத்திலே நெடு மாய
னின்ற குன்றிலே கண்டன னனையதோர் நெடுஞ்சிலை யெனக்கூறும்
வென்றி வீரனை வசிட்டனு நோக்கியே வெற்புநீ முதற்கண்ட [ன்.
தன்று பேரண்ட நிலைமையுள் ளேயுறை யறிவையே சிலையென்றே

பலவு மொன்றுமெய் யாகிய சகங்களுட் பயின்றசித் துயர்கல்லா
நலனு றச்செறிந் திறுகியொன் ருகியே நவின்றசிற் சிலையின்பா
லுலக சாலங்க ளுறைந்திடும் வானிலே யுறைதரு காற்றேபோ
னிலன்விண் கால்கிரி திசையெலா மேவியு நெடுஞ்சிலை புரையாகா.

செவ்வி தாங்கலில் வநசமுஞ் சங்கமுந் திகிரியு மெனுங்கீற்று
வவ்வு கின்றதோர் சுழுத்தியா மவத்தையாய் மருவுறு மதுபோலத்
தவ்வில் சித்தினு ளுலகங்கண் முழுவதுந் தங்குமால் வேறன்றி
யெவ்வி டத்திலியா தெப்படி யிருந்ததவ் விடத்தினப் படியென்ப.5

வேறு.

நாநாவாம் பணதிகளுண் ணண்ணுகினு மொருமையே நண்ணுங் கற்போ, லானுத சகங்களையுள் ளடக்கினும்வேற் றுமைமேவா தறிவொன் றேயாங், காஞர்பங் கயமெல்லாம் வேறன்றிக் கன்மய மாங் கணக்கே போல, வானுர்சிற் சொருபத்தைப் பிரியாத தன்மயமாம் வையமெல்லாம். 6

விரிசிலையி லெழுதியபங் கயமாதி யுதித்தத்த மித்த துண்டோ, திரிபுவநங் களுஞ்சித்தி லப்படியே வில்வக்காய் செறிந்த மச்சைப், பரிசினின்முன் னுரைத்ததுபோன் முடிவில்லா விகாரத் தாற் பரந்த வண்டந், துரிசிலா வறிவினிடைத் துன்னுமால் வேறென்று சொல்ல வொண்ணு. 7

பிரமத்தின் சற்பாவ வடிவான பேருலகின் பேத மெல்லாம், பரமார்த்த சுழுத்தியாய்ச் சாந்தமாய்ச் சமமாகிப் பயின்ற சித்தாய்க், காமுற்ற தன்னுருவாங் கண்ணுகுங் கல்லிடைத்தா மரைகள் போலத், திரமற்ற சிருட்டியெலாம் பயனில்லை யுடல்களெலாஞ் சேரா தென்றும். 8

## 6—4. சிலைக் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1494.



## 6—5. அருச்சுநன் கதை.

என்னலுமே யறிவதெலா மறிவுற்றேன் காண்பனவு மெல்லாங் கண்டே, னுன்னருளா லென்னினுநல் லுணர்வுவளர் வுறமீட்டு மொன்று கேட்கேன், றன்னுலகை யாயிரமட் டமைப்பதாய்க் கண்ணடிபோற் றேன்று கின்ற, முன்னுபுரி யட்டகத்தின் வடி வேது மொழியென்ன முனிவன் சொல்வான். 1

ஆதிமுடி வின்றியே சகங்களின்வித் தாம்பிரம மடுத்த வண்ணம்
பேதமுற மேவுதலுஞ் சீவனு நாமென்று பேதித் தெண்ண
மேதமுற நானென்று மநநமுற மநமாகு மியைந்த போதம்
போதமுறு நிச்சயத்தாற் புந்தியாம் புலன்களாற் பொறிக ளாகும். 2

காயமெனு நினைவாலே காயமாங் கடநினைவாற் கடம தாகு
மேயசுபா வத்திந்த வடிவுபுரி யட்டகமா மென்பர் வீரா [லோடி
தூயவறி ஞன்செய்வோன் புசிப்பவன்சான் றென்றன்முதற் றுரிசி
மேயபெயர் சீவனு மறிவுபுரி யட்டகமாய் விளம்பு மன்றே. 3

கடியபுரி யட்டகத்தின் வசத்தாலே கனவின்மேற் கனவு பற்றி
நெடியபல பொய்காணு நெறிபோல விச்சகமு நிகழு மன்றே
படியளந்தோ னருளுவதோர் நெறிகேளா யந்நெறியைப் பார்த்தன்
யடிமுடிவில் பதச்சீவந் முத்தனுய்ச் சுகசீவி யாகு மன்றே. [பற்றி

வெருவாம லருச்சுநனுட் கழிப்பதுபோ னுட்கழிப்பாய் வீர வென்னப், பெருமானே யருச்சுநனெப் போதுதிப்ப னவனுக்குப் பின்னை காந்த, னருளாலெவ் வாறுபதே சிப்பதெனக் கேட்டருளு மண்ண லுக்குத், திருமால்வந் தருச்சுநற்கு மேலுணர்த்து நெறி வசிட்டன் செப்ப லுற்றான். 5

உகநாலு முடிவுதொறு முயிரனைத்துஞ் செற்றவினை யுன்னிக் கூற்றுத், தகவான தவஞ்செய்யு மொருகாலெட் டாண்டுதச வருட மோர்கால், மிகுமீரா றண்டொருகா லையாண்டோர் காலோர்கான் மீண்டே ழாண்டு, துகடீரும் பதினாறாண் டொருகாலிப் படிப் பலகாற் றுணிந்து நோற்கும். 6

இப்படியே யமன்றவம்பூண் டோருயிருங் கொல்லாம லிருந்த போது
மொய்ப்புறுபல் லுயிராலும் பெயர்விடமற் றறநெருங்கு மூரி ஞால
மப்படியி னலந்த விசித்திரமாம் பலபூத மநேக மான
துப்புறுமு கங்களாற் பூபாரந் தொலைவிக்குந் தொன்று தொட்டே.

இவ்வகையே நாலுகமும் பல்லுயிரு முலகமுத லிறந்து போன
வவ்வகையோ ரெண்ணில்லை யாதித்தன் றந்தநம னந்த வணணங்
கைவளர்பல் லுயிர்கொன்று கரந்தநா ளுறுபாவங் கட்ட ழிப்பா
னெவ்வமறு தவம்பூண்டு பன்னீராண் டேகாந்தத் திருந்த வெல்லை.

அதனாலே சாவில்லாப் பல்லுயிரா லறநெருங்கு மதிபா ரத்தை
யெதனாலே தீர்வமெனத் திருமாலைச் சாருக வெய்தும் பூமி
மதுகுத னிருவடிவா யவநியிலே யவதரிக்கும் வசுதே வற்குச்
சுதனாகும் வடிவொன்று பாண்டுவுக்குச் சுதனான சொரூப மொன்றே.

வாசுதே வப்பெயரு மருச்சுநனு மழும்படைத்து வருமப் போதில்
வீசுதார் திரிதராட் டிரன்மைந்தர் கிளைஞரொடும் விசயன் மேலே
யேசுபோர் செய்யவருந் தன்கிளைஞர் மரணத்துக் கிரங்கிப் பார்த்த
ஞசுசரா சநம்வளையா னதுபொருட்டா லுபதேச மருளு மாயோன்.

விசயனெனும் பெயருடற்கு விண்டுவெனு ஞாநவுடல் விளம்பு
முண்மை, யிசைவுறக்கே ளநந்தமாய்த் தெரிவரிதா யடிமுடிவற்
றிருக்கு முன்னே, யசைவறப்பா ரருச்சுநா வறிவுருவங் குற்றங்க
ளின்றி நிற்குந், தசையுடலி லொருக்காலும் பிறப்புறு யிறப்புறுய்ச்
சத்தாய் நின்றுய். 11

பிறப்பில்லை யிறப்பில்லை யிவனென்ன வடிவில்லைப் பின்புண் டாகா
வறப்பழைதாய் நித்தமா யழிகின்ற சரீரத்தி லழியாச் சற்று [வா
முறப்புரியுந் தொழில்களைநீ யோயாது சங்கத்தை யொருக்கிச் செய்
யிறப்பில்பிர மார்ப்பணவா சாரமுறிற் பிரமமா யிமைப்பி னிற்பாய்.

ஈசனிடத் தெப்பொருளுஞ் சமர்ப்பித்து மிகுமீசன் வடிவ மெய்திப்
பாசமுறு முயிர்க்கெல்லா மீசனுய்ச் சங்கற்பப் பற்று மாய்த்து
நீசமனுய்ச் சாந்தமநத் தினனுகி முநியாய்ச்சந் நியாசி யாகி
யேசறுயோ கியுஞாந வானுமாய் முத்தியினை யெய்து கென்ன. 13

சங்கமறுத் திடல்பிரமார்ப் பணமீசு ரார்ப்பணமே சந்நி யாசம்
பங்கமறு ஞாநமே யோகமே யெனுமிவற்றின் பகிர்ச்சி யாதோ
செங்கண்முகி லேயென்ற விசயனுக்கு மாலருள்வான் செறிசங் கற்ப
மங்குறவா தனைகெடவோர் நினைவுமிலா விடம்பரம வத்து வென்பர்.

ஏகமெனும் பிரமத்துக் குறுமுத்தி யோகமே யிலங்கு ஞாந [ரேர்த
மியோகமுமாங் கதுவென்ப ருலகமுநா னும்பிரமத் திருவென்
லாகுபிர மார்ப்பணமாங் கருமபலம் விடல்சந்நி யாச மாகுஞ்
சோகமுறு சங்கற்ப மறுத்தலே சங்கத்தைத் துடைத்த தென்பர்.

எண்ணமனைத் தினுமீச னொருவனே யென்றிருமை யெண்ணந் தீர்தல், புண்ணியவீ சுரார்பணமா மெனைநாடி யெனக்கன்பாய்ப் பூசித் தென்னை, நண்ணியெனைத் தொழுதென்னைத் துதித்தாயே ஞனெனுநின் சொரூபச் சோதி, யுண்ணிறையும் பரமஞ்சா மாகிய மென் றிரண்டுவடி வுண்டெ னக்கே. 16

சங்காழி பயில்கரத்தை முதலான வங்கஞ்சா மாகி யந்தான்
மங்காம வடிமுடிவற் றொன்றுய வடிவுபா வடிவ மாகு
மிங்கான பிரமமெனப் பரமமென விசைப்பதெலா மிந்த ரூபஞ்
சிங்காம லிதுதனைநீ தெளிவளவு நாலுபுயத் தேவை யேத்து. 17

அக்கடவுட் பூசையினு லறிவுநிறைந் ததனுலப் பதமுஞ் சேர்வை
மிக்கபரமாகியவென் னுருவமுறிற்பிறவிநோய்மீண்டுசோராப் [யாய்த்
பக்கவபி மானம்போய் மோகம்போய்ச் சங்கம்போய்ப் பரமே மெய்
துக்கசுக தொந்தம்போ யாசைபோ யறிவுற்ரோர் தொடர்வ ராங்கே.

காமமுறு சங்கற்ப மின்றியா ரம்பமெலாங் கலந்து நிற்போர், தாமமுறு ஞானத்தீ யாற்கருமங் களைச்சுட்ட சான்ரோ ரென்பர், சேமமுமேல் வரும்பொருளுஞ் சிந்தையறத் தொந்தமறச் சித்தா முண்மை, தோமறப்பெற் றெப்போதுந் தோற்றுதொழில் வழிநிற் பாய் துளக்க மின்றி. 19

வீசியவூ ழிக்காற்று மேலிடினும் விந்தமலை வெடித்த போதுந், தேசிகனுற் கற்பித்த செந்நெறியை மதிமான்க டிறம்பல் செய்யார், மாசறு மெய்ஞ் ஞானமிலா மடமையால் வாதனைமெய் வடிவாய் நிற்குங், காசறுமெய்ஞ் ஞானமெனும் பெருங்கடல்கோத் தாலதனுட் கரைந்து போமே. 20

என்றருளித் திருநெடுமா லிமைப்போது மோனம்போ லிருந்த லோடும், வென்றிமிகு விசயன்மகிழ்ந் துரைசெய்யும் வகைகேளாய்

மெய்ம்மை வீரா, கன்றுதுய ரனைத்தும்போ யெனதுமதி பரம்
பொருளைக் கலந்த தையா, துன்றிரவி காணவிரி கமலம்போ லென
விசயன் சொல்லு மன்றே. 21

6—5. அருச்சுநன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் —1515.

---

## 6—6. (ஸ்வப்ந)சத வுருத்திரர் கதை.

மீட்டுமோர் கதைகே ளென்று வீரற்கு வசிட்டன் சொல்வா
னூட்டுளோர் சந்நி யாசி ஞாநவான் சமாதி யுள்ளோ
னீட்டுறு சமாதி யாலே நிமலா நெஞ்சி னென்றை
யீட்டுற நினையி னப்போ தெய்திநீ ரலையா மாபோல். 1

ஒருபகற் சமாதி நீங்கி யிருந்தன னுயர்சந் நியாசி
கருதிடு மவர்க்குப் பற்றிப் பாச்சரன் காணு மென்று
சுருதியுண் டுலகோர் செய்யுந் தொழிலையாம் விநோத மாக
விருதயத் துன்னு வோமென் றெண்ணிய திவன்ற னெஞ்சம். 2

மற்றொரு புருட னுனை னசைவுமாத் திரத்தான் மீளப்
பற்றியும் பண்டை யோனைத் தானெனப் பாவிக் கைக்குப்
பெற்றிலன் காக தாலீ யப்படி பெற்ற வாஞ்சை
யுற்றனன் சீவ டன்பே ரொருவனென் றுணர்ந்தான் றன்னை. 3

சித்தம்வே றொருவ னென சீவட னிவ்வா றாகி
யுற்றவிக் கநவிற் செய்த நகரிலோர் தெருவின் மேவி
மெத்தநா ளிருந்தா னங்கே விநோதபா நத்தை யுண்டு
மத்தனாய் மதுவை யுண்ட மதுபம்போ லுறக்க முற்றான். 4

கநமுறு கநவில் வேறோர் கலைமறை யவனாக் கண்டான்
மநனிலே பற்றிப் பாச்சன் மாத்திர மதனான் மற்றோர்
சநபத மடைதல் போலாய்ச் சரித்தனன் சின்னா ளாங்கே
திநமிகு வியாபா ரத்தாற் றேகமோர் துறக்க முற்றான். 5

பாதபம் விதையா னாப்போற் பள்ளிகொண் மறையோன் றன்பாற்
போதுறு கநவிற் றன்னைப் பொருவில்வந் நியனாக் கண்டான்
மேதகு முணவாற் றுஞ்சி மேவிய கநவிற் றன்பாற்
பூதலத் தரச னாக வவன்றனைப் பொலியக் கண்டான். 6

அரசனோ ரிரவு துஞ்சி யடைந்தவோர் கநவிற் றன்னைச்
சுரமக ளாகக் கண்டான் சுரமகள் சுரதப் போரிற்
பரவச மாகத் துஞ்சப் பயில்வுறு கநவிற் றன்பாற்
குரமட.. மானாக் கண்டாள் கூறுமான் றுயின்ற தோர்கால். 7

துஞ்சமான் பரிச யத்தாற் சூழ்ந்ததோர் கொடியாத் தன்பாற்
செஞ்செவே கநவிற் கண்ட தண்ணலே திரியக் கேனா
நெஞ்சுறக் கண்ட கேட்ட மறப்பில நிகழ்க நாவிற்
சஞ்சரித் திடவே காணா மாதலாற் சாற்றக் கேளாய். 8

பூவுமென் றளிருங் காயும் பொலிந்தவக் கொடிதன் காட்டிற்
றேவதை யான வந்தத் தேவிவாழ் வநமாய்த் தோன்ற
மேவுவித் தெனும வற்றி லங்குர மேனி யொப்பாய்த்
தாவுறு ஞேய முற்ற தன்னுடை யறிவி னாலே. 9

தன்னுடை வணர்ந்தா ரத்தே சார்ந்ததாய்த் தன்னுட் கண்டு
முன்னிய சுழுத்தி யுற்ற வறிவினான் மூடத் தன்மை
துன்னுற வநுப வித்துச் சுரும்பெனத் தன்னைக் கண்ட
தன்னவண் டோடைக் கஞ்ச வலயங்கிண் டதனுள் ளான. 10

சடமதி யுயிர்க்கு முள்ளஞ் சார்ந்திடும் விளையாட் டோர்பான்
மடல்வந சத்து ளாங்கே வண்டுறை தடத்து வந்தோர்

கடகரி குழப்பி வீசக் கஞ்சமுங் கயமுன் வண்டுந்
தொடர்பொடி யான வந்தத் தும்பியைத் தும்பி நோக்கி. 11

அக்கரி யாகத் தன்னைக் கண்டது குளப்பள் ளத்திற்
கைக்கரி வீழ்ந்த தந்தக் கரியையோர் வேந்தன் பாகன்
சிக்கெனக் கொடுபோ யாங்கோர் செருவிலே சிதையச் செய்தான்
பக்கவண் டிணக்கத் தாற்கைப் பகடுமீண் டளியாய்த் தன்றே. 12

கடுத்ததோர் களிறுன் மீளக் கயத்தொடவ் வண்டு தாளா
யடுத்தகூ லத்தி லன்ன வறிவினு லன்ன மான
துடுத்தநீ ருலகி லன்ன முலப்பிலா யோநி யெய்தித்
தடுத்தநீர்க் கயக்கஞ் சத்தோர் சாரச மான தன்றே. 13

அக்குரு கொருகால் விண்போ யரன்புரத் தானைக் கண்டு
மிக்கசங் கரனு னென்றே மெய்ம்மையாய் நினைத்த லோடு
நக்கன துருவ மாகி நயந்தவா வீச னுட்டிற்
றொக்கபல் கணங்க ளோடுஞ் சுக்கமெய்ஞ் ஞாநத் தோடும். 14

ஈசனு யியங்கு வான்முன் னியன்றன சரிதை யெல்லா
மாசறு புந்தி யாலே மதித்தனன் மறைப்பி லாத
தேசுவிஞ் ஞாந மேனிச் சிவன்றனி யிருந்து செப்பும்
வீசிய கநவு நூற்றின் வியப்பெலாம் விளங்க நோக்கி 15

சித்திர மம்ம விந்தச் சகத்தைமோ கஞ்செய் மாயை
மித்தையா யிருந்துங் கெட்டேன் மெய்ம்மையாங் காநல் போல
வித்திற மயக்க மாக விப்பெரு மாயைக் காட்டி
லொத்தபல் விடத்திற் புக்கே யுழன்றன னெல்லை யின்றி. 16

என்னுள மாத்தி ரத்தி லெழுந்தகற் பனையி னுலே
முன்னொரு சிருட்டிக் கோநான் மொழிந்தசீ வடப்பே ரானேன்
பின்னொரு சிருட்டி தன்னிற் பெருங்கலை மறையோ னுனேன்
மன்னவ னுனேன் பின்பு வந்ததோர் சிருட்டி தன்னில். 17

இத்திற நூறு யோசி யெய்தியீங் கீச ஞனேன்
மெத்திய வாண்டு கங்கள் விருத்திக ளநேகஞ் சென்ற
வத்தனே பிறப்பும் போய்நா மறிகுவோ மறிந்து நன்று
யொத்தவா றாக்கி யெல்லா மொருவழிப் படுத்து கிற்போம். 18

என்றுணர்ந் தீசன் முன்னே யிருந்தசந் நியாசி தன்பாற்
சென்றவன் றனேயெ ழுப்பிச் சேதநத் தொடுநெஞ் சோடு
மொன்றுறச் செய்த லோடு முணர்ந்தசந் நியாசி தானு
நின்றதன் மயக்க மெல்லா நினேவுற நோக்கி ஞனே. 19

சீவட ஞதி யாந்தன் வடிவத்தைச் சிவன்சிந் தித்துத்
தாவில்சிற் ககநத் தோர்பாற் சாந்துசீ வடன்வாழ் தேசங்
கேவலர் தானுஞ் சந்நி யாசியுங் கிட்டி யன்ஞன்
மேவுற மநத்தி ஞேடு மறிவொடு மேவு வித்தான். 20

மூவரு மறிவு பெற்ருேர் முதுபழக் கத்தி ஞலே
மாவியப் புற்றுஞ் சற்றும் வியப்பிலார் வடிவ மொன்றே
மேவுமூ வடிவ மாஞேர் மிகுமுருத் திரனு மற்றச்
சீவடன் றனுஞ் சந்நி யாசியுஞ் சேர்ந்து சென்று. 21

வேதியன் முதலா யுள்ளோர் பிறப்பிட மெல்லா மேவித்
தீதறக் கூட்டித் தெய்வ ஞானத்தாற் றேசு மிக்க
சோதிருத் திரர்க ளாகி யறிவுற்ருர் சொன்ன வீசன்
போதிரென் றேவத் தத்த மிடங்களிற் போயி ஞரே. 22

சீவடன் மறையோ ஞதி யாவருஞ் சென்று தத்தம்
பாவைய ரோடும் வாழ்ந்து பாலுற வுடல்போ நாளின்
மேவுருத் திரனேச் சேர்ந்தா ரென்றலும் வீரன் கேளா
வாவிது புதுமை யென்ன வதன்றிறம் வினவ லுற்ருன். 23

அங்குச்சீ வடனே யாதி யானவர் சந்நி யாசி
சங்கற்பத் துருவ மாஞேர் சத்திய மான தெங்ஙன்

பொங்குற்ற சங்கற் பத்தின் பொருளெலாம் பொய்யே யன்றோ
விங்கிதை விளக்கா யென்ற விராமற்கு வசிட்டன் சொல்வான். 24

எதுவுமுண் டறிவி னுள்ளே யெப்படி யெத்தைக் கண்ட
ததனையப் படிச்சித் தெய்து மனைத்துமா தலினல் மெய்யே
யெதுகந விற்காண் கின்ற தெதுசங்கற் பத்திற் சேர்ந்த
ததுவங்கே யுண்டெப் போது மப்படி வடிவ மாகும். 25

வேறு.

சங்கற் பத்திற் கனவுதனிற் சார்ந்த பொருளெப் படிசேர்ந்த
தங்கப் பொருடான் பரமத்தி னழுந்தும் பழக்க மியோகமெனுந்
துங்கத் திறத்தல் லதுமெய்யாத் தோன்று தியோக விஞ்ஞாந
மிங்குப் பெறலாற் சிவன்முதலோ ரெங்கு மெல்லாங் காண்கின்றார்.

இட்ட மான பொருளெல்லா மேக நிட்டர்க் கெளிதெய்துந்
திட்ட மாந்தென் றிசைநோக்கிச் செல்வார் வடக்கெப் படிசேர்வார்
தொட்ட சங்கற் பத்தருத்தஞ் சூழ்வா ரதுவே துன்னுவரான்
முட்டி றமது பயன்வசத்தோர் முன்சேர் பொருளை முன்னுரே.

முன்னு பொருளிற் சங்கற்ப முட்டி விரும்பு மொய்ப்புந்தி
யன்ன பொழுதே கத்துவத்தி லழுந்தா மையின லவ்விரண்டு
மின்ன புந்தி நசிப்பிக்கு மினிநான் விச்சா தரனகு
மன்னு கின்ற நானிங்கு மறையோ னமென் றுறநோக்க. 28

இதுவே யேகத் துவமதனி லெய்து பேற்றின் றிட்டாந்த
மதுகா ரியசித் தியின்பொருட்டா மாத லாலே கப்பொருளின்
றிதநிட் டையினற் சந்யாசி சீவன் சிவனுஞ் சிவவடிவா
லுதவு கின்ற சங்கற்பத் துற்ற பொருட்குண் மையைமேவும். 29

தெளிசந் நியாசி சங்கற்பத் தவாஞ் சீவ டன்முதலோர்
களிகொ டத்தம் வேற்றுவகை கண்டா ரீச னுருவத்தால்

விளிவில் சங்கற் பத்துண்மை மேவி னூர்தஞ் சங்கற்பத்
தெளிது சேரு நகாடைந்தா ரீசன் விஞ்ஞா நத்தாலே. 30

6—6. (ஸ்வப்ந) சத வுருத்திரர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1545.

---

## 6—7. வேதாள கதை.

சுழுத்தி மௌநத் தினனுகித் தொடரு மநத்தி னெழுச்சியற
வழுத்து மலக்கற் பனைநீக்கி யகண்ட பதத்தி லிருவெனலும்
வழுத்து கரண மௌநஞ்சொன் மௌநங் காட்ட மௌநமெனச்
செழித்த மூன்றுந் தெளிந்திடமேற் சுழுத்தி மௌநஞ் செப்பென்ன

ஓவின் முநிவ ரிருவகையா மொருவன் காட்டத் தவனுகுஞ்
சேவந் முத்தன் மற்றவனுஞ் செய்யுங் கிரியை தனிலழுத்த
மேவு நினைவுற் றிந்தியத்தை மிக்க வலியால் வென்றவனைக்
காவன் மன்னர் புகழ்வீரா காட்டத் தவனு முநியென்பர். 2

சகநே ருள்ள படியுணர்ந்து தன்பாற் றன்னை நினைத்துலகை
நிகரா கியுமுள் ளமைவுற்றோ னிமல முத்த னுமிந்த
மிகுநீள் சாந்த முநிவரன்பான் மிக்க மநத்தின் மெய்யுருவந்
தகுநீ டுருவாம் பாவனையே சாற்று மௌநச் சொற்பொருளே. 3

வாக்கு மௌநஞ் சொற்றடையாம் வலிந்திந் திரிய மடக்குவித்த
லக்கு கரண மௌநமதாந் தனது சேட்டை யெலாம்விடுதல்
வீக்குங் காட்ட மௌநமதாம் விளங்கு சித்த வியாபார
நீக்க மில்லா மூவகையாய் நிகழ்த்து மௌந மிவையாகும். 4

வன்பி வியற்று மிம்மூன்று மௌநங் காட்டத் தவர்க்கியல்பா
முன்பி னின்றிப் பிறிவின்றி மொய்த்த துயரற் றிருக்கின்ற

வின்ப வதுபூ தியர்க்கெனினு மிலாதார்க் கெனினு மிதுதானே
துன்ப மொன்று மணுகாத சுழுத்தி மௌந மெனச்சொல்வர் 5

பன்மை மோகத் திவ்வுலகைப் பற்றி யுள்ள படியுணர்ந்து
தன்மை நிலையா யையமற ருனே சுழுத்தி மௌநமதாஞ்
சின்ம யனேக வறிவுருவாஞ் சிவமே யிவையா வையுமென்னுந்
தொன்மை முடிவி னிலைதானே சுழுத்தி மௌந மெனச்சொல்வர்.

நின்ற விண்ணுண் டல்லவுமா நிகழு மனைத்து முளதிலதா
மென்று சமமுஞ் சாந்தமுமா யிருத்தல் சுழுத்தி மௌநமதா
மொன்று சுழுத்தி மௌநந்தா னுபய விதமா மியோகியர்க்குத்
துன்று கின்ற சாங்கியமுந் தூய தான யோகமுமே. 7

தெளிவா ஞாந வுணர்வாலே திநமு மேக சமாதியினு
லளவாஞ் சங்கை யாலறிந்த வவர்சாங் கியயோ கியராகு
முளதாம் பிராணன் முதல்வாயு வுபசாந் தியினூ கத்தாலே
யெளிதா முடிவி லுயர்பதத்தை யியைந்தோ ரியோக யோகியரே.

பண்ணப் படாத வுபசாந்த பதமே யெவர்க்கும் பற்ருகு
மெண்ணத் தகுசாங் கியரெய்து மிடமே யிடமா மியோகியர்க்குங்
கண்ணத் தகுவா தனைவலைசூழ் கடிய பிராணன் மநமிரண்டு
நண்ணப் படுசெய் தொழிநீர நசிக்கி லதுவே பரமபதம். 9

வினவி நோக்கா மையிற்சித்த மெய்போற் ருேன்றும் பொய்யேயாங்
கநவிற் றனது மரணந்தான் காணு நின்று முளதாமோ
வநக வேகப் பொருட்பழக்கத் தழுத்தம் பிராண னுள்ளடக்கன்
மநனை யடக்க விவைமுத்தி வசநப் பொருளாஞ் சுருக்கத்தில். 10

உரமா மொருமைப் பொருட்பழக்க முயிரி னெடுக்க முளத்தொடுக்
தாமா மொன்று பலிக்குமெனிற் றம்மிற் ருேமூன் றும்பலமாம் [கந்
பரமா முயிர்நெஞ் சிலதாகிற் பயிலா தெவர்க்கும் பாவனைக
டிரமா மிவையொன் ருமலரு மணமுந் திலமுந் தைலமும்போல். 11

ஆதா ராதே யம்போலா மதிலொன் றிறக்கி லயலதும்போ
மோதா நின்ற விவைமாயி லுயர்ந்த வீடு முதவிடுமான்
மீதா கியதன் பரிசயத்தால் வெளியாய் நினைவு போமளவு
மேதா கிலுமோர் தத்துவத்தி லிறுக வேண்டும் பாவனையே. 12

நெடுநாட் பழகுஞ் சுபாவத்தா னெஞ்சி னொருமை யொன்றுண்டா
முடனே மிகுமித் திரளெல்லா மொருங்கிப் போகும் பிறப்பிறப்பி
னிடமார் கனவு போய்விழித்த விகல்வே தாள மிசைத்தவினைத்
தடமார் புயனே கேட்டியெனத் தவமார் வசிட்டன் சாற்றிடுவான்.

விந்த வநத்தோர் வேதாளம் வேறோர் நாட்டில் வெம்பசியால்
வந்து புகுந்தோர் நல்லோன்பால் வாம்பில் பலியேற் றுண்மகிழு
முந்து பசித்தீ முடுகிடினு முன்வந் தோர்க்கு நிபமின்றி
நிந்தை யின்றிக் கொலைபுரியா நெடியோர் நெறியை நீங்குவரோ.

கானின் றந்த வேதாளங் கடுந்தீப் பசியா னீதியினு
லான வூகத் தாற்சநத்தை யசந மாக்க நகரெய்தித்
தான நிருப னிரவுதிரி சமயத் தவனைத் தான்கண்டு
வானி லிடிபோல் வேதாள மன்னற் குரைத்த படிகேளாய். 15

மன்னு வென்கைப் பட்டனையால் வானே றனைய வென்னுலே
யுன்னு ருயிரிற் றனையினியென் னுணவா குதியென் றுரைத்தலுமே
நின்னு னெறியா லன்றியெனை நெருங்கிற் றலைநீ றெழுமென்னச்
சொன்னுன் மன்னன் வேதாளஞ் சொன்ன மன்னற் கெதிர்சொல்
[லும். 16

நீதி யின்றி யுனையடரே னெறியே யுரைக்கே னிருபாநீ
தீதி லிரவா ளருக்கெல்லாஞ் சிறுமை தீர்க்குத் திறத்தனையா
லாத லாலென் குறைதீர்ப்பா யையப் பாடாங் குறைகேட்டு
நாத னேநின் சொற்கொடையா னன்று நிறைப்பா யெனவுரைக்கும்.

எந்த வெய்யோன் கிரணங்கட் கிந்தப் பிரமாண் டங்களெலாஞ்
சிந்துஞ் சிறிய வணுத்திரளாய்த் திகழு மெந்த மாருதத்தி
லந்த மில்லாக் ககநமெனு மணுக்கள் விளங்கு மளவின்றி
வந்த கநாமேற் கநவுற்று மாறுத் தெளிவா மொளிவடிவென். 18

அரம்பைத் தண்டு ளூட்போயு மந்தத் தண்டே யாவதுபோல்
வரம்பி லுள்ளுள் ளேயெனினு மற்றொன் றுகா வணுவேது
நிரம்பு மண்டம் விண்ணுயிர்க ணிகழுங் கதிர்பொற் கிரியனைத்தும்
பரம்பு பரமா ணுக்களெனப் பயின்று நீங்கா வணுவேது 19

அங்க மொன்று மறப்பரம வணுவா மெந்த மாகிரிக்குத்
தங்கு கற்போற் செறிந்தொன்றுஞ் சகங்கண் மச்சை யாமென்று
துங்க வேதா ளஞ்சொன்ன சொற்கு நகைத்துச் சுடர்மௌலி
யங்க ணரசன் சொன்னவெலா மடைவே சேட்டி யிராகவனே. 20

உதித்த விந்தச் சிற்பாநு ளுலகா மிவையெல் லாம்விளங்கு
மதித்த விமல விஞ்ஞாந வடிவாம் பரம வாதித்தன் [ந்
கதித்த வொளியா மிவ்வெய்யோன் கதிர்க்கிவ் வுலகெல் லாமணுவா
துதித்த விந்த மார்த்தாண்டன் சுடராற் றோன்றி விளங்கிடுமால்.

கால முண்மை விசும்புண்மை கண்ணு யசையு மறிவுண்மை
சால விமல வறிவுண்மை தன்னை முதலா முண்மையெலாஞ்
சீலப் பரமப் பெருங்காற்றிற் சிறுதூ ளாகித் திகழ்ந்திடுமாற்
கோல மலரின் மணம்போற்றுங் கொண்ட சொரூப சுபாவத்தால்.

உலக நாமப் பெருங்கநவி லொன்றின் மேலொன் றுக்கநவு
பலபற் றியுந்தன் வடிவைவிடாப் பயில்சாந் தத்தால் விரிபிரம
மிலகுங் கதலி யுள்ளுள்ளே யிலையே யாகு மியல்பென்ன
வலகி லாத வுள்ளுள்ளே யான போது மப்பிரமம். 23

சூக்க மாயெட் டாமையினற் சொன்ன பரமே பரமாணு
நீக்கு மெல்லை யிலாமையினு னெடிய மேரு முதலனைத்தின்

ருக்கு மூல மிதுவாகுந் தடமே ருவையா திகளிதற்கு
நோக்கும் பரமா ணுவைப்போல நுடங்கி விளங்கு நோக்கிடினே.

எட்டா மையினுற் பரவணுவா மிவனே நிறைவாற் பெரியகிரி
தட்டா வவய வங்களெலாந் தரித்து மவையில் லாப்புருடன்
முட்டா விஞ்ஞா நத்துருவாய் முழுது பொருட்கு மிடமாகு
மெட்டா விதற்கு விஞ்ஞாந சார மச்சை யிவையனைத்தும். 25

இயல்விஞ் ஞாந மாத்திரத்தி னிடையே யுலக மிருக்குமென
வுயர்மன் னவனே தலுங்கேளா வுளத்தே தன்னை யுணர்வுற்று
மயலில் விசாரத் தாற்சாந்த மநவே தாளந் தனியிடம்போய்த்
துயர்கொள் பசியை மறந்தசையாத் தூய தியாநத் திருந்ததுவே.

**6—7.** வேதாள கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1571.

## 6—8. பகீரதன் கதை.



அசைவி லாவுட் போதத்தா லனைத்தினு முளத்தை வாங்கி
யிசைவசெய் திச்சை யின்றி யிளைப்பறப் புந்தி யாறி
விசையிலா நெஞ்சா னெஞ்சை விண்ணென விமல மாக்கி
யசைவறு மௌநி யேகன் சாந்தமே வடிவ மாகி. 1

சமனுமா யிதயம் விண்போற் சாலவுந் தெளிந்து நிற்பாய்
நிமலமாம் புந்தி திண்மை நிறைவுற்று மூட மின்றி
யமரவந் தனபின் செல்லு மாசனும் பகீர தன்போற்
குமரனே யரிய தேனுங் குறைவறப் பெறலா மென்றான். 2

என்றலு மவனை நோக்கி யெம்மந வல்ல பத்தா
லன்றுகங் கையைக்கொ ணர்ந்தான் பகீரத னையா வென்று

நன்றுணர் வள்ளல் கேட்ப நான்மறை வசிட்டன் சொல்வா
னென்றுணர் பகீர தப்பே ரொருவனுண் டுலகின் வேந்தன். 3

மாநில முழுதுங் காப்போன் மணியினும் வண்மை மிக்கோன்
சாநவி படியொ ழுங்காற் சாம்பராய்ப் பாத லத்திற்
போனதன் கிளையை யெல்லாம் பூமக னுலகி லேற்றித்
தீநர கொழிய வைத்தோன் றிங்கள்வெண் கவிகை மன்னன். 4

அன்னவன் காளை யான பருவத்தி லவநி தன்னி
னின்னல்கூர் நடையா மித்தை நோக்கலுந் தனதெண் ணத்தி
லுன்னிய வற்ப மான விசாரத்தா லுதித்த தந்தோ
மன்னிளம் பக்கு வத்தின் மநநத்தின் மாசி றேற்றம். 5

விதியினாற் காநன் மேட்டிற் கொடியென விசாரந் தோன்ற
வுதவுமே காந்த மெய்தி யொன்றொடொன் றெவ்வாக் கூட்டத்
ததிசய வுலகின் றன்மை யிதனைப்பார்த் தகத்திற் றேர்வான்
புதிதிலை யொன்று மென்றும் போனதே புகுது மீட்டும். 6

போகிய பகலே மீளப் போகிய விரவே மீள
வேகிய கொடையே மீள வேகிய விரப்பே மீள
வாகிய வுணவே மீள வாகிய தொழிலே மீள
மோகியர் மீள மீள முயலுவா ரொன்றி னுணர். 7

சுவையற வுணங்கு மந்தக் கருமமே சூழா நிற்பர்
நவையற வெத்தைச் சேர்ந்தா னண்ணுறு தில்லை யென்ன
வெவையும்வந் தணுகு மத்தை யியற்றலே யியல்பாஞ் செய்கை
கவையுறு மற்ற வெல்லாக் கருமமும் விடுசெ யாகும். 8

பலபடச் செய்த செய்வார் பாமா ரறிஞர் செய்யா
ருலகிய விதுவென் றுள்ளம் வெருவின னொருகாற் சென்று
நலனுறு திரித லப்பேர் நற்குரு சரணந் தாழ்ந்து
சலனுறு பிறவிக் கஞ்சித் தனித்திவை கழற லுற்றான். 9

பகீரத னுரைப்பா னையா பயில்சரை மரண மோக
மகிலமா மச்சஞ் செய்யு மருந்துயர்க் கவதி யேது
திகழ்வுற வருள்வா யென்னத் திரிதல னுரைப்பான் மன்ன
நிகழ்வுறு நேயந் தன்னை நிறைவடி வாக நோக்கில். 10

அன்றுபோந் துன்ப மெல்லா மகப்பந்த மனைத்து மாயு
மொன்றலா வையம் போகு முறுகரு மங்கண் மாயு
நன்றதா நேயந் தானு ஞானமே வடிவ மாகி
நின்றதற் சொருப மாகு நிகழ்த்திட விதனைக் கேளாய். 11

எங்கணு முளது நித்த மெழுதலத் தமித்த வில்லை
யங்கண்மெய் யறிவு சாந்த மமலமச் சுதங்கு ணங்க
டங்குத லில்லை யீதொன் றுளதெனச் சாற்ற லோடும்
பங்கமின் முநியை நோக்கிப் பகீரத னுரைக்க லுற்றான். 12

ஒழிந்துள வுடல மாதி யொன்றையுங் காணே னாகி
யிழிந்துள தொழில்க ளெல்லாந் திரமின்றி யேக நின்றேன்
மொழிந்துள வறிவே யாகி முட்டற விருப்ப தெங்ஙன்
பொழிந்துள கருணை யையா புகலெனப் புகல லுற்றான். 13

திரிதல னுரைப்பான் மன்ன சித்தந்தா னிதய விண்ணில்
விரியுஞா னத்தா னேய நிட்டையை மேவும் பின்னர்
பெரியதா மனைத்து மேனிப் பெருந்தகை யாய சீவன்
பரிபவ மாய சன்மம் பயில்வுறு துலகின் மீட்டே. 14

இல்லவ ளில்ல மாதிப் பற்றற விட்டா நிட்டம்
புல்லிடிற் சமசிற் பாவம் பொருந்துத றனக்குப் பேத
மல்லவா யதன்றன் பாவ நிரந்தர மாத லென்று
மல்லலே காந்தஞ் சேர்தன் மானிடத் திரளை நீத்தல். 15

ஆற்றும தத்து வத்தி னகல்கிலா ஞான நிட்டை
யூற்றமா முண்மை ஞானத் துறுபொருட் காட்சி யிந்தத்

தோற்றமாங் குறிகள் சேர்தன் ஞானமாய்ச் செல்வர் சொல்வர்
வேற்றுள வழிகண் முற்றும் விதநவஞ் ஞாநந் தானே. 16

ஏதம தாக நானென் றெண்ணுத விறந்த போது
காதலு முனிவுந் தீர்க்குங் களைகளுய்ப் பிறவி நோய்க்கு
மேதகு மருந்தா ஞாநம் வெளிப்படு மென்று சொன்ன
சேதந முநிவ னுன திரிதலற் கரசன் செப்பும். 17

மலைமிசை மரம்போ னீளுள் வன்புற விந்த மெய்யி
னிலைபெற நானென் றெண்ண நீக்குவ தெங்ங னென்னத்
தலைமைசேர் குரவன் சொல்வான் றன்மந வருத்தத் தாலே
தொலைவறு போகத் தெண்ணந் துவக்கறத் துடைத்து நீக்கி. 18

விரிவுறு முண்மை மேவில் வினையகங் கார மாளும்
புரிவற விவற்றை யெல்லாம் புந்தியாற் றீர நீக்கித்
துரிசலை வின்றி நின்ற யென்னினு னென்னுந் தோற்றந்
தெரிகிலா ததுவே நீயாந் தெளிந்ததற் பாமு மஃதே. 19

அனைத்துள விசேட நீங்கி யச்சமற் றேட ணைக்குட்
டினைத்துணைப் பற்றற் றின்மை சிக்கெனச் சேர்ந்து செல்வம்
வினைப்பகைக் கீந்து நானென் பதுவிட்டு மேனிச் செய்கை
தனைத்துறந் தவர்பா லையந் தனையிரந் தெனையும் விட்டு. 20

நிற்பா மாயிவ் வாறு நிற்கின்மே லுக்கு மேலாந்
தற்பர நீயே யாதி யென்றவன் சாற்றக் கேட்டு
வெற்படர் தோளா னெஞ்சிற் செய்வதாந் தன்மை மேவிப்
பற்பல தன்செய் கைக்கே பகீரத னிற்ப தானுன். 21

சிறிதுநாட் கழிந்த பின்னர் சிறந்ததோர் வேள்வி செய்து
நெறிவளர் செல்வ முற்று நீசமு முயர்வு நாடா
வறியரா மறையோர் தெய்வங் கிளைமுதல் வந்தோர்க் கீந்து
பிறிவறு துகிலொன் றன்றிப் பிறிதிலன் மூன்று நாளில். 22

யாவரு மிரங்க யாது மின்மையாந் தனது நாட்டை
மேவரும் பகைவற் கீந்து வேறறு துகிலொன் ருனோன்
ருவரு முநியாய் ஞாந முநிக்குணஞ் சார்ந்து தன்ன
தோவறு நாடு நீங்கி யொருவனு யுலாவ லுற்ருன். 23

முகத்தினுற் பெயராற் கண்டோ ரறிகிலா மூதூர் தோறு
நகத்துயர் வநங்க டோறு நண்ணினன் றீர னுகி
யகத்திலே டணைக ளெல்லா மவிழ்த்தனன் சிறிது நாளி
லிகத்துயர் சாந்தி யாற்றன் னிடத்திளைப் பாறி னனே. 24

படிமுழு துழல்வா னோர்காற் பகைவற்குத் தான்முன் னீந்த
கடிநகர் புக்கா னெல்லாக் கரணமும் வென்ருேன் சென்று
மடியிலா வமைச்சர் மற்ருேர் மனையெலா மைய மேற்ருன்
முடியுடை யிவனை நோக்கி யிரங்கினர் முன்பு கண்டோர். 25

அதிகபூ சனைகள் பண்ணி யரசுசெய் தருளு கென்றே
பதிபெறு பகைவன் ருனும் பகரவும் பலியே யன்றி
யெதிரொரு திரண மேனு மிச்சையற் றிருந்து சின்னுட்
புதிதென் றெவரும் வெம்பப் போயினன் புறத்துத் தானே. 26

சாந்தியே வடிவாய்ப் புந்தி தளர்வின்றி யின்ப மெய்திக்
காந்திசேர் தன்சொ ரூபக் கண்ணிலே விநோத மேவிப்
போந்திசை யதனில் வந்த குருவினைப் புகழ்ந்து சேர்ந்து
தாந்திரி வுற்ரு ரன்னுர் சைலத்தில் வநத்தி னுட்டில். 27

குருவுமா ணுக்கன் ருனுங் குறைவறு சமத்தை மேவி
யிருவரு நிலைமை யொப்போர் விநோதத்தா லாக்கை தாங்கிக்
கருவுட லிருந்தென் போயென் காமித்த படியு லாவி
யொருமையி லுள்ள வாற்ரு லுறைகென வுறைக்க வுன்னி. 28

துன்புரு வாநந் தத்த சுகத்தினு மத்தி மத்து
மின்புருர் தநங்கண் மாத ரியைநிதி யிருநாற் செல்வ

முன்புற விரும்பிச் சித்தர் தந்தவை மோக மின்றி
மென்புலொத் தொழிந்தார் வேரோர் மேதகு நாட்டிற் சென்றார்.29

மைந்தனில் லாத வந்த மாநகர் மன்ன னுவி
நந்தலு மமைச்ச ரெல்லா நலங்கொண்மன் னவனு ரென்று
சிந்தனை செய்யுங் காலைச் சிறுபலி முநிவ னுன
சுந்தர மன்னை நோக்கிச் சுடர்முடி வேந்த னுக்க. 30

பகீரத னரச னுகிப் பலபெருஞ் சேனை சூழ
மகிதலம் புரத்தல் கேட்டு வந்தனர் பண்டை நாட்டோர்
விகிதமாய் நீமுன் வைத்த வெம்முடை வேந்தன் வீந்தா
னகிலருங் களைகண் காணே மரசனீ யாதல் வேண்டும். 31

விருப்பறத் தானே வந்த வெறுக்கையை வெறுக்கை நன்றன்
ருருப்படல் வேண்டு மென்றே யுள்ளன்பால் வேண்டக் கண்டு
திருப்பொலி மார்பன் சென்று திண்புவி சேர வாண்டா
னிருப்புழி மௌநஞ் சாந்தி சமமெய்தி யிராக மின்றி. 32

மச்சர மின்றி வந்த தொழிலொன்றின் வழியி னின்று
மெச்சிய வியப்பி லாதோன் மிருந்தபல் லாண்டு நோற்றுத்
துச்சமி றவத்தாற் கங்கை கொணர்ந்துதொல் பிதாக்க ளுய்ய
விச்சக மிசையே கீர்த்தி யீறற நிறுத்தி னுனே. 33

6—8. பகீரதன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1604.

---

## 6—9. சிகித் துவசன் கதை.

வகிர்த்துநிமிர் மநமென்னு மாப்பறவை தனைமுன்ன மாற்றி யோட்டிச், சிகித்துவசன் றனைப்போலச் சாந்தனு யுன்னிடத்தே

செறிவா யென்னச், சுகித்துணர்வி னின்றுளவச் சிகித்துவச ஞரை யா சொல்வா யெல்லாஞ், சகித்துணர்வு மேன்மேலு நிறைவதற் கென் றவன்கேட்பத் தவனுஞ் சொல்வான். 1

துவாபரமா முகத்துமுத லுண்டானே னேழுமநுத் துஞ்சு மெல்லைத், திவாகரனேர் மாளவதே சத்திறைவன் சிகித்துவசன் செங்கோல் வேந்த, னவாமுதறீக் குணமில்லோ னுதாரமுத னற்கு ணங்க ளனைத்து முள்ளோன், விவாதமறு மோநத்தோன் சமதம மாங் குணநிறைந்தோன் மிகவு நல்லோன். 2

சூடாலை யெனுங்கந்நி சுராட்டிரமன் னவனளித்த தோகை போல்வாள், வீடாத நற்குணத்தாற் றனையொப்பா ளவளையவன் விவாகஞ் செய்தான், வாடாத நினைவொன்றிப் பிறிவின்றிச் செய் தொழில்கண் மாறுபாடற், றீடான பலகலைக்கும் வல்லவரா யிருவரு மொத் தினிது வாழ்ந்தார். 3

ஈருடலுக் கோருயிர்போ விருவருஞ்சேர்ந் திளமைநல மினிது துய்த்தார், சீருடைய வருடங்க ளிவ்வகையே யெல்லையறச் செல்ல லோடு, மோருறுதி யிலாவிளமை யுடைந்தகுட நீர்போல வொழுகிப் போக, நீருறுசெந் தாமறைமேற் பனியிடிபோற் சரைவந்து நேர்ந்த தன்றே. 4

கரதலத்து நீரதுபோ னித்தலும்வா ணண்மெல்லக் கழன்று செல்லத், திரண்மழைநாட் சுரைக்கொடிபோற் றிராமா லொன் றுமே தீர்க்க மாக, விரவுசரற் காலத்தி லாற்றுநீர் போலழகு விரைவி லோடப், புரமுறுநற் சுகங்களெல்லாஞ் சிலைவிடுத்த சரங் களைப்போற் போயிற் றன்றே. 5

கதலியுறு கருப்போல நிராசையைத்தந் ததுபமன்றீர் காரி யந்தா, னிதமுறவாங் கவர்நினைவா ரொத்தையடைந் துள்ளமீண் டெங்கும் வீழா, ததுமிகநன் றவ்வகையா னதுகிடையா திம

மோகத் தழுந்து வார்க்குத், திதமுறவத் தியாத்துமதத் துவநூலே பிறவிநோய் தீர்ப்ப தன்றே. 6

ஆற்றுமதத் துவஞான மொன்றாலு மலதுபிறப் பறுதென் றெண்ணி, யூற்றமுறு தற்பரா யதின்மநமா யதிற்சேர்ந்த வுயிராய் நித்தஞ், சாற்றுமதி னிட்டையரா யதற்கடுத்தோர் சார்வாய்ச் சான் றோர்கள் பூசைக், கேற்றசெய லாற்சிறிது மிடைவிடாப் பரிசயமா யிரண்டு பேரும். 7

தம்மிற்று முணர்ந்தவரா யதற்கடுத்த வாசாரந் தரித்து நின்றார், விம்முற்ற மகிழ்ச்சியராய் விளங்கினார் பின்பந்த விவேக மங்கை, யம்மைக்கா நல்லபத வொழுங்கினாற் பேரறிஞ ரருளிச் செய்த, செம்மைச்சாத் திரப்பொருள்க டரிக்கலா மளவறிந்து திருந்தக் கேட்டு. 8

எள்ளுறு வியாபாரம் வியாபார மில்லாமை யிரண்டு மின்றி, வெள்ளிதாய் விளங்கியநற் புந்தியாற் சூடாலை விசாரிக் கின்று, டெள்ளியே தன்னைமுத னேக்கிநா னென்றெத்தைச் செப்பு கின்றோ, முள்ளாறு விம்மோக மாருடைய தெவ்வாறெங் குதித்த தெத்தால். 9

முதலான வுடல்சடமா மூகமா நானென்று மொழிய லாகா
விதமான கருமஞா னேந்தியர்கள் சடமாகி வெவ்வே றாகு
மதனுறு னன்றாகுந் தடியினு லோடுகளை யசைக்கு மாபோற்
றிதமாகா மநத்தாலே யிவையிரைந் துஞ்சேட்டை செய்யு மன்றே.

செறிதருசங் கற்பமெனுஞ் சத்தியுள தாய்ச்சடமாஞ் சித்தந் தானு, மெறிகவணுற் கற்போலப் புந்தியினிச் சயத்தாலே யியக்க மெய்து, மறிவுறுபுந் தியுஞ்சடமா மறுதியிட லேவடிவா யகங்கா ரத்தா, னெறியுறுசெய் கையையுறுமாற் பள்ளத்தா லோடுநதி நீர்க ளேபோல். 11

தீதகங்கா ரஞ்சடமாய்ப் பயனிலியா யவசமாய்ச் சீவ ஞலே, சாதமுறு மிதுசிறுவர் மயக்கத்திற் பேய்தோன்றுந் தன்மை போலா, மோதியசீ வனுந்தொழிலே வடிவாய்க்காற் றுருவாகி யிதய முற்று, மேதகைய சுகுமார மாயுள்ளே மற்றொன்றுன் மேவி வாழும். 12

ஆற்றுமதத் துவவறிவென் றறிந்தேனீ தறிபொருளா லழுக்கு மேவா, தேற்றுமென துருவமாய்ச் சீரணமாஞ் சித்துருவாற் சீவன் வாழுந், தோற்றுபொருள் களின்மயங்குஞ் சித்துருவாற் சீவன்வாழ் தொடர்ச்சி கூறிற், காற்றதனுன் மணம்போலும் பள்ளத்தா னீர்போலுங் கருதுங் காலே. 13

பொய்யாகிச் சடமான வறிபொருளின் புணர்ச்சியாற் போத ரூப மையான சடமாகிப் பெருநீருட் கனல்போற்றன் வடிவை விட்டு மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளை மேவ லாலே யையோபொய் யாய்ச்சடமா மறிவிஞ லறிவிக்க வறிந்த தன்றே.14

இந்தவறி வெத்தாற்கா ணப்பட்ட தென்னில்வே றேது மில்லை யந்தமில்கா லத்தாலே யறியவேண் டியதறிந்தே னம்ம வம்மா முந்துவறி வின்பரப்பை முடிவாக மாங்கரண முதல வெல்லாஞ் சிந்தனைசெய் யாமையா லுதித்தனவாஞ் சிந்தித்தாற் சோப் பொய் [யே. 15

எல்லையிற்பே ரறிவேயிங் குளதிதனைப் பேருண்மை யென் றுஞ் சொல்வா, ரல்லலுறுங் களங்கமறச் சமமாகி யகங்காமில் வடிவ மாகித், தொல்லையொளி யொருக்காலே துலங்குவதாய் நித்தபரி சுத்த மாகி, மல்லலுயர் பிரமமெனப் பரமமெனப் பெயர் பெற்று வழங்கு மன்றே. 16

இவ்வாறு திநந்தோறுந் தன்சொருபத் தேகளிக்கு மிதய நோக்காற், றவ்வாத பகுதியிலே யாயாசை போய்ச்சங்கஞ் சற்று

மின்றி, யொவ்வாத தொந்தனைபோய்த் தொழிலின்றிப் பற்றுவீ டொன்று மின்றிக், கவ்வாத வியற்றொழில்செய் துயர்பரமப் பெரும்பேற்றாற் கருத்து முற்றி. 17

உள்ளூறுபூ ரணமெய்தி யுவமைகட்கப் பாலாகி யொருவ ராலுந், தெள்ளியள விடவொண்ணு நிலையாந்தன் விவேகத்தின் செறிப முக்க, வெள்ளமுறத் தன்சொருபம் வெளியாய்மென் மலர்க்கொடிபோல் விளக்க முற்று, ளௌ்ளரிய வபிநவமாம் பேரெழில்கூ ரிவள்பொலிவை யினிது நோக்கி. 18

கண்டறியா வழகிதென மிகவியந்து சிகித்துவசன் கழற லுற்றான், பண்டையிள நலமீண்டு படைத்தனைபோ லலங்காரம் பலபெற் றாய்போ, லண்டரமு துண்டனைபோ லார்க்குமுற வரிய பத மடைவுற் றாய்போன், மண்டுகின்ற வானந்த நிறைந்தனைபோற் பொலிகின்றாய் மாசி லாளே. 19

போகத்துக் கிரங்காது சாந்தமா யூற்றமாய்ப் பொலிவுண் டாகி யேகத்திற் சமமாய்க்கெம் பீரமா யுனதுமன திருப்ப தென்னே தேகத்திற் பெறுமழகுஞ் சித்தத்திற் பேரழகுஞ் சேர்ந்த தெங்ங னீகர்ப்பா லுரையென்னக் காதலற்குச் சூடாலை நிகழ்த்த லுற்றாள்.

கிஞ்சிலுமின் றிக்கிஞ்சில் வடிவான விதுவிட்டுக் கிஞ்சி லன்றி, விஞ்சமொரு வடிவுற்றே னதனாலே சீருடைத்தாய் விளங்கா நின்றேன், கிஞ்சிலே கிஞ்சிலெனச் சுபாவ நிலை யாயுதயங் கெடுதி யின்றாய், விஞ்சுவதே ததையறிந்தே னதனாலே சீருடைத் தாய் விளங்கா நின்றேன். 21

அருந்தாமற் றாரிதாம் போகங்க ளருந்தினபோ லமைந்தின் புற்று, வருந்தாமல் விருப்புவெறுப் பிலவதனாற் சீருடைத்தாய் வாழா நின்றேன்; பெருங்கோபம் பற்றிரண்டுஞ் சிறுதொழிற்பாங்

கியாறிவாம் பெரிய பெண்கண், மருங்கேசாத் திரநோக்கிற் களிக் கின்றே னதனாற்சீர் வாழ்வு பெற்றேன். 22

கிஞ்சின்மாத் திரமுருவி லாதவுல குக்கெல்லாங் கிளர்தே வாகி, யெஞ்சவில ளென்றென்பா லின்புறவ னதனாற்சீ ரெழில் பெற் றேனான், புஞ்சமுறு மிவையெல்லாம் விட்டனன்வே றேபொய்யு மெய்யு மாகி, விஞ்சுமது முற்றுமடைந் தேனதனாற் சீருடைத்தாய் விளங்கா நின்றேன். 23

கண்ணாற்பல் கரணத்தாற் கருத்தாலிங் கெதுகாண்கே னது தான் கிஞ்சி, னண்ணும லதற்பிறிதாய்க் கிஞ்சிலா தொன்றுள்ளே நன்றாய்க் காண்கேன், பண்ணுன சிரிதெனச் சூடாலை சொன்ன வற்றைப் பற்றிப் பாரா, னெண்ணும னகைத்தவளைச் சிகித் துவசன் வேறொன்றை யியம்ப லுற்றான். 24

வஞ்சியிடை யாயிசையா ததுசொன்னாய் சிறியார்போன் மருளா நின்றாய், விஞ்சுதாா திபர்வாழ்வின் மிளிர்கின்றா யுன்னிலே மிளிரா நின்றாய், கிஞ்சிலைவிட் டுக்கிஞ்சி லாதடைந்தோர் முன்னிலை யைக் கிட்டா ரென்னிற், பஞ்சிலடி யாயவர்தா முன்னிலையாய் விளங்குவதெப் படியே சொல்வாய். 25

அருந்தலுறாப் போகத்தா லகமகிழ்ந்தே னென்றதனை யகற்று கிற்பார், பொருந்துமிடி யினர்போனிர்ப் பாக்கியரா மவரெங்ஙன் பொலிவார் சொல்வாய், திருந்துறக்காண் பவைகாணேம் வேறே காண் குதுமென்று செப்புகிற்பா, ரிருந்துரைக்கு மிவ்வுரையை விடாமலவர் விளங்குவதெப் படியே சொல்வாய். 26

ஆதலாற் பேதையா யறிவிலியா யலைபவளா யநேகஞ் சொல் லாற், போதநீ களிக்கின்றா யெனவெடிக்க நகைத்தயலே போனான் மன்னன், மாதரா ளதற்கிரங்கித் தன்னறிவி லிளைப்பாறி

மகிழா னாகிப், பேதமா யென்னு ரையை மன்னனறிந் திலனென்று
பேசுற் றாளே. 27

பின்னருமன் னனுந்தானுந் தலைநாட்போற் பேதமறப் பெரு
நாள் வாழ்ந்தார், துன்னுமமை வாயாசை யொன்றுமிலா திருந்
துஞ்சு டாலை தானே, யுன்னியுய ராகாசந் தனிநடக்க வியற்றுது
மென் றுறுபோ கங்க, ளின்னலற வனைத்தையும்விட் டேகாந்தச்
சுகாசநத்தி லிருக்கை யெய்தி. 28

பெரியபிரா ணனைநேரே மேனேக்கப் பழகினாள் பெருநா
ளென்னக், கரியமுகில் கேட்டருளி மிகவருந்தி நெடுங்காலங்
கையாண் டக்கா, லரியவிசும் பினிநடத்தன் முதலான சித்தி
யெலா மளிக்கத் தக்க, வுரியவழி யெதுசொல்வா யெனக்கேட்ப
வசிட்டமுநி யுரைப்ப தானான். 29

சீமானுஞ் சிகித்துவசன் கதைக்கிடையே வினவுதலாற் செப்பு
கின்றேன், கோமானே பிராணாதி பவநத்தின் பரிசயத்தின்
கொள்கை யாகிச், சாமாறில் லாப்பயன்செய் நெறிகேட்பாய்
வாதனைகள் சற்று மின்றிப், போமாறு செய்துளத்தி விதற்கடுத்த
வாதனையே பொருந்தி நின்று. 30

குதமுதலாந் துவாரத்தின் சிறுமையாற் றூநமுதற் குறிக்குஞ்
செய்கை, விதவொழுங்காற் போசநத்தாற் சுகாதநத்தாற் சுத்தத்
தான் மிக்க நன்னூ, லுதவுபொருட் பாவனையா லதனுசா ரத்தினு
லுயர்ந்தோர் சார்வா, லதனையொழிந் தனவெல்லாம் விடுத்தலா
லடுத்தபிரா ணயா மத்தால். 31

கோவலோ பாதியும்போ கமும்விடுத்த லாற்சிலர்க்குக் குறித்த நாளி
லோவிலாப் பற்றுவீ டொழிந்தநாட் கைவசமா யுயிர்க டாமே
தேவரு பிக்ளாத லாற்றங்கள் குணமறிந்து சேர்ந்தா ளோருக்
கேவலாட் போலுலகை யாள்விக்கும் வீடளிக்கு மெல்லா நல்கும்.32

ஆந்திரவேட் டனிகையென்றோர் தனிநாடி நாடிகளூ றணுகி நிற்கும், வாய்ந்தவிசை வீணையுடல் வட்டம்போ னீர்ச்சுழிபோல் வட்ட மேயா, யேய்ந்துளதா நங்களெலா மெய்தலுறு மயனிடத்து மெறும்பின் பாலும், போந்துளபல் லுயிரிடத்து முடறோறுந் தோன்றியே பொருந்தி நிற்கும். 33

சீதவருத் தத்தினற் றயில்பாம்பி னுடல்போற்சிக் கெனவ ளைந்தெப், போதுமசை வுறுங்காற்று னிலைநிற்குங் கதலியின்மென் பூப்போ லுள்ளு, மேதகுமெல் லியதாகு மதனூடே யொருசத்தி விசுத்த மாகி, யேதமறு பரமமாய்ச் சத்திகட்கெல் லாம்வெற்றி யெய்த நல்கும். 34

முனிவுறுபெண் பாம்புபோன் மூச்செறியு மெப்போது முகமே லாகு, மசிசமசை வுக்கேது வாமிதய கோசத்தை யடைந்த நாடி, யெனையவுமிங் கிதனிடையே கட்டுண்ணுங் குண்டலிநி யிதன்பே ராகுந், தினைதலுற வசைகின்ற பரிசவறி வின்கலையாற் சுத்த மாகும். 35

சிந்தனையாற் கலையாகுஞ் சேதநத்தாற் சித்தாகுஞ் சீவ நத்தாற்
சந்தமுறு சீவனு மாநத்தான் மநமாகுஞ் சங்கற் பத்தா
லந்தமில்சங் கற்பமாம் போதத்தாற் புந்தியா மகங்கா ரத்தால்
வந்தவகங் காரமா மினையபுரி யட்டகப்பேர் மருவுந் தானே. 36

குண்டலிநி யெனுஞ்சீவ சத்திமிக நல்லதாய்க் கூடி நிற்கு
மண்டுபிரா ணபாந வடிவமா தலிற்கீழ்மேல் வந்து போகு [மீளுந்
மிண்டறமேற் போகிலுமெல் லாமாய்ப்போ மீளினுமெல் லாமாய்
தண்டலிலாப் புமானேகிச் சாமேவும் பிராணனுமச் சத்தி தானே.

தன்னிடத்தே யெப்படியும் போக்குவரத் தொழித்திந்தச் சத்தி நிற்கின், மன்னுயிர்க்கு நோய்வாரா துள்ளுறவே மாருதத்தை மறுத்த லாலே, யென்னலுமே யாதிவியா திகளிரண்டுந் தோன்று

தலு மிறத்த ருனு, நின்னருளா லுரையென்ன விராகவன்கேட்
டலும்வசிட்ட னிகழ்த்த லுற்ருன். 38

அங்கத்தின் வருத்தத்தை நோயென்பர் வாதனையை யாதி
யென்பர், பங்கற்ற வஞ்ஞான மூலத்தே யிருந்துணர்விற் பாரிப்
போகும், பொங்குற்ற ஞானமிலா மையிற்பொறிக டமையடக்கப்
போகா வாற்ருற், றங்குற்ற விதயத்திற் சிறுமையற மால்கோபந்
தழைத்த லாலே. 39

இதுபெற்ருே மீதில்லை யென்னுமவ தாநத்தா லிறுகு மோக
மதுமெத்த வுண்டாக மழைநாளிற் செறிபனிபோ லாதி தன்னு
முதிரிச்சை வெளியாகி மூர்க்கபா வனைசால முற்றும் போதில்
விதியுற்ற தொழிலன்றித் தீத்தொழில்கள் செய்தலினல் வியாதி
[யுண்டாம். 40

பொல்லாத வுணவினுற் பொல்லாத தேசத்திற் போகை
தன்னுற், பொல்லாத காலவிவ காரத்தாற் செய்தொழில்கள் புரி
பொல் லாப்பாற், பொல்லாத கயவருறு கூட்டத்தாற் பொல்லாத
பொருளெண் ணத்தாற், பொல்லாத விச்சையாற் பொல்லாத
வெண்ணிக்கை பொருந்த றன்னுல். 41

நாடிகளின் வெளிகளுக்கள் சிறுகுதலாற் பெருகுதலா னற்பி
ராண, ஞேடிமிகச் சிதறலுமே யுடருனுஞ் சிதறுதலை யுறுமுற்
றக்காற், கேடிதென முன்னுரைத்த குற்றங்கள் காரணமாய்க்
கிளர்நோ யுண்டா. நீடியகோ டையுமழையு நதிக்குறைவு நிறைவு
களை நேரு மாபோல். 42

தொல்லையதா கினுமிங்குள் ளனவெனினுஞ் சுபமெனினு
மசுப, மேனு, மெல்லையற மிகுந்ததே ததுதன்பா லப்படியே
யிழுத்துக் கொள்ளும், புல்லுறவிவ் வகையாகி யாதிவியா திகளைந்து

பூதத் துண்டாஞ், சொல்லியவிவ் வாதிகடா மிருவகையா யிறக்கு நெறி சொல்லக் கேட்பாய். 43

மேவியசா மாநியமுஞ் சாரமுமென் றிருவகையா மாதி யென்பர், தாவுறுசா மாநியந்தா னுடற்பிணியாஞ் சாரந்தான் சநந மாகுங், கேவலமிவ் வுடற்பிணிதான் றனக்கடுத்த பொருட் பேற்றாற் கெட்டுப் போகும், பாவனையா மாதிகளில் லாதாகிற் றோன்றுபிணி பறந்து போமே. 44

சாரமெனும் பிறவிநோய் தத்துவஞா நத்தன்றிச் சற்றும் போகா, தீரவிது கயிறென்னும் போதத்தா லன்றியாச் சிதைவ துண்டோ, பாரமுறு மாதியிற்றோன் றுப்பிணிமந் திரமருந்து பல நூல் கற்ற, கூரறிவின் மருத்துவரென் றிவ்வகையாற் போமிது நாங் கூற வேண்டா. 45

என்றலுமே யாதியினின் றெவ்வகையுண் டாம்பிணிமற் றெவையான் மாளுங், குன்றனையா யுரையென்ன விராமன்கேட் டலும்வசிட்டன் கூறுகிற்பா, னின்றமநங் கலங்குதலு முடல் கலங்கு முடல்கலங்கி னேர்வந் துற்ற, தொன்றுமறி யாமனோர் வழி விலங்கித் தீவழியி லோடா நிற்கும். 46

பிறையம்பு படமொன்போன் முறிந்தோடுங் கலக்கத்தாற் பிராண வாயு நிறைகின்ற சமமின்றிப் பரந்தோடு நாடிகளு நிலையி னில்லா வறைகின்ற குசீரணமா யசீரணமா யதிசீர்ண மாகி யந்த முறைகின்ற வுடலுக்குக் கூற்றமா நாடியுயி ருலைவி னாலே. 47

உடலுள்ளே விரோதத்தா லுறைகின்ற வந்நம்வேற் றுருவ மாகி விடலுறு நோயாகு மிவ்வகையா லாதியினல் வியாதி யுண்டாந் தொடர்வுறு வாதிநசித் திடுமாகில் வியாதிகளுந் துஞ்சிப் போகுங் கடவதா மந்திரத்தால் வியாதிகணீங் கிடுநெறியைக் கழறக் கேட் [பாய். 48

எப்படியே கடுக்காய்கள் விரேசநத்தைப் பண்ணுகின்ற தியல்பி ஞலே, யப்படியே பாவனையால் யாலவவா திகள்காரி யங்க ளாக்கு, மெய்ப்படிபுண் ணியமாகிச் சுத்தமாங் கிரியையான் மேலோர் சார்வாற், றப்பின்மநந் தெளிவெய்தும் புடம்வைத்த லா னன்றுந் தமரி யம்போல். 49

சுத்தமுற மநந்தெளியி னுடலிலே யாநந்தந் தோன்று நிற்கு மெத்துமதி யுதித்தக்கா னுலகமெலா நன்றாக விளங்கி டாதோ சத்துவமா மநந்தெளியிற் பிராணவா யுவுமொழுங்கிற் சரித்து லாவு முய்த்துளவந் நமுநெறியிற் சேரணிக்கு மதனுனே யொன்றுந் தோன் [று. 50

ஆதிவியா திகளிரண்டுந் தோன்றியொடுங் கிடுநெறிக ளறைந் தோ மன்றே, யோகியருண் டலிநிதன தொழுங்கான்முன் னுரைப்புற்ற யோகங் கேளாய், தீதில்புரி யட்டகமென் றொரு பெயர்கொள் சீவனுக்குத் திகழ்பி ராண, வாதமெனும் பெயர்பெற்ற குண்டலிநி மணத்துக்கு மலர்போ னிற்கும். 51

புகல்வுறுகுண் டலிநிதனைப் பூரகத்தின் பரிசயத்தாற் பூர்ண மாக்கித், திகழ்வுறநின் றுலன்று வடமேரு நிகரான திண்மை யுண்டா, மிகவுடலந் தடிட்பெய்தும் பூரகத்தாற் பிராணனிறை வுற்ற மெய்யைப், பகரறிவு மேனேக்கி லொருக்காலே விண்செல்லப் படா விக்கும். 52

பாம்புபோல் விரைந்து டி போனிமிர்ந்து குண்டலிநி படர்ந்து மேற்போந், தாம்புபோ லுடல்பிணித்த நரம்பெல்லாந் தான் கவர்ந்து சரீர மெல்லாந், தேம்புறு வகைமேலே யெழுப்புவிக்குங் காற்றினுற் செறிந்த பைதான், றாம்புசூழ் நீரிடையே யழுத்துகினு மேற்கிளப்புந் தொடர்ச்சி போல. 53

இத்திறனே மிகப்பழகு மியோகத்தா லியோகிகடா மெழுந்து விண்மேற், கொத்திகவ ரிந்திரன்சேர் மிடிபோல வுலாவுவர்குண்

டலிநி யென்னுஞ், சத்தியது பிரமநா டியிலோடிக் கபாலத்தின் றனிப்பு றம்போ, யுய்த்துளமே லேவிரலோர் பன்னிரண்டி னெல்லை யினி லுறுவ தாகி. 54

நாடிகளெல் லாந்தகையு மிரேசகத்தா லொருமுகுர்த்த நண்ணி நிற்கி, னீடியவிண் சரிப்பவரைக் காணலாம் விஞ்ஞாந நேர்மை யாலே, யூடுறதா ரத்தோடும் புந்திவிழி யால்விண்ணி லூன்றத் தோன்றும், பீடுறுநற் பொருளுதவுஞ் சித்தர்கணங் கநாவிலே பிறங்கு மாபோல். 55

பன்னிரண்டங் குலத்தின்முகத் தின்புறம்போ யிரேசகத்தின் பழக்கத் தாலே, மன்னுயிர்தா னெடிதுநிலை நிற்குமேல் வேற் றுடலை மருவு மென்னச், சொன்னமுநி வனைவள்ளல் குக்கவழி செல்கைக்குந் தூல மாய்விண், டன்னைநிறை கைக்குமணுத் துவந் தூலத் துவமுடற்குத் தருமா றெங்ஙன். 56

அருள்வாயென் றலுமுநிவ னுரைசெய்வா னேகமா யதிவொன் றேயா, யொருவாத சமமாகிச் சாந்தமாய்ச் சுத்தமா யொருபற் றில்லாப், பொருளாய்நுண் மையின்மிகவு நுண்மையாய்ப் புவியன் றாய்ப் புவிசே ராதாய், மருவாநின் றளததுதான் சங்கற்ப முறத் தனைத்தான் வகையாய்ச் செய்யும். 57

பலவுஞ்சூழ் வுறச்சீவ னும்பொய்யே சங்கற்பம் பயின்ம யக்காற், கலங்குஞ்சீ வன்சடமா யிவ்வுடல்கா ணும்பாலர் காணும் பேய்போற், குலவும்பல் லுயிர்களுமிவ் வகையேயெப் படியெத்தைக் குறிக்கின் றூர்க, ளுலகின்க ணப்படியே யதைக்காண்பார் நினை வின்க ணூற்றத் தாலே. 58

ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தான் மூடர்களு மொன்றை யொன்றூன், மாற்றிவிட மமுதாக்கி யமுதத்தை நஞ்சாக்கி மருவா நிற்ப, ரேற்றமுறுஞ் சத்தியபா வனையாலே யித்தேகந்

தேக மான, தோற்றியவித் தேகமீண் டசத்தியபா வனையால்விண்
சொரூப மாய்ப்போம். 59

அணிமாதி குணப்பேற்றின் பாவனையு கங்களுமிவ் வடைவே
யாகுந், துணிவாலே யோகத்தின் சித்தியறி வார்க்கிதுதான் சுலப
மாகுங், குணியான வணிமாதி குணச்செல்வ மிகப்பழகுங் குறிப்
பாற் பெற்று, மணியாழி யுலகெல்லாங் கணத்தில்விளை யாடினுண்
மறுவி லாதாள். 60

நாயகனை யிமைப்போது நீங்காதா ணல்லமுதா ஞானந் தன்னை
யாயவனுக் கநேகவபா யத்தினு லறிவித்து மனைய மன்னன்
றாயறிவி லிளைப்பாறப் பெற்றிலன்மா யோகினியாஞ் சூடா லைக்கு
மேயகுணங் களுமறிந்தா னில்லைப்பா லகர்விஞ்சை மேவா தாப்போ
[ல். 61

தன்னறிவி லிளைப்பாற விலாமையினு லவனுக்குத் தனது
யோக, நன்னிதியை யுரைத்திலளாற் சூத்திரர்க்கு யாகநெறி
நவில்வா ருண்டோ, வென்னலுமே மகத்தான சித்தயோ கிசிவ
ருந்தி யியம்ப வேயு, மன்னசிகித் துவசனறி வுற்றிலனேற் பிற
ரெங்ங னறிவா ரையா. 62

ஒல்லும்வகை யுரையென்ன விராகவன்கேட் டலும்வசிட்ட
னுத்த ரிப்பா, னல்லவுப தேசந்தா னம்பிக்கை மாத்திரத்தை
நன்றாய்ச் செய்த, லெல்லையிலா வறிவுக்குச் சுத்தமா மகனறிவே
யேது வென்று, சொல்லுதலு மீண்டந்த முனிதனக்கு ரகுநாதன்
சொல்லு கிற்பான். 63

மகனறிவே யேதுவெனிற் குருவசந மேதுவாய் வருவ
தெங்ஙன், மிகுமறிவுக் கெனக்கேட்ப வசிட்டனதற் குரைசெய்
வான் விந்த வெற்பி, னகல்வநத்தி லொருவேடன் பெருங்குடும்பி
யவனொருநா ளடவி தன்னிற், புகுநெறியிற் பலகறையொன் றினைக்
கெடுத்துத் தேடினன் புலம்ப லோடும். 64

மூன்றுநா டேடியபின் முழுமதிநேர் மணியொன்று முன்னே கண்டா, னென்றுபல கறைதேட வேழுலகும் பெறுமணியை யெதிர்ந்தான் வேடன், ஞான்றவுப தேசத்தாற் கல்வியான் ஞாந முறு மதுவே போல, வூன்றறவொன் றைக்கருத வொன்று வெளிப் படுங்குருவி னுபதே சத்தால். 65

நலனுறுபே றறிவுக்குக் குருவசநங் காரணத்தை நண்ணு தேனும், பலகறைநன் மணிக்கேது வானுப்போ லேதுவாய்ப் பலத்தை நல்கும்; குலவுசிகித் துவசன்றன் ஞாநமிலா மையின் மோகங் கூடிச் சாலச், சுலபமுறு தன்செல்வம் பெருங்கனவென் றெண்ணியே துன்ப முற்றான். 66

அருந்தாநம் பலகொடுத்தான் றவமிகச்செய் தான்றீர்த்த மனைத்துந் தோய்ந்தான், வருந்தாமை யவற்றாலும் பெற்றிலன்பே ரிடராலே மநநொந் தோர்நா, ளிருந்தானே காந்தத்தின் மடமேலே சூடாலை யிருக்கச் செய்து, பெருந்தாப முறுகின்ற துயரெல்லா மவளுக்குப் பேச லுற்றான். 67

ஆண்டவா சினும்புசித்த் செல்வத்து மின்றுநா னுசை யற்றே, னீண்டவநம் புகநயந்தேன் றுக்கசுக மாபத்து நிதிக ளெல்லா, மாண்டவநத் துறைவோரைத் துயர்செய்யா புவிபொருட் டான் மயங்க வேண்டா, காண்டகுதன் கிளைநாசந் தோன்றாது நாட்டினும்வன் காடு நன்றே. 68

பற்றின்றித் தனியிருக்கு மநத்தைப்போற் பனிமதியும் பதுமத் தோனும், பொற்றிறள்சே ரிந்திரனுஞ் சுகமடையா ராதலிற் கான் போகு மென்னைக், குற்றமென விலக்கலீ கணவர்நயந் ததுவிலக் கார் குலத்தின் மாதர், சிற்றிடையா யென்றுரைத்த மன்னனுக்குச் சூடாலை செப்ப லுற்றாள். 69

வசந்தநாண் மலர்விளங்குஞ் சார்காலங் காய்விளங்கு மாபு போல, விசைந்தநாட் செய்ததொழில் விளங்குமாற் சரையாலே

யாக்கை நைந்தாற், பசைந்தமா லறவுநமே போகலா மிளமைநாட்
பான்மை யன்றா, மசைந்திடா தொழிகவெனச் சூடாலை சொல்வி
யதற் கரசன் சொல்வான். 70

நடாதொழிவா யேகாந்த வநம்புகுந்தே நிற்பேனான் சற்றுந்
தாழேன், படாமுலைநீ சிறியையா லுடன்வருதற் காகாநீ பாரைத்
தாங்கி, விடாதிருத்தி நன்மனையிற் கணவாகன் றாற்குடும்ப மெலிவு
றாமற், கெடாதளித்தல் குலமகளிர் விரதமென நீர்படிவான்
கிளந்து போனான். 71

பகற்பொழுது சென்றதற்பின் சந்திநிய திகள்பண்ணிப் பாவை
யோடுஞ், சுகித்தமளி யெனநிலத்திற் றுயில்வுற்றா னள்ளிரவிற்
றுயிலும்வஞ்சி, யகத்திருப்ப மெல்லவெழுந் தவளறியா வகையேகி
யறிந்தோர்க் கெல்லா, நகர்க்குளுலா வுதுமென்னா யாவரையு
நிறுத்திப்போய் நகரை நீத்தான். 72

சடமகலாப் பெருந்திருவே யுனைத்தொழுதே னில்லென்று
தன்னோ டேகி, யடவிபுகுந் தான்றிரமோர் பன்னிரண்டிற் பல
கிரியு மாறு நீங்கிப், படர்சநங்கள் செலற்கரிதாய் மந்தரவெற்
புக்கருகாம் பழுவம் புக்கான், மடலவிழ்பங் கயவாவி மலர்ப்
பொழில்சூ ழவ்விடத்தில் வசிப்ப தானான். 73

சாலையமைத் தான்மூங்கிற் றண்டிழைத்தான் கமண்டலமுஞ்
சமைத்தா னக்கு, மாலையுங்கந் தையுங்கநிகா யமைப்பனபாத் திரங்
களுமான் றோலுஞ் சேர்த்தான், மேலையுயர் தவந்தொடங்கிச்
சந்திநிய மமுஞ்செபமும் விடிந்த சாமஞ், சோலைமலர் பறித்த
லிரண் டாஞ்சாம மிவ்வகையே தொழில்க ளாக்கி. 74

கடவுள்பூ சனைமூன்றுஞ் சாமநா லாஞ்[illegible]ாமங் கநிகாய் கொள்
ளல், படரிரவெல் லாஞ்செபமா மிவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்த
வேந்தன், மடவாலிங் கரையிரவிற் கண்விழித்தா டன்னருகு

மன்னனைக் காணு, ளிடர்மருவி வாழ்வகன்று வநம்புகுந்தா னரச
னென விரங்கி வாடி. 75

பதியொழிந்து கதியில்லைக் குலமகளிர்க் கரசனைநாம் பயிறு
மென்று, மதிநினைந்து சாளரத்தாற் புறப்பட்டு வானேகி வானிற்
சித்த, ரதிகமிதோர் மதியென்ன முகந்திகழப் போகின்று ளாங்கே
கண்டாள், கதிர்வடிவா ளுடனிரவிற் றனிப்போமன் னனைக்கண்டு
கருது கிற்பாள். 76

இனியிவன்செய் வனவென்னென் றெண்ணுதலு மேற்செய்வ
தெல்லாங் கண்டாள், கனிமொழியா டிரும்பினு ளின்றிவனை
நாஞ்சேருங் காலமல்லத், துனியறப்பின் சேர்வதே விதிநெறியா
மெனமீண்டு தொல்வீ டுற்றாள், வினவினர்க்கு மன்னவனோர்
காரணத்தே கினனென்று விளம்பி யார்க்கும். 77

அரசனெழுங் காற்புவியைத் தனிகாத்தாள் சமநோக்கா
லணங்கு போல்வாள், வரிசையுடன் பதினெட்டாண் டகன்றகு
டாலையுந்தன் மனையில் வாழ்ந்தாள், புரைசெறிகா நகத்திருந்தான்
சிகித்துவச னவன்பாலும் போவ தற்கு, விரவியநா ளிதுவென்ன
விருளிலே புறப்பட்டு விண்ணிற் போனாள். 78

மாருதத்தின் கழுத்தேறி மறைந்துபோய் மந்தரமா மலையைச்
சேர்ந்தா, ளாரமற மணிப்பூண்க ளின்றியே கறுத்துலர்ந்த வங்க
மாகி, யோருடனின் றதுகண்டா ளறிந்திலண்மா யோகத்தா
லுணர்ந்து மன்னனைக், கூருமிடர் சிறிதடைந்து தன்னிலே மநத்
தோடு கூற லுற்றாள். 79

அறியாமை யறக்கொடிதந் தோவந்தோ வதனுலிவ் வாச
னேந்தான், பிறியாத ஞாநமும்போ கழும்வீடு மின்றளிப்பேன்
பிறிதொன் றில்லைச், சிறியாணம் மனைவியிவ ளென்றிகழா வகை
வேறோர் தேகமேவி, நெறியாக வுணர்த்துவன்பே தைமைதீரு
நெஞ்சினனாய் நிருப னின்றான். 80

பக்குவமா தவினிந்த விமலமநத் தேயறிவு பற்றி பாயுந், தக்கதிது வென்றெண்ணி யொருசிறிது தியாநத்தாற் ஞன்வே ருகி, மிக்கதொரு வேதியன்சே யாய்க்கணவன் முற்குதித்தாள் விண்ணி னின்று, மக்கணமே யவனேக்கிக் கடிதெழுந்தங் கிகார மனைத்துஞ் செய்தான். 81

பொன்னிறத்தன் வெண்டாள மாலையன்வெண் டுகிலுடை யன் புரிவெண் ணூலோ, னன்னிலத்தை விடச்சிறிது மேனிற் போன் றனைநோக்கி நடவிங் கென்று, தன்னிடத்தா தநங்கொடுத் தான் சிகித்துவசன் மறையவன்சேய் தானு மீண்டு, மன்னியற்கைத் தவமுநியே யுனைத்தொழுதே னென்றுமறு மாற்றஞ் சொல்லி. 82

ஆதநத்தி லிருத்தலுமே மன்னுரைப்பான் கடவுண்மக ஞன நீதான், போதலினுற் பயன்பெற்றே னின்றன்றே வென்றுபல பூசை பண்ணி, யேதமற விட்டதே வதையென்றே கருதினு னிவனு மந்தப், பூதலமன் னனைநோக்கி நின்குணமும் விநயமுமார் பொருந்து கிற்பார். 83

அதனலே நீடூழி வாழ்தியா லுபசாந்த மான நெஞ்சால்
விதமான கற்பனையற் றரியதவம் வீடுபெற மிகச்செய் தாயோ
சதவேள்வி வாசவனேர் வேந்தனும் பதம்விட்டுத் தவவ நத்தை
யிதமாக நினைந்துறைத லசிதார விரதமெனு மியற்கை யொக்கும்.

என்றமறை யவன்றனைப்பார்த் தரசனுரைப் பானிங்கென் னியற்கை யெல்லா, நன்றுணர்வுற் றுய்தேவ ஞதலா லிதில்வியப்பு நண்ணற் பாற்று, நின்றனை நீ யார்புதல்வ னின்பெயரென் வருபொருளென் னிகழ்த்து கென்ன, வொன்றுமொழி யாதுரைப்பக் கேட்டியென மறையவன்சே யுரைக்க லுற்றுன். 85

நாரதனென் றெருமுநிவன் மெய்ஞ்ஞாந விளக்கொப்பா னன்னீர்க் கங்கைத், தீரமுறு பொற்றலத்திற் சமாதியிருந் தானந்

தத் தியாகம் வீட்டோர், நேரமிருப் புழிவிளையாட் டொலியொன்று செவியுறவந் நெறியைப் பார்த்தான், பேரழகி லரம்பைதிலோத் தமையொப்பார் திரண்டுசில பெண்கள் வந்தார். 86

கங்கையினீர் விளையாட்டிற் களிப்புறுவார் புருடரயல் காணு வாற்றாற், சங்கையறத் துகிலில்லா ரவர்வரத்தைக் கண்டுமநந் தாவி யோடித், துங்கவிவே கந்துறந்து சுகமடைய வுயிரலைந்து தொடர்ந்து நிற்கும், பங்கமிலா நாரதன்றன் மநநழுவிச் சுக்கிலமும் பாய்ந்த தன்றே. 87

என்னலுமே நின்மொழியா மின்னமுதா லுளங்குளிர்ந்தே னெனினும் வேறு, பன்னுமொழி பரம்பொருள்போ லறிவரிதாற் குவித்துனதற் பத்தி சொல்வாய், பின்னருயர் பரம்பொருளை வருந்தியுங்கேட் கின்றேன்மேற் பேசு கென்ன, மன்னனுரை செயக்கேட்டுச் சூடாலை யாமறையோன் மைந்தன் சொல்வான். 88

நழுவுமந மெனுமத்த மதகயத்தை நாரதனுர் நல்வி வேகப் பழுதில்பெருந் தூணிலே நற்புத்தித் தோட்டியாற் பற்றிக் கட்டித் தழுவுபடி கக்குடத்திற் றுதுவைவிட் டான்பாலை சால வார்த்தான் செழுமதியம் பாற்கடலில் வளர்வதுபோற் கருவளர்ந்து சிறந்த தன்றே. 89

குடநின்று புறப்பட்ட குமரனுக்கு விஞ்சையெனுங் குறைவில் செல்வப், படலங்க ளுண்டாக்கிப் பிதாமகன்பாற் கொடுபோகப் பதுமத் தோனுங், கடனென்று போனுக்கு மெய்ஞ்ஞானக் கரை காணக் காட்டி விட்டா, னுடனங்கா ளன்னவனுற் குடம்பெறலாற் கும்பனெனு மொருபேர் பெற்றேன். 90

செய்யகலை மகளெனக்குத் தாயாங்கா யத்திரிதான் சிறிய தாயா, மையில்சதுர் வேதமெனுந் தோழருடன் விளையாடி வந்தே னென்ன, வையவுனைத் தெரிசித்தேன் பெறவேண்டும் பேறெல்லா

மமையப் பெற்றேன், மெய்யிதுவென் ருன்மன்னன் கும்பனதற்
கிவ்வாறு விளம்ப லுற்ருன். 91

எனையுரைத்தே னுனக்குமுத னீயாரென் செய்கின்ருயெனக்கு நீயு, முனையுரைப்பா யென்றலுமே மன்னனுரைப் பான்பிறவிக் குள்ள மஞ்சி, வினையறுகா னகம்புகுந்தேன் சிகித்துவசன் பேர்நாட்டில் வேந்தாந் தன்மை, தனையிகழ்ந்திங் கிருக்கின்றேன் பிறவிக்கே விடாமலுளந் தவியா நின்றேன். 92

இப்பரிசே தவத்தொழிற்கு வேண்டினவெல் லாந்தேடியியற்ரு நின்றுஞ், செப்பரிய துயர்விட்டுப் பெருந்துயர்சேர்ந் தேனமுதந் தீநஞ் சான, தொப்பரியா யென்றலுமே கும்பனுரைப் பான்குரவ னுணர்த்து ஞாந, மெய்ப்படவந் தாற்சுகமாம் போதுபோக் குங்கிரியை விநோத மன்ரே. 93

ஞாநமிலா தவர்க்கெல்லாங் கிரியையயே கதியாநற் கிரியை வேந்தா
வீநமுறு வாதனைமாத் திரம்பலமா தலிற்பலமு மெய்த நல்கு
மானமுறு மிருதுவரின் முன்டலங்க ளங்ஙனே மாய்தல் போல
வூனமுறு வாதனைமாய்ந் தாற்கிரியை யுறுபலமு மொழிந்து போமே.

பலமதனை யொருக்காலும் பலியாத சரவணத்தின் பரிசுபோல, வலமருவா தனைதீர்ந்த கிரியையுமேற் பலந்தன்னை யளிக்கமாட்டா, வுலகமெலாம் பிரமமெனும் பாவனையா லஞ்ஞாநமொழிந்து போனுன், மலமுறுவா தனைதோன்ரு காலினீ ருண்டென்று மதிப்பா ருண்டோ. 95

வாதனைமாத் திரம்விட்டாற் சரைமரண முறுபிறவி மருவா தான
தீதில்பத முண்டாகும் வாதனை யோ டேசேர்ந்த சித்தந் தானே
பேதமையஞ் ஞாநமாம் வாதனைதீர் மநந்தானே பிறவா ஞாந
மேதமறு ஞாநத்தா னேயமுணார்ந் தாற்பிறவி யெய்தா தன்றே. 96

ஞாநமிக நன்றென்றே யயன்முதலா நல்லோர்க ணவிலா நிற்க, நீநயவா திருந்தனையென் யானுரிவ் வுலகெங்ங னேர்ந்த தெங்ஙன், ரூனமுற விறக்குமென நினைகிலையென் பேதையர்போற் றளர்கின் ருயெ, ஞனகுர வையிறைஞ்சிப் பந்தம்வீ டெப்படி யென் றறிகி லாயென். 97

நிறையறிவின் சமமான நோக்கினரைச் சேவித்து நிரந்த ரித்துப், பொறையுடனே விஞவிஞன் முத்திபெற நுண்ணறிவு பொருந்து மென்ஞ, மறையவன்போ தித்தலுமே கண்கணீர் சொ ரிந்திரங்கி மன்னன் சொல்வா, னிறையவனே யறப்புதுமை யுன் ஞலே யுணர்வுற்றே னேழை யேனே. 98

மடமையாற் பெரியவர்தஞ் சேவையைவிட் டுத்தனியே வநத்தில் வந்தே, னிடர்மேவு பாவமெலா மின்ருெழிந்தேன் வநத் தினீ யெய்தி யென்னைக், கடஞக வுணர்த்துதலாற் குருநீயென் பிதாநீயென் காத லோனீ, திடமான மாணுக்க ஞய்த்தொழுகின் றேன்கருணை செய்ய வேண்டும். 99

உதாரமிக வுண்டாகி யுணர்வுற்ருற் றுன்பமெலா மொழிப்ப தாகிச், சதாசுகமாம் பொருளாக நீயறிந்த தேததனைச் சாற்று கிற்பாய், பிதாமகனெப் பாயென்ற மன்னனுக்குக் கும்பன்ருன் பேசு கிற்பான், கதாவியெழு மநமொருப்பட் டுணர்கியே லுனக் குண்மை கழறு கிற்பேன். 100

சொன்னதுகைக் கொள்ளாது விநோதத்தாற் கேட்பவர்க்குச் சொன்ன வார்த்தை, பன்னியுமோர் பயஞகா திருளிலே விழிக் குணர்வு பலிப்ப துண்டோ, வென்னலுமன் னவனுரைப்பான் வேதவிதி யேநீயிங் கிசைத்த வெல்லா, நின்னருளாற் கைக்கொண்டு சத்தியமே நன்ருக நினையா நிற்பேன். 101

வேறு.

என்று மன்ன னுரைசெய்ய வெழிலார் கும்ப னுரைசெய்வா
னொன்று மறியாப் பாலகனுக் குரிய தந்தை யுரைப்பதுபோல்
வென்றி மன்ன நானுனக்கு விளம்பு முரையை வினவாது
நன்றி தென்றே கேளென்று ஞாநந் தோன்ற நவில்வுற்றான். 102

மன்ன வீதோர் கதைகேட்பாய் மற்றிக் கதையி னுறுபொருளைப்
பின்ன னுரைக்கேன் முன்னாளிற் பெரியோ னொருவன் பெருஞ்செ
பன்ன நின்ற கலைநூல்கள் பலவும் வல்லோன் ஞாநமிலோ [ல்வன்
னன்ன னுயர்சிந் தாமணியை யறவே முயன்று தேடுற்றான். 103

மிக்க வருத்தத் தாற்றீர மேவ வேண்டு மெனுமுயல்வாற்
றக்க மணிகிட் டினவருந்திச் சால முயன்றார்க் கேன்கிடையா
தொக்க சுடர்மா மணிதன்முன் றோன்றி மதியின் விளங்கிடவு
நக்க மணியைக் கைக்கொள்ளா நாநா விதமாய் நாடுற்றான். 104

சிந்தா மணியன் றிதுவேறோர் சிறுமா மணிசிந் தாமணிதா
னெந்தா ராய்ந்து வாணுட்போய் நுடங்கும் போதல் லால்வருமோ
னைந்தா லும்பா வியர்க்கெய்தா நல்லோர் சிலர்க்கு நண்ணலுறுந்
தந்தாம் வினையை நினையாமற் றளர்ந்தாற் கடிதி னெய்திடுமோ.

மனித னுனென் றவமற்பம் வல்ல பங்கள் சிறிதில்லைத் [டுமோ
துனிசெய் நிர்ப்பாக் கியனெனக்குத் தோன்று மணிமுன் றோன்றி
றனியின் னமுந்தே டுதுமென்று நன்மா மணியை யெடுத்திலனாற்
புநித மணியும் போயினதாற் பொல்லா தார்க்கு நலனுறுமோ. 106

மீண்டும் வருந்தித் தேடுற்றான் வெம்பிச் சிலநா ளுழன்றளவே
யாண்டு மறைந்து சிலசித்த ரவனை நகுவான் காட்டுவிக்கக்
கீண்ட வளையின் முறியொன்று கிடப்பக் கண்டா னறிவில்லான்
மாண்ட சிந்தா மணியிதென மகிழ்ந்து வியந்து கைக்கொண்டான்.

வெந்த மணியை மிகப்பேணி மிக்க நிதியெல் லாம்விட்டான்
வந்த மணியெல் லாமளிக்கு மற்ற நிதிக ளென்னென்றே
சிந்தை செய்தா னித்தேசந் தீயோ ருண்டு சுகமில்லை
யிந்த விடந்தீ தெனவநத்தி லிருந்து சுகிப்போ மென்றகன்றான்.

வாழ லாமென் றெண்ணிப்புன் மணியால் வருத்த மெலாமுற்றுத்
தாழ நின்றான் வேறொன்று சாற்றக் கேளாய் புந்திக்குச்
சூழ வறிவுண் டாக்குவிக்குந் தொல்லை விந்த வநத்திடையே
வேழ மொன்று கரிகட்கு மேலா மிகவு முயர்ந்ததுவே. 109

வயிரத் தினுநீண் டறக்கூராய் வலிதா கியகோ டிரண்டுளது
பயில்வுற் றிருப்புக் கயிற்றாலே பாகன் பிணித்து விலங்கிட்டான்
செயிர்பற் றியபல் பிணிப்பாலே சிந்தை தளர்ந்து கொம்பிரண்டாற்
குயில்வித் துளவன் கட்டெல்லாங் குலைத்த தொருநாற் கடிகையி
[லே. 110

விலங்கு முறிந்த படிகண்டான் வேழத் தலைவீழ்ந் துயர்பாகன்
கலங்கி வீழ்ந்தா னவன்வீழக் கண்ட களிறு கருணையினன்
மலங்க வதஞ்செய் யாதகல மற்றப் பாகன் மீண்டெழுந்து
சலங்கொண் டேகி யக்களிற்றைத் தானே தேடி யெதிருற்றான்.

ஒருகா னிடையே யக்கரியை யுற்றான் குளியொன் றுண்டாக்கிச்
சருகாற் கொடியான் மறைவித்தான் றந்தி சிலநா டிரிந்தங்கே
வருகா லையில்வீழ்ந் ததுகுழியில் வந்த பாக னுறப்பிணித்தான்
கருதா நின்ற துயரோடுங் களிறு நின்ற திப்போதும். 112

தனது வீட்டிற் சிறையிருக்குந் தனிமா வலிபோ னின்றகரி
முனமுன் வீழ்ந்த பகைப்பாகன் மூளை சிதறிற் றெனில்வந்து
வநவெங் குழியிற் கட்டுண்டு மயங்க வேண்டா மதுபோல
வினவி நிகழ்கா லத்தான்மேல் வினைநோக் காதார் மெலிகுவரே.

என்ற லோடுஞ் சிகித்துவச னெந்தாய் சிந்தா மணியாலும்
வென்றி வேழந் தன்னாலும் விளம்பு கதையை விளக்குகென

நின்ற கும்ப னுரைசெய்வா னெடுநூற் பொருள்கள் பலவுணர்ந்தோ
னன்றி ஞான மில்லாதோ னன்மா மணிதே டியவனென்றான். 114

என்ன வுரைத்த துனையாநீ யெல்லா நூலுங் கற்றுணர்ந்து
மன்னு சாந்தி பெற்றிலைவான் மணியென் றதுதா னேதென்னி
லுன்னு வஞ்ச மறவெல்லா மொழித லாகுந் துயரனைத்துந்
துன்ன வில்லா வதுதேடத் தொடங்கி யரசு துறந்தனையால். 115

மனையுங் கிளையுந் துறந்திங்ஙன் வநத்தில் வந்தாய் நாடகன்று
யனைய சகலத் தியாகநிறை வாகு மளவி லதன்விகற்ப
நினைவில் வளர்ந்து விண்மூடு நீல முகில்போ லுனைமறைக்க
வினைய சகலத் தியாகமுய ரின்ப மல்ல மகத்தல்ல. 116

பிறிதொன் றுயர்ந்த துளததுதான் பெருநாண் முயன்று லெய்து
வெறிய விகற்ப மநநிறைய மிக்க தியாகம் போயினதாம் [மென
நெறிகொள் சகலத் தியாகம்போய் நினது தவமாம் வளையின்முறி
யறிவில் விகற்ப விழியாற்கண் டதுநன் றென்றே யழுங்குதியால்.

அளவற் றெளிதாஞ் சுகமகற்றி யரிதா யற்ப மாம்பொருளி
லுளமுற் றவரே யுயிர்க்கொலைஞ ருயர்வஞ் சகரென் றுலகுரைக்கும்
வளமிக் குயர்சிந் தாமணிநீ வந்த தென்றெண் ணியதவத்தாற்
றளர்வற் றிலைபெற் றிலையொன்றுந் தந்தி யென்ற தினிக்கேளாய்.

மதமா வென்ற துனையாகும் வைராக் கியமும் விவேகமுமே
யதனீள் கொம்பா முன்குணங்க ளானை மேற்கொண் டுழல்பாகன்
விதமா வுன்னை மெலிவிக்கு மிகுமஞ் ஞான மதனுலே
சிதறு நின்று யரந்தைகளாற் செலுத்து மவனுற் கரிபோல. 119

இருப்புக் கயிறும் விலங்குகளு மிச்சா பாச மென்பனவாம்
பெருக்க விவற்றுற் கட்டுண்டாய் பேசு மிரும்பின் மிகவன்பா
மிருப்புக் கயிறும் விலங்குகளு மிகுநாட் செல்லிற் றேய்ந்தொழியுஞ்
செருக்கு மாசை மேன்மேலே் திடமாய் வளருந் தீர்க்கமுற. 120

மூரிக் கயிறும் விலங்குகளு முறித்த தானே யென்றதுதான்
பாரிச் சுகமெல் லாநீமுன் பற்றற் றொழித்த படியாகுஞ்
சூரிற் பாகன் வீழ்ந்ததுநின் றறவின் மடமை வீழ்ந்ததுவாம்
பேரிச் சையைநீக் கிடிற்பின்னைப் பிறவி தரும்பே தைமையுண்டோ.

போக மயலை விரத்தியினாற் போக்க நினையி லஞ்ஞாந
மேக நினைந்து வெட்டுமரத் திருக்கும் பேய்போ னின்றலையு
மோக மறவே போகங்கண் முற்றும் விவேகத் தால்விட்டால்
வேக முறப்போ மஞ்ஞாநம் வெட்டி வீழ்ந்த மரப்பேய்போல். 122

மட்டில் போக மெலாமொழித்தான் மடமைத் தொடர்ச்சி யெல்லாம்
வெட்டி வீழ்ந்த மரநின்று வீழ்ந்து போம்புட் கூடுகள்போற் [போம்
கிட்டி வநீ யடைந்தளவே கிளரஞ் ஞாநம் வீழ்ந்துளதாற்
றட்டில் சகலத் தியாகமெனுந் தனிவா ளாற்கொன் றிலையதனை.

அதனுன் மீள முளைத்தெழுந்த வஞ்ஞா நத்தா லறநொந்தாய்
மதமா வுக்குப் படுகுழியை வகுத்தான் பாக னென்றதுதான்
றிதமா வுனக்குத் தவத்துன்பஞ் செறியஞ் ஞாநஞ் சேர்த்தியதாஞ்
சுதமார் குழிமேன் மென்கொடிக ளுயர்கூர் தவஞ்சேர் நற்றொழில்
[கள். 124

இவ்வா றின்று மிடர்தவமா மிந்தக் குழியி லுழக்கின்றாய்
வெவ்வாள் வலிமா வலிசிறையாய் மிகுபா தலத்தி லிருப்பதுபோற்
றவ்வா மொழிமென் சூடாலை சாற்று ஞாந மிழந்தனையே
னைவாய் சகலத் தியாகத்தை நழுவி னையே னவில்கென்ன. 125

வேந்த னுரைப்பான் பார்விட்டேன் வீடு விட்டே னிதிவிட்டேன்
காந்தை தனைவிட் டேன்சகல த்யாகங் கைவிட் டதுமற்றென்
றோர்ந்து புகலென் றலுங்கும்பன் செப்பு வானீ தேசமுதற்
சார்ந்த வெல்லாம் விட்டாலுஞ் சகல த்யாக மன்றாகும். 126

எல்லாத் திலும்பற் றண்டுனக்கவ் விச்சை யெல்லா மறவிட்டு
நல்லார்க் குரிய நல்லின்ப நண்ணு கென்ன மன்னுரைப்பான்

மல்லார் புவிவிட் டதுசகல மன்றேல் வநமே யெனக்குளது
கல்லாற் றருவா னிறைகாட்டிற் காத லுறுவா தனைவிட்டேன். 127

இனிநான் சகலத் தியாகத்தை யெய்தி னேனென் றலுங்கும்பன்
கனியார் மரமு நெடுமலையுங் கழன்றுற் சகல மன்றுனக்குத்
துனியார் பற்றுண் டனைத்தினுமத் துன்பந் துறந்தாற் சுகமென்னப்
புநிதா விதுவு மன்றுகிற் புகல்வே னெனப்பூ பதிபுகலும். 128

கந்தை தண்டு செபமாலை கலைத்தோல் பாண்டங் கமண்டலமுண்
டெந்தை யிவற்றை விடுகின்றே னென்று கூட்டி யெரிகொளுத்திச்
சிந்தை களித்து வெற்றுடலாய்ச் சிக்கற் றனன்பற் றிலனென்றே
முந்தை யறிஞன் முகநோக்கி மொழிய லுற்றான் சிகித்துவசன். 129

அம்ம வம்ம கடவுண்மக ஞன வுன்ன லறிவுற்றேன்
மம்ம ரொழிந்தேன் கேவலமாய் மலங்க ளற்றே னிதுவென்று
விம்மு சங்கற் பத்தெய்தா வேறொன் றறயா வையும்விட்டேன்
செம்மு பொருளின் றிரளெல்லாஞ் செநந மளிக்கும் பந்தனையே.

பொருள்க ளெம்மட் டெம்மட்டுப் போன தம்மட் டம்மட்டுந்
தெருளு மநந்தான் சுகமடையுஞ் செயித்தே யந்தச் சுகம்பெற்றேன்
மருள்செய் பந்தங் களுமற்றேன் மாசி லாத திகம்பரனு [ன்.
யருள்செய் சகல த்யாகத்தை யடைந்தேன் வேறென் னுளவென்று

கும்ப னுரைப்பான் சகலமும்விட் டிலைநீ யிந்தக் கூத்தாடல்
வம்பு காணென் றலுமன்னன் மநத்தி னினைந்து மீண்டுரைப்பான்
வெம்பு காணப் பாம்புகள்சேர் வெள்ளென் பூணு முடலொன்றே
யிம்பர் மீந்த தெனக்கிதனை யின்றே யெளிதின் விடுகின்றேன். 132

காண்டி யென்றோர் வரையேறிக் கவிழு மளவி லுயர்கும்ப
னீண்டி தென்னே யிவ்வுடலு னென்ன குறைசெய் ததுபேதாய்

மாண்டு பயனென் னிளங்கன்றை வல்லே றடர்ந்து முனிவதுபோற்
றூண்டி விழுந்து மெய்விடினுஞ் சகல த்யாகி யாகாயே. 133

எத்தா லுடல மசைகின்ற தெதுதான் பிறவி கருமத்தின்
வித்தாய் நின்ற ததுவிட்டால் வேந்தா வெல்லாம் விட்டனவா
நித்தா ரமிதென் றலுமுடலை யசைத்துப் பிறவி நிறைவித்தாய்த்
தத்தா நின்ற தேததனைத் தவிரு மாறு சொல்லென்ன. 134

இயலார் கும்ப னுரைசெய்வா னெல்லாச் சகமு மிதுவாகி
வியனூர் சீவன் பிராணனென மேவு பெயர்கள் பலபெற்றுப்
பயனூர் சடமு மசடமுமன் றாகிப் பரந்த சித்தத்தை
யுயர்வோர் சகல மென்றுரைப்ப ருலகு மிதுபந் தமுமிதுவே. 135

சகந கருமங் களின்வித்தாய்த் தருவை யசைக்குங் காற்றேபோற்
றிகமு முடலை யசைப்பதுவுஞ் சித்த மிதனைத் தீர்வதுவே
யநக சகல த்யாகமதா மதுவே பரம வாநந்தம்
வினவு பிறவெல் லாமிகவும் வெருவு கின்ற வெந்துயரே. 136

சகல த்யாகந் தனைச்செய்து சாந்த னும்மச் சரமின்றிப்
பகுதி நிலையாற் றெளிவுற்றூற் பயின்ற வடிவே ததுநீயாய்
நிகழு வாயென் றலுமன்ன னுரைப்பா னீசொன் னெஞ்சுக்குப்
பகரு முதலாம் வடிவேதெப் படிநான் றீர்ப்ப துரையென்ன. 137

மற்றுங் கும்ப னுரைசெய்வான் மநத்துக் குருவம் வாதனையே
யுற்ற மநமென் றுரைக்குமுறை யுறுவா தனையின் பரியாயங்
குற்ற மெல்லாங் குவிந்திருக்குங் கூடா நானென் பதுதானே
செற்ற மநமா மரத்துக்குத் திகழும் விதையாந் தேர்வேந்தே. 138

வேறு.

ஆதியிலுண் டானவித னங்கு ரந்தா னநுபவமெய் யாயறுதி
யிடுவ தாகி, யோதுமுரு வன்றியிலே யுதிக்கு மத்தை யுரைசெய்வர்
புந்தியென வுரைத்த விந்த, நீதியுறு புந்தியெனு மங்கு ரத்தி னிறை

வளர்வைக் கொம்பைச்சங் கற்ப மென்பர், பேதமிவை யாதலாற்
சித்தம் புந்தி பெரியமர மென்பதெலாம் பேர்க டாமே. 139

இனையமர மெனும்பொல்லா மரத்தின் கொம்பை யெப்பொழு
தும் வெட்டிவே ரீர்த்து மாய்ப்பாய், வினையுறவா தனைப்பணைகள்
பலகாய் காய்க்கும் வேதரவா ளாலுள்ளே வெட்டின் மாயு, நினை
வறப்பற் றறமௌன மாகி வந்து நேர்ந்ததுசெய் வாருள்ளே நெஞ்
சைச் செற்றோ, ரனையமரப் பணைவெட்டற் கௌண மென்ப
ரதன்வேரை யறுத்தலே யறனன் றென்பார். 140

ஆதவினன் மிகநல்ல நெறியா லேநீ யந்தமர மரத்தின்வே
ரறுத்துச் சுட்டாற், சாதமுறு தென்றலுமே மன்னன் சொல்வான்
றனிமரத்தின் வித்தாகு மகம்பா வத்தை, மாதவனே சுடக்கனலே
தெனலுங் கும்பன் மறுத்துரைப்பா னுனொன் றெண்ணு கின்ற,
போதவிசா ரந்தானே மரந்தின் வித்தைப் பொன்றுவிக்குங் கன
லெனவும் பூபன் சொல்வான். 141

என்னுடைய புந்தியினு லெண்ணி னேனு னிச்சகநா னல்லமல
வுடனு னல்வ, துன்னுபொறி களுமல்ல மனமு மல்ல தொடர்புந்தி
யல்லவகங் கார மல்ல, வின்னசட மாதலினு லெனலுங் கும்ப
னிவையன்றேல் வேறுநீ யியம்புகென்ன, மன்னனுரைப் பானெல்
லாம் படைத்த ளித்த மாச றுசின் மாத்திரமாம் வடிவ னானே. 142

இந்தவடி வாமெனக்கோ ரேது காணே னிடர்மரத்தா ருவின்
விதையா மகங்கா ரத்தை, யுந்தும்வகை யறிகிலே னுந்த வுந்த
வோடிவரு மிதனுள் ளுடைந்தே னென்ன, வந்தணன்சொல்
வான்மன்னு கார ணத்தை யன்றியோர் காரியமுண் டாக மாட்டா,
முந்துமகங் காரகா ரணத்தை நாடி மொழியென்ன மீண்டரசன்
மொழிவ தானுன். 143

அகமென்னுங் குற்றத்தின் கார ணந்தா னறிவாகு மவ்வறிவிங்
கடங்கு மாறென், மிகவுங்காண் பவற்றிலறி வெழுத லாலே மெலி

கின்றேன் காண்பவற்றை விடுமா றெங்ஙன், புகல்கென்ன மீண் டந்தக் கும்பன் சொல்வான் போதத்தின் காரணநீ புகன்றுற் பின்னே, நிகழுங்கா ரணமுமகா ரணமுஞ் சொல்வே னினக்குநா னெனவதற்கு நிருபன் சொல்வான். 144

புகன்றவுடன் முதற்பொருளுண் டாத லாலே போதமுள தாமவைபொய் யாறு வில்லை, யகங்காரவே தநமென்னு மநத்தின் வித்து மடங்கிவிடு மெனவதற்குக் கும்பன் சொல்வா, னுகந்தவுட லாதியுள தேற்சித் துண்டா முடலாதி பல்பொருள்க ளிலாத போதி, னிகழ்ந்தவறி வெப்படியே நின்ற தென்று நிகழ்த்தென்ன மீண்டந்த நிருபன் சொல்வான். 145

கரசாண முதலங்க முதலாய்ச் செய்யுங் கருமபல முளதாய்க் கை யாளுங் காயங், குரவவில தெனும்படியென் னென்னக் கும்பன் கூறுவான் காரணத்தைக் கூடா தென்னில், விரவியகா ரியந்தானு மிலதா மந்த வேதநமு மயக்கமே மிகும யக்கால், வருவனவெல் லாமிலதா மேது வின்றி வருபொருள்பொய் யாங்கயிற்றில் வருநா கம்போல். 146

என்றலுமே யாதிமுத லுள்ள வேதா வியற்றியபல் படைப் பாகு மிந்த ஞால, நின்றவவ னிதற்குக்கா ரணமல் லாத நெறியே தென் றலுங்கும்ப னிகழ்த்து கிற்பான், றுன்றுசிருட் டியின் முன்பு வெறிதாய்ச் சாந்தந் தொடர்பிரம மேயுளதாய்த் துலங்கு மந்த, வொன்றொழிய விரண்டில்லாக் கார ணத்தா லுயர்வேதா காரணத்தை யுருனென் றோத. 147

காவலன்பார்த் தயர்பிரமம் வேதா வுக்குக் காரணமன் றேவென்னக் கும்பன் சொல்வான், கேவலமச் சுதமாநந்தஞ் சாந்தஞ் சுத்தங் கேடுபிறப் பிடர்தோற்றங் கிட்டா தென்றும், பாவனையற் றடிமுடிவற் றென்றாய்த் துன்றிப் பகர்வரிதாய் நாடரி

தாய்ப் பரம நிற்குந், தாவரிய வதுவெங்ங னேது வெத்தாற் சமைப் பவனுய்ப் புசிப்பவனுய்ச் சாரு மாறே. 148

ஆதலின வீதொன்றுஞ் செய்த தல்ல வடுத்துளவிச் சகமில்லை யறிவு மட்டு, மேதருசங் கற்பிதமே வேதா வாகு மெய்யாக வறி வன்றி வேறென் றில்லைச், சேதநமாத் திரத்துதித்த சிருட்டி யந்தச் சேதநமே வடிவென்று செப்ப லாகு, மோதியசெய் வோன் புசிப்போ னிரண்டு மல்ல னுறுபவந்தீர் பிரமமே யுள்ள வெல்லாம்.

திடமுறநிச் சயித்துள்ளே யஞ்ஞா நத்தைச் சிதைவித்தா லஞ்ஞாநஞ் சிதைந்த தேயாம், படர்கருமச் சிதைவின லன்றி மோகம் பகர்நிலைமை நழுவாது பகாஞ் ஞாந, மடைவுறத்தேய்ந் திடிற்பழைய நிலைமை நீங்கா வாதிபத மாமதன லாதி தேவன், றடமுறுசிற் சொருபத்தாற் றன்ம நத்தாற் றுணேநித் தலுஞ் சிருட்டி தந்து நல்கும். 150

ஆற்றுமதத் துவமான வதனற் றுனே யயனென்று சொலப் பட்ட தகில மாகித், தோற்றமிவை யுபசாந்த சொருப மாகுந் தோன்றலே யெனவொக்குஞ் சொன்ன வெல்லா, மேற்றனவே படைப்பவனின் மையினல் வைய மில்லையா மதனற்பல் பொரு ளேக் கில்லைத், தேற்றுகின்ற விவ்வகையா லறிந்தே னன்றுய்ச் சிவமானேன் வேறென்றுந் தெரியக் காணேன். 151

எனைத்தொழுதேன் பல்பொருளேக் கறிவி னலே யிப்படிப் பொய் யாய்த்தோன்றிற் றிப்போ தத்தா, னினைப்பிலுப சாந்தமாய் விசும்பி னைப்போ னிற்கின்றே னெனவிருப னிகழ்த்த லோடுந், தனைத்தருகும் பனுஞ்சொல்வான் றேச காலந் தடந்திசைசிந் தனைத்தொழில்கள் சார்ந்த வெல்லா, மனைத்தையுங்காண் பதுசகத் தைப் பிறித்துக் காண்கை யதுநெடுநா ளிற்சாந்த மாகிப் போகும்.

சாந்தமுற வழிவற்ற பிரம மாங்கே தனிநிற்கு மெனக்கும்பன் சாற்ற லோடும்; வேந்தனறி வுற்றுமிக விளங்கி நின்றுன் வெம்

மாயைக் குகைநின்று வெளியி லானு, னுந்திறமே பணதியறக் கும்பன் சொன்ன வதுகுறித்துத் தனதாமித் தற்ப தத்தே, காந்தி யுறச் சேர்ந்தொளித்தான் மனமுங் கண்ணுங் கட்டுரையற் றுனி றைந்தான் கணத்தி லாங்கே. 153

ஒருமுகுர்த்த மிருந்துணர்ந்து விழித்த லோடு முயர்கும்ப னுரைசெய்வா னுளதாய் நன்றாய், நிருமலமாய்ச் சுத்தமாய் மிக மெத்தென்று நிருவிகற்பங் களுக்கெல்லா நிலய மாகித், திருமிகு மிப் பதத்திலே சுகமாய்த் துன்பந் தீர்ந்தனையோ வுள்ளுணர்வு தெளிவுற் றாயோ, வருமயக்க மொழிந்தனையோ ஞேய நன்று யறிந்தனையோ காண்பனகண் டனையோ வென்றான். 154

நர்பால னதற்குரைப்பான் பகவ னேநின் னருளாலே பெருஞ் செல்வ நலத்தான் மிக்குப், பரமாகி யனைத்திற்கு மேலாய் விஞ்சு பதங்கண்டே னகோவகோ பரம ஞானந், திரமான பெரும்பெரி யோர் கூட்டங் கிட்டாத் தெள்ளமுதாய்ப் பேரின்பந் தேங்க நல்கும், வரமாநின் கூட்டத்தா லொருகா லத்தும் வாராத நல்லமுது வரப்பெற் றேனல். 155

அநந்தமா மிவ்வமுத மெனக்கு முன்னு ளரிதான தென்ன வெனக் கும்பன் சொல்வான், மநந்தனிலே சாந்தியாய்ப் போகங் கைத்து வன்பொறிமீண் டுளமடமை மாய்ந்த போதே, புனைந்கரு செங் குசும்பைநீ ரழுக்குப் போன புடவையிலே நிறமுறல்போற் புதல்வர் நெஞ்சிற், கனந்தருநற் குருவசநங் கலந்து நன்றுங் காய மலங் களுமாத்தின் காய்கள் போற்போம். 156

உள்ளத்தி லிருமையென வொருமை யென்ன வுன்னுதலஞ் ஞானமிவை யொழிதன் ஞானந், தெள்ளுற்ற கதியுமது தெளிந்து முத்தி சேர்ந்தனைசித் தமும்விட்டாய் செல்வ னுகித், தள்ளுற்ற மலநீங்கி மௌனி யாகித் தனிநிற்பா யென்றலுமே தமையு ணர்ந்

தோர், கொள்ளுற்ற தொழிலெல்லா மநத்த தன்றே கொள்மநமன்
றியினடக்குங் கொள்கை யென்னே. 157

உரையெனமன் னவன்கேட்பக் கும்பன் சொல்வா னுள
மென்று சொன்னதுவே ருென்று மன்று, கரையறுபல் பவந்
தருவா தனையே யுள்ளங் கண்டதனை யறிந்தாலக் கவலை யில்லை,
வரையறக்கண் டவர்கருமங் களிற்ச ரிக்கும் வாதனைதான் மறுபிறப்
பை வழங்கா தந்தப், புரைமநஞ்சத் துவமென்பர் சித்த மென்று
போதமில்லாச் சித்தத்தைப் புகல்வ ரன்றே. 158

ஞாநமநஞ் சத்துவமே யென்று சொல்வர் ஞாநமிலா தார்சித்த
நடையி னிற்ப, ரீனமறு ஞாநிகள்சத் துவத்தே நிற்ப ரேதொன்று
சுவர்க்கம்வீ டெல்லா நல்கு, மானவையெல் லாம்விட்டுச் சமமாஞ்
சோதி யானுலே தாகுதியிங் கதுநீ யாகு, மூனமுறு பொருளொன்
றுங் கைக்கொள் ளாம லுள்ளமசை வறநிற்பா யுறுதி யாக. 159

நெஞ்சிலா தவர்பிறவி நெடுந்தூ ரம்போ நீணிலத்திற் றூய
ரொன்று நேர்ந்த தல்ல, வஞ்சுமந மசைதலிலுண் டான தாகு
மசைவசையா மைகளிரண்டு மயிக்க மாக்கிச், சஞ்சலமாற் றிச்சித்
தாம் படிநில் லென்னத் தாணிபன்சொல் வானயிக்கஞ் சார்வ
தெங்ஙன், விஞ்சுமசை வசையாமை யிரண்டு மொன்ருய் விடும்படி
சொல் லெனக்கும்பன் விளம்ப லுற்ருன். 160

உவரிநீர் போலுலகெல் லாமொன் ருன வுணர்வுமாத்
திரமதுதா னுற்ற புந்தி, கவர்வுறுத லாலசையு நிறையு நீர்தான்
கல்லோலத் தாலசையுங் கணக்கே போலச், சிவமுணர்வு மாத்திர
மெய்ப் பிரம மாதித் திரள்பெயராய்ப் புகல்பொருளைச் சகமென்
றெண்ணித், தவமறுபே தையர்காண்ப ரறிவு தானே சற்றசைந்த
மாத்திரத்தாற் சருக்க முண்டாம். 161

உண்டான சிருட்டிதா னன்ருய்ப் பார்க்கி லொழிந்துபோ
முறுதியா யுண்ரா வாற்ருற்; கண்டார்கள் கயிற்றிலே பாம்பென் பார்

போற் காட்சியுறுங் கலைநூலாற் கற்ளுேர் சார்வாற், றண்டாத பரிச யத்தாற் சிலகா லத்திற் ருவுமந நிர்மலமாய்ச் சசிபோ ளிற்கிற், பண்டாய வநுபூதி மயமாய்த் தானே பாக்கியவான் களுக்கிந்தப் பார்வை தோன்றும். 162

வேறு.

உலகத னுதய நாச முண்மையை யுரைத்தே னித்தை
நலனுறச் செய்து நாடி நழுவுரு நயந்த வண்ணம்
விலகலற் றெதிர்ந்த வெல்லா மெய்ப்பதத் தாக்கி நிற்பாய்
திலகமாஞ் சொன்ன நாடு சேர்வனுன் கால மீதே. 163

அயனுல கினும்பொன் ஞடெற் றங்கெனைக் காணு னென்னிற்
பயமுற முநியு மெந்தை நாரதன் பரிந்த மைந்த
ருயர்குரு முநியப் பண்ண வொருசற்று மொண்ணு மன்னு
மயலறப் பேத நீக்கி மகிழ்ந்திதை நோக்கி நிற்பாய். 164

போதுநா மென்னக் கும்பன் மறைதலும் பூப னெண்ணுஞ்
சீதளஞ் சுத்தஞ் சாந்தந் தெள்ளமு தூற லொக்கு
மீதொரு பதவி யென்னு ளிருந்தவா றென்னே யென்னே
கோதிலென் சத்து வத்திற் குளிர்வுறச் செய்த தென்ருன். 165

ஆனவா தனைக ளின்றி யசைவற்றுப் போா ஞகி
மோநமாய் நிருவி கற்ப மாய்ப்பற்று முற்று மற்ற
தாநமே யழுந்திக் கற்போற் றருவைப்போற் சுவர்போ னின்ருன்
போனகு டாலை பண்டைப் பொற்கொடி வடிவ மெய்தி. 166

அம்பரத் தேகி யந்தப் புரம்புக்கா ளவநி காவ
னம்பர மென்று காத்தா ணடந்தது வருட மூன்று
கும்பனுய்க் கணவன் காட்டைக் குறுகியாங் கவனைக் கண்டா
டம்பமாய் நிருவி கற்ப சமாதியி லிருத்தல் கண்டு. 167

அறிவிப்போ மென்று சிங்க நாதத்தா லார்த்த மட்டிற்
பொறியுற்ற தில்லை மேன்மேற் றெரிந்திவள் பூபன் றன்னை
மறியத்தள் ளுதலும் வீழ்ந்து மறிந்திலன் மற்றென் னென்று
நெறியுய்க்குங் கும்பன் மேனி நேரிழை நினைப்ப தானாள். 168

உத்தமன் றற்ப தத்தோ டொன்றினன் வியப்பி தம்மா
வித்தனி யுடலைப் பார்த்தா லிதயத்தி னறிவின் வித்தாஞ்
சத்துவ சேட முண்டேற் றலைவனைப் புணர்வ மெல்லென்
றத்தியால் வாழ்து மன்றே லங்கனை வடிவம் விட்டு. 169

மறுபவ முருத வண்ண மாசறு பதத்தைச் சேர்து
மறுதியீ தென்ன வுன்னிப் பரிசத்தால் விழியா லன்னா
ளுறுமறி வுக்கு வித்தா யுற்றசத் துவசே டந்தா
னிறுதியற் றிதயந் தன்னி லிருந்தது கண்டா ளென்ன. 170

கேட்டலு மிராமன் சொல்வான் கிளர்மநந் தீர மாய்ந்து
காட்டலோட் டம்போற் சுத்தக் கண்ணிலே கலந்து ளோருக்
கீட்டுசத் துவசே டந்தா னெங்ஙனே யிருக்கு மென்ன
வாட்டமின் ஞாந மிக்க வசிட்டமா முனிவன் சொல்வான். 171

வித்தினுட் பூவுங் காயு மேவல்போ லிதயந் தன்னிற்
சித்தின்கா ரணம தான சத்துவ சேட நிற்கு
முத்தனாய் மநமி றந்தான் மொய்யுடல் போகா போகத்
தொத்தவின் பத்துன் பங்கள் சார்தலற் றொருமைத் தாகும். 172

ஆதலா லிராம னேயவ் வணங்கனா ளந்த மெய்விட்
டேதமி லாதி யந்த மின்றிய வறிவி னுட்போய்
மேதகு சத்து வஞ்சேர் வேந்தனெஞ் சசையப் பண்ணித்
தீதிறன் னுடலின் மீளச் சேர்ந்தனள் கூடார் புட்போல். 173

கும்பன்மெய் யாகிப் பூமே லிருந்தனள் குழல்போற் பாடத்
தம்பமா யிருந்தோன் மெய்யிற் சத்துவ குணஞ்சார் போதந்
தும்பிநேர் பாட்டைக் கேட்டுப் பையப்பையச் சூரி யன்சே
ரம்புயம் போல்வி ரிந்தங் கவன்மந நிலையா யிற்றே. 174

கண்டனன் கும்பன் றன்னைக் களிப்புறு மநத்த னாகித்
தண்டலி லருளா லென்னை வாழ்விப்பான் றானே வந்தான்
பண்டையக் குரவ னென்று பரவிநன் மலர்தூ யேத்த
மண்டல வேந்தன் றன்னை மற்றவ னேக்கிச் சொல்வான். 175

இங்குநின் றகன்ற நாடொட் டின்றள வுன்பாற் சித்தம்
பங்கற நின்ற தண்டர் பதியுநின் கூட்டம் போல
வங்கித மல்ல வென்ன வண்ணலே வாழ்ந்தே னின்றுற்
றுங்கமா யுற்ற வின்ப சமாதியிற் றுயரந் தீர்ந்தேன். 176

நிருவிகற் பத்தி லின்ப நிறைந்தபொன் றட்டு மில்லை
யொருமையுற் றதனை மேவி யும்பரி லிம்பர் தன்னிற்
றிரிவனென் றரசன் சொல்லக் கும்பனுஞ் செப்பு கிற்பா
னரியவா நந்த வாழ்வி லயர்வெலா மறவாழ்ந் தாயோ. 177

பேதமே வடிவ மான துன்பங்கள் பேதித் தாயோ
போதல்போ தினிதாஞ் சங்கற் பத்தினிற் பூண்ட வின்பந்
தீதென வேருஞ் செற்றுச் சமதரி சநமுற் றாயோ
யாதினும் வீடு பற்றற் றியைந்தசெய் தின்புற் றாயோ. 178

எனலுநின் னருளாற் பங்கிற் றெய்வத்தா லெலாம்விட் டப்பான்
மநநிலை நின்றேன் மாயைக் கரைகண்டேன் வருபே றெல்லாங்
கநமுறப் பெற்றேன் கேட்கக் காணவேண் டுவதொன் றில்லை
யநவர தமுநி றைந்தே னயர்வற்றேன் பிறவி யற்றேன். 179

பயமற்றேன் மோக மற்றேன் பற்றற்றேன் சமமாய் நின்றே
றுயர்வுற்றே னெல்லா மானே னெருசெய லற்றேன் விண்ணு

ளியலொத்த தெளிவாய்ச் சாந்த மெய்தினே னென்றான் மோகச்
செயன்முற்றுங் கடந்த சிந்தைச் சிகித்துவ சப்பேர் மன்னன். 180

அவ்வகை யிரண்டு பேரு மாத்தும தத்து வத்தின்
செவ்விய விசாரத் தாலுந் தெளிதரு மொழிக ளாலுந்
தவ்வறு நேய மிக்கோர் தம்மிற்றா முணர்த லுற்று
வெவ்வந மோடை குன்று வேறற வெங்கும் வாழ்ந்தார். 181

இயலறி வன்பு செய்கை யிணையற்றோர் பற்றும் வீடு
மயலற விட்டுத் தென்றற் கசைவுறா வடகுன் றொப்பார்
பயிலுட லொருகாற் றாளி படர்விப்பா ரொருகா னீறு
வியனுற வணிவ ரோர்காற் சந்தந விரையே சேர்வார். 182

சிறிதுநா ளுடனே வாழ்ந்து தேமொழி வேந்தை நோக்கிப்
பிறிவுறு கணவன் சால வுதாரமாய்ப் பீடை யற்றான்
செறியெழில் விடலை யாகுஞ் செல்வம்பூ மனையு மெல்லாம்
வறியபோ லவமாய்ப் போமால் வாழுந ரிலாமை யாலே. 183

இழிவறு ஞாநம் பெற்றோ ரியல்புறத் தானே வந்த
தொழிலுற விடுவ ரென்னி லுண்மையை யுணர்ந்த தென்னும்
வழிபடு மன்ன னம்பான் மணஞ்செயற் கான தொன்றை
யழிவறு மறிவி னாலிங் கமைத்துமென் றுளத்தி லெண்ணி. 184

தலைவனை நோக்கிச் சொல்வாள் சதமக னுலகி னின்றோர்
நிலைபெற விழாவுண் டாங்கே நேருநா ரதரோ டியானு
முலைவற நிற்றல் வேண்டு முயர்விதி வலியார் வெல்வர்
மலைமிசை யிரவி போங்கால் வருவனிவ் விரைவி லிங்கே. 185

நீங்கரு முணர்வி னோடு நீயிவ ணிருத்தி யென்றோர்
தேங்கமழ் மலரின் கொத்தைச் சிகித்துவ சனுக்கு நல்கி
யோங்கினள் விசும்பி லேகி யவன்விழி யுறாத மட்டிற்
றாங்கிய கும்பன் மேனி தவிர்ந்துதன் வடிவ மானாள். 186

இந்திர னிருக்கை யேய்ந்த வில்லம்புக் கறியா வண்ண
மந்திர நெறியின் மன்னன் காரிய மரபிற் செய்து
சந்திர வதநி மீண்டுங் கும்பனுப் தலைவன் றன்பால்
வந்திழி வுற்றுச் சால வாடிய முகத்தள் போலாய். 187

பனிபடர் மதிய மென்னப் பங்கய மென்னச் சோம்பி
நனிமுகம் வாடிச் சிந்தை யயர்விலா ணணுக லோடும்
புநிதநா யகனு நோக்கிப் பொருக்கென வருந்தி யெந்தாய்
துனியுறு கின்றூர் போன்ருய் துயரமென் றடைத்தி யென்ரு.188

தத்துவ ஞாந முற்ருேர் தளர்வுருர் மகிழார் கஞ்சப்
பத்திரம் பயின்ற நீரிற் பற்றுமோ வென்ற லோடுங்
குத்திர மேனிக் கும்பன் குழம்புறு குழலின் பண்போற்
சித்திர மாக வொன்றைச் சிகித்துவ சனுக்குச் செப்பும். 189

உடலுள வளவுங் கன்மேந் தியத்துட னுறல்செய் யாரேற்
றிடமுறச் சமசித் தத்தே செறிபவ ரறிஞ ரல்லார்
சடர்களே யாவர் தானே சார்வுறு மவத்தை வென்று
விடநினைத் தறிவி லாதார் வீணிலே மெலிந்து நைவர். 190

திலமுள வளவும் போகாத் தைலம்போற் றேக மட்டும்
பலபல வவத்தை நீங்கா பற்றற விவற்றைத் தீர்ப்போ
ரலகிலா விண்ணை வாளா லறுப்பவ ரொக்கு மன்று
மலவுட லவத்தை நீக்கி லதற்கொக்கும் வாழ்வுண் டாமோ. 191

வேறு.

ஒருபான் ஞாநேந் தியத்துடனு மொருபால் கன்மேந் தியத்துடனும்
வருமா றுளதா முடலுக்கு மலரோன் முதலா மெல்லோருந்
தெருள்பான் மையரா யினுந்தேக வவத்தை தீரா தென்றுணர்கை
யருகா நின்று வழுவாம லறுதி யான விதிநெறியே. 192

கற்ற வறிஞ ரறிவில்லோ ரெல்லாங் காணப் படுபொருளா
யுற்ற படியால் விதிவசத்தே யுறுவர் கடலி லுறுநீர்போ
னித்த மறிஞர் சமபுந்தி நிலையாற் கைகா லசைதலினுற்
பெற்ற வுடலம் விடுமளவும் பெயரா விதியைப் பின்செல்வர். 193

இரங்கித் தேம்பி யறிவில்லோ ரின்ப துன்பங் களின்மூழ்கிக்
குரம்பைத் திரள்க ளெடுத்தவற்றுற் குறையா விதியைப் பின்செல்
நிரம்பப் புகன்றெ ஞன்பட்ட நெறியிற் றுன்பந் தனைக்கேளா [வர்
யரங்கட் குவமை யார்துன்ப மன்பர்க் குரைத்தா லாறுதோ. 194

கொத்தார் மலர்தங் துனையகன்று குதித்து விண்போய்ப் பொன்னுலகின், மெய்த்தா தையைச்சேர்ந் திந்திரன்முன் மேவி மீண்டிங் குறவெண்ணித், தத்தா விண்ணின் றிழிந்திரவிக் கருகே யூற்றின் றடைகெறியா, வித்தா ரணிசேர் வுறவருவா னெழிலிப் புத்தி வேறுதலும். 195

ஏக லுற்ற துர்வாச னென்னு முனிவனை யெதிர்கண்டு
மாக மட்டி லடிதொழுது மற்று முனிவன் றனைநோக்கி
நீக றுத்த துகிலுடுத்தாய் நெறிதீர் பிறனை விழைபவர்போற்
போக லுற்று யென்றவெனைப் போத முனிவுற் றம்முனிவன். 196

இதுசொல் லுதலா லிரவுதொறு மெழிலேர் திழையா யிருத்தி யென, முதுவன் சாப முரைத்தலுமம் மொழிகேட் டிரங்கி மூகிதாளாம், பதுமம் புகழ்ந்து வேண்டுதற்குப் பார்த்தே னிமைப் பின் முனிமறைந்தா, னதுகண் டுளனொர் திங்களைந்தே னணங்காந் தன்மை யகலாதே. 197

குருவா னவர்மா தவர்முதலோர் கூட்டங் காணக் கூசாம
லிருள்வாய் மகளா யெவ்வண்ண மிருப்பே னெனவுஞ் சிகித்துவசன்
வெருவா தொழிநீ புலம்புதலான் மேவு பயனென் விதிவலியால்
வருமே வருக வுடற்கல்லான் மாசி லறிவிற் பற்றுதே. 198

அறிவா லுயர்ந்த நீதுன்பத் தமிழ்ந்தற் குரித்தோ வறிவற்ற
சிறியா ரன்றோ வுள்ளயர்வா ரென்று தேற்றித் தம்மிற்றும்
பிறியா வின்ப துன்பங்கள் பிறிவற் றிருந்தா ரவ்வளவி [தான்.
னெறியார் கும்பற் கணங்குருவ நேர்வான் போல்வெய் யவனொளித்

அந்தி வரலு நியமங்க ளாற்றி யிருந்தா ரதுகாலை
முந்து மரசன் முகநோக்கி மொழிவான் கும்பன் றளர்ச்சியொடு [ல்
மிந்த வுடல்வீழ் வதுபோன்மே லெழுதல் போனின் றியங்குதல்போ
வந்து பெருநா ளெடும்பெண்மை மன்னு மென்னை வளைந்ததுவே.

கூந்தல் வளர்கின் றதுபாராய் கொங்கை யெழுகின் றதுபாராய்
சேர்ந்து வருமே கலைபாராய் செறியு முன்பி லுண்டான
காந்தை வடிவா னதுபாராய் காவ லாவென் றிரங்கினனுய்ச்
சாந்த முறுகும் பனுமிருந்தான் றலைவன் றானுந் தளர்ந்திருந்தான்.

ஞாந வானீ விதிநெறியை நன்று யறிந்தா யுறற்பால
தான துற்று லிரங்கலையென் றரச னுரைப்ப வுயர்கும்பன்
றானுஞ் சொல்வா னினிச்செயலென் றப்பா விதியை யார்தவிப்பார்
மேனி பெண்மை யாயிரவு மேவக் கடவே னென்றுரைத்து. 202

பாய லொன்றி லவ்விரவு பயின்றார் வெறிதே விடியளவின்
மேய பெண்மை தனைவிட்டு மீண்டு கும்ப வடிவாக
வேய விவ்வா றிராப்பெண்ணு யிரவு போனற் கும்பனுமா
யாய கந்நி யழியாம லமர்ந்தாள் சின்னாட் குடாலை. 203

அன்னாள் கும்ப மேனியளா யரசன் றனைப்பார்த் தொருபகலின்
மன்னு நித்த மிராப்பெண்மை வருமேன் மடவா ரியல்பின்றி
யென்னு ளிருப்ப தொருகணவ னெய்த வேண்டு முனையலது
பின்னு ரையுமூ வுலகினுமியான் பேணே னன்பாற் பெருமையினல்.

மனைவி யாக விவாகத்தால் வரிப்பாய் நிசிக்கெப் போதுமெனை
யினைய தியற்றிற் நீங்குநல மிரண்டு மில்லை யெனலோடு

மனைய விருப்பே நன்றென்று னரச னதுகேட் டலுங்கும்பன்
புனையு நலத்தா வணிமாதப் புராணை யின்று புரவலனே. 205

திங்க ளுதிக்குங் காலத்திற் செய்க விவாக மெனச்செப்பி
யங்க ணரச னுடமேவி யணியு மணிப்பூண் சந்தநங்க
டுங்க மலையிற் கொடுவந்து தூய்நீர்க் கங்கை தனின்மூழ்கிப் [ற்றி.
பொங்கு நெறியாற் கடவுளர்தென் புலத்தோர் தவத்தோர் கழல்போ

கிரியை யொழியார் பலம்விரும்பார் கிளர்கற் பகநல் கியவெண்பட்
டுரிய தெனச்சாத் தினர்வெய்யோ னுயர்ந்த வெற்பி னிடைச்சென்
பெரிய விந்து தோன்றுதலும் பேசு முறைமைக் கிரியைகளா [ருன்
லரிய நியமஞ் செய்துமணஞ் செய்தா னரச னப்போது. 207

வேறு.

இவ்வா றுயர்மந் தரவெற் பிடையே மணஞ்செய் திவர்கள்
கவ்வா வின்பந் துய்த்துக் கடஞ்சூழ் வநங்க டோறுஞ்
செவ்வாய் மயின்மன் னவனுந் திரிந்தார் திநமும் மூன்றில்
வெவ்வா ளரசன் றுயிலும் வேலை தனிற்கு டாலை. 208

சென்று சென்று மன்னன் றேச நீதிந டாத்தி
யொன்றும் பாய றன்னி லொழியா தவள்போன் மீளு
மன்றன் மதனி கைப்பேர் மனைவி யான மாது
நின்ற சிலநா ளிற்பின் னெஞ்சி லொன்றைநி னைப்பாள். 209

உற்ற போகங் களிற்பற் றுென்று திவனுக் கென்றுந்
துற்ற போகங் களினுற் சோதிப் போமென் றெண்ணிக்
கற்ற மாயை யாலே கைத வமொன்றி ழைத்தாட்
சுற்றுந் தேவர் நெருங்கச் சுரர்கோன் வநத்திற் றேன்ற. 210

வந்த மகவான் றன்னை மன்னன் கண்டுவ ணங்கி
முந்து பூசை செய்து முதல்வ நீயிங் கெய்த

வெந்த வறமுன் செய்தே னென்ன விமையோ ரிறையு
மந்த மன்னை நோக்கி யன்பா லிவ்வா றறைவான். 211

உனது குணத்தி னலத்தா லும்ப ருடனுன் வந்தேன்
கநக வுலக முமக்கே கடவ தாமங் குள்ளோர்
நினது வரவு நோக்கி நின்று ரரம்பை முதலோர்
வநச வதந மலர மார்த்தாண் டனைப்போல் வருவாய். 212

கற்ப மளவு மிருந்து கடவுட் போக மெல்லாஞ்
சிற்ப மன்றித் துய்க்கச் சிவங் முத்தி மன்ன
வற்பந் தாழா தடைவா யழைப்பான் வந்தே னென்ற
சொற்பங் கிகளைக் கேட்டுத் தூய மன்னன் சொல்வான். 213

அங்குந் துறக்கத் தின்ப மனைத்து மறிவே னெந்தா
யிங்கென் றங்கென் றில்லை யெங்குஞ் சுவர்க்க மெனக்குப்
பொங்குஞ் சுகமே யெங்கும் பொன்னு டதனல் வேண்டேன்
றங்கும் பதமே வென்றே சற்றும் பற்றற் றுரைப்ப. 214

மடங்கி யமரர் கூட்டம் வந்த வழியே போகத்
தொடங்கு மாயை பலவாற் சோதித் திடவு நெஞ்ச
மடங்கி விடுதல் கண்டு மயலோர் மாயை யாலே
தடங்கண் மயில்கு டாலை தனிச்சோ தனைசெய் தனளே. 215

திங்க ளுதித்த வளவிற் செபித்துக் கங்கைக் கரையிற்
றுங்க வரச னிருப்பத் தோகை யன்னுள் புறம்போய்க்
கொங்கு மலரா னிறைந்த கோல வமளி யொன்றிற்
றங்கு மொருதூர்த் தனைத்தான் சங்கற் பித்துப் புணர்ந்தாள்.

சந்தி முடித்து மாதைச் சார ரேறுந் தேடி
வந்த வழியிற் புணர்ந்து மகிழு மவரை நோக்கிச்
சிந்தை விகற்ப மின்றிச் சித்த மகிழ்ந்தங் கவரை
முந்த விடையூ றறநீர் முயங்கு மென்று போனன். 217

போகி மறைந்து முகூர்த்தம் போன பின்ன ரிவளும்
வேகி யாது போனன் விகற்ப மின்மை காண்பா
னேகி யமளித் தொடர்ச்சி யெழிலும் வடிவுந் தோன்ற
யோகி முன்னர் நின்று ளொதுங்கி நாணி வணங்கி. 218

வேறு.

மதநி கைப்பெயர் மங்கையு மிவ்வணம் வருந்தி
விதந முற்றனள் போனிற்ப வேந்தனுஞ் சமாதி
யதனை யுற்றிருந் தானறி வுற்றனன் பார்த்துக்
கதம றக்குளிர் புந்தியான் மெல்லெனக் கழறும். 219

விரைவில் வந்ததென் முயங்குறு மகிணனை விட்டு
நிரைவ னூக்கையாய் மீண்டுபோ யின்பமே நிறையென்
றுரைசெய் காலையின் மதநிகை யுரைசெய்வா ளுயர்ந்த
புரையி லாதவர் பிழைபல பொறுப்பது புகழே. 220

மாத ராரிய லளவறு பேதமாய் மருளுங்
காத லோவெனி லெண்மடி கருமமொன் றறியா
ராத லாலென தரும்பிழை பொறுத்தரு ளென்னப்
போத பாரகன் மதநிகைக் கிவ்வுரை புகன்றான். 221

வானி லேமர முளைக்கினு முநிவென்கண் வாரா
தான மேலவ ரிகழ்வரொன் றன்னமே யுன்னை
மேன யந்துபெண் ணெனவிரும் பலனென்று வேந்த
னீன மில்லதோர் சமமுறு பார்வையோ டிருப்ப. 222

கண்டு நின்றகு டாலையுங் கருத்தினு ளினைவாண்
மண்டி ராகமுங் கோபமும் வேறற மாய்த்தான்
மிண்டு போகமுஞ் செல்வமு மேவிடா திவனைத்
திண்டி றற்புயன் ஞானத்தின் கரைகண்டு சேர்ந்தான். 223

மறைதன் மட்டினி மதநிகை வடிவினை மாற்றி
முறைமை யானகு டாலையாய் முன்னிற்ப னென்று
மிறைவன் முன்புகு டாலையாய்த் தோன்றவு மிவளைப்
பொறையி னின்றவ ேனக்கிநல் வியப்பொடு புகலும். 224

வடிவும் வார்த்தையு மொடுக்கமு மற்றுள குணமு
முடிவி லாதகு டாலைபோற் றோன்றினை முன்னே
நெடிய கண்ணிநீ யாரென நிருபதி கேட்பக்
கடிம ணஞ்செய்கு டாலைநா னெனமற்றுங் கழறும். 225

கும்ப வேடமு மதநிகை வேடமுங் கொடுநா
ணம்ப னேயுனை யுணர்த்தினேன் ஞாநத்தி னிலைமை
யிம்பர் மாயையாற் சோதனை பண்ணினே னிவற்றைக்
கம்ப மின்றிய தியாநத்தாற் காண்குதி யென்ன. 226

ஞாந யோகமாந் தியாநத்தா னரபதி நோக்கி
மான ராச்சியந் துறந்தது முதலிவண் வந்து
தான லஞ்செய்கு டாலையாய்த் தோன்றிய தளவர்
யீஈ மின்றியே யாவையு முணர்ந்தன னிருந்து. 227

தியாந நீங்கினன் புளகமே நிறைந்தனன் றிண்டோ
டயாவு மன்புமீ தென்னெனத் தயங்குகு டாலைக்
குயாச லந்தழீஇ நெடிதிருந் தொன்றுமேற் கூறு
னியாய மன்னவ னுநந்தத் தமிழ்ந்தன னிமிடம். 228

மடியின் மேலந்த வஞ்சியை வைத்தவ னுரைப்பான்
முடிவில் பேரிருட் குகைநிகர் மோகநின் றென்னை
நெடிய புந்தியா லுய்த்தனை யுனக்கெவர் நிகரோ
கொடிம ருங்குலா யியற்றுகைம் மாறுமொன் றுளதோ. 229

வருப வக்கடற் கரையிலாய் நிராசைஸ்ய மருவுந்
தரும மேயிதற் கென்கைம்மா றுளதெனச் சாற்றத்

தெரிவை யோதுவா ளுணங்குபல் கிரியையிற் றியங்குங்
கருமங் கண்டுனை யுய்விக்க நாடினேன் கவன்று. 230

நீயி தற்கெனை மேம்பட நிகழ்த்துவ தென்னே
மேய புன்றொழி னினைவுகள் சங்கற்ப விகற்ப
மாய தெத்தனை யவையெலா மகற்றினை யன்றோ
தூய நாயக வென்னலும் வேந்தனுஞ் சொல்வான். 231

ஐய மற்றன னுசையற் றேன்பிறி வற்றே
னெய்ய விண்ணையொத் தேன்பொருள் வடிவமாய் நடங்கேன்
செய்ய லாவதோர் கிட்டையுற் றேன்சித்த மகிழ்ச்சி
வெய்ய துன்பமொன் றிலனிது வதுவென விளங்கேன். 232

சோதி மண்டலத் தெழுந்ததாய்ச் சுவரினிற் படாமன்
மீது விஞ்சுதல் குறைதலற் றிருப்பதோர் விளக்கந்
தீதி லாவெனக் குவமையாஞ் சகத்தினைத் தீர்ந்து
யாது மேவிவிண் ணிற்பதற் கிணையொத்து நின்றேன். 233

உண்டெ னுந்தன்மை யென்னுரு வேறென்று முரைக்கக்
கண்டி லேனத னுலெனைக் கருணைசெய் குருநீ
முண்ட கப்பதந் தொழுதன னென்றவன் மொழியத்
தொண்டை வாயவண் மேற்செயல் சொல்லுதி யென்றாள்.234

பற்று வீடிலன் படிகமேற் பாயொளி யென்ன
நிற்ற நீசொன்ன செய்குவ னென்றன னிருப
னுற்ற தீதெனிற் பேதைமை யொன்றையு மொழித்து
மற்றை முன்னுள வியற்கையி லிருப்பது வழக்கே. 235

சிறிது காலநா மிவ்வகை யிருந்துபின் றேகம்
பிறியு நாளந்த நிலையினைப் பெறுதுமா லென்ன
நெறிசெல் வேந்தனு மியைந்தன னேரிழை யெழுந்து
குறிகொள் சங்கற்ப விதியினு லிவையிவை கொணர்ந்தாள்.

ஏழு வாரிநீர் மணிக்குடத் திவனீ ராட்டிக்
கேழு லாமணித் தவிசிடைக் கிளர்வுற வைத்து
வாழி யென்றன ளளவறு சேனையும் வகுத்தாள்
வேழ வெம்பரித் தேரொடும் வீரரால் விளங்க. 237

இனைய வேலையி லிதயமொத் தின்பமே யியற்று
மனைய தேவிசூ டாலையு மரசனு மெழுந்து
புனையும் வேழமேற் கொண்டனர் பொன்னகர் நோக்கி
வினைசெய் நாற்பெரும் படையொடு மகிழ்வுற மீண்டார். 238

புரியை நண்ணலு நகருறு தானைபொம் மென்று
வரிசை யாலெதிர் கொளவிரு தானையும் வயங்கப்
பரிவி னண்ணினர் நகர்பதி னாயிரம் வருடந்
தெரிவை யோடிருந் தழிவிலாப் பதம்பின்பு சேர்ந்தான். 239

வள்ள லேயிந்த மரபினுற் றெழில்களின் மருவித்
துள்ளு மின்பமிற் சாந்தமெய் போதினுந் தொடர்ந்தாற்
றெள்ளு போகமும் வீடுமுண் டாமென்று தெளிந்த
வுள்ள மாதவ வசிட்டமா முநிவா னுரைத்தான். 240

**6—9.** சிகித் துவசன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1844.



## 6—10. கசன் கதை.

தெளிவின் மிக்குயர் சிகித்துவ சன்கதை செப்பின னிவ்வாறே
யளிய நிற்றியா லருந்துய ரனுகலே யனையவ னெறிபோலக்
குளிர்மு கச்சுரர் குருமக னுணர்ந்தன னதுகுறித் துணர்கென்ன
வெளிப்ப டவவ னுணர்ந்துள நெறியினை விளம்புதி யெனக்கேட்
[டான். 1

குருசில் கேட்டலும் வசிட்டனங் குரைசெய்வான் குருமகன்
கசனென்பான், றெரிப தத்தொடு பதப்பொரு டெரிந்துளோன்
றேவர்தே சிகன்முன்போய், விரிபி றப்பெனுங் கூட்டினின் றுயி
ரெனும் வெங்கரி புறம்போகைக், குரிய வாறெது கூறெனக்
கேட்டலு மும்பர்மந் திரிசொல்வான், 2

அநத்த மாமக ரங்களுக் குறையுளா யகன்றவிப் பவவேலை
கநத்த தோர்சக லத்தியா கத்தினற் கடக்கலா மென்றோதத்
தநத்தை யாதியாஞ் சகலமும் விட்டனன் றனியனாய்க் கசன்சென்று
வநத்தின் மேவின னெட்டியாண் டிருந்தனன் மறித்தவன் பிதாவந்
[தான். 3

வந்த தந்தையை வணங்கியே சகலமு மாற்றியே யெட்டாண்டு
சிந்தை யற்றிருந் துந்துயர் தீர்ந்திலே னிமவனே யென்னென்று
நொந்து கூறலுஞ் சகலமு நீக்கென நுவன்றுமீ ளவும்போனன்
தந்தை போனபின் வற்கலை முதலிய சகலமு மறநீத்தான். 4

பாநு மாமதி முகிலுடு முதலிய பற்றறு சாற்கால
வாந மொத்தனன் றமியனாய்க் கசன்சென்று வநத்தின்மீ ளவுந்தா
யான வன்றனை யெய்தின னன்பினு லடிதொழு தயர்வெய்தி [தை
யான னிந்துள வற்கலை முதலிய யாவையு மறநீத்தேன். 5

யாது நீத்துமென் பாலிலைப் பாறிலே னினிச்செய லேதென்னத்
தாதை கூறுவான் மநத்தையே யுலகெலாஞ் சகலமென் றுரைசெய்வ
ராத லான்மந மகற்றுதல் சகலமு மகற்றுத லதனாலே
கேத நீங்குமென் றகன்றனன் மந்திரி கிளர்கச னிதுசெய்தான். 6

சித்த மேதென நாடின னறிந்திலன் றேகமா திகளெல்லாஞ்[ன்னச்
சித்த மன்றெனிற் குறைசெயா விதனையான் றீர்ந்துமென் பயனெ
சித்த மேதெனச் சுரர்குரு விடத்துறச் சென்றுகேட் டலுமன்னோன்
சித்த மாவது நானெனச் செப்புவர் சித்தத்தை யறிவுற்றோர். 7

உயிர்க ளியாவையு முள்ளுற நானென வுன்னுபா வனைதானே
செயிர்செய் சித்தமென் றுரைத்தலு மிங்கிது தீர்ப்பது மிகவன்பாம்
வயிர மாவது தீர்வதெவ் வகையென மறித்துமந் திரிசொல்வான்
வெயில்செய் துன்பமோர் சிறிதிலை யகங்காரம் விடமிக வெளிதாகும்.

அலர்க சக்குமுன் னிமைக்குமு னகங்கா மகற்றுத லெளிதாகும்
பலவு ரைப்பதென் னேகமா யநந்தமாய்ப் பரமசித் தேயாகிக் [குஞ்
குலவு சுத்தமாய் விண்ணிலு நுண்ணிதாங் குறைவிலாப் பொருணிற்
சலந மற்றதைப் பாவனை செய்துப சாந்தனு யிடர்தீர்வாய். 9

சுத்த மித்தையே யாதலி னகங்காந் தொலைந்துபோ மெய்யான
தத்து வந்தனை நினைதலாற் சித்திலே சாற்றகங் காமெங்கே
மெத்து நீரிலே புழுதியுங் கலிலே மேவுதோ யமுமுண்டோ
நித்த ரூபத்தை நினைத்திவ னுனெனு நிச்சய மறநிற்பாய். 10

திக்குங் காலமு முதலிய வசத்துறு சிறுவடி வறத்துன்பந்
தொக்க வன்னவற் றுன்மறை யாமலே சூக்கமாய் நொய்தாகி
மிக்க சோதியா யனைத்துமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந்
தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன் றலைமையா முபதேசம். 11

சீவந் முத்தனு நிலைமைபெற் றகங்காந் தீர்ந்தென தென்னு மன், மேவு முட்பந்தம் வீழ்ந்துபோய்ப் புந்தியில் விகற்பங்க ளனைத்தும்போய்ப், பாவ முற்றிய கசனின்ற நிலையினீ பற்றுத லறநிற்பாய், கேவ லத்திந்த வகங்காம் பொய்ம்மையாங் கெடுத்தல் பற் றுதல்வேண்டாம். 12

பொய்ய தாமுற் கொம்பினைப் பற்றவும் போக்கவு நினைப்பாரா
ரைய னேபர போதபூ ரணத்திலே யயலொன்று வருமாறென்

பொய்ய தாகிய வநேகபா வனையினைப் பொருந்தல்புன் பிறப்பாகு
மைய மின்றிய வேகபா வனையினி லழுந்துதல் பவந்தீர்தல். 13

6—10. கசன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1857.

---

## 6—11. மித்தையா புருடன் கதை.

இருமையோ டொருமை நீக்கி நின்றதி லெய்தி யின்ப
மருவுவாய் மித்தை யான புருடன்போல் வருந்த வேண்டாங்
குரிசிலே யெனலு மெந்தாய் கூறுபொய்ப் புருட னென்னே
னொருபய னின்றித் துன்ப முற்றவ னுலைந்த வாறென். 1

ஞாநமா மமுதி னாலே நலம்பெற நிறைந்த தேனு
மியானறி வுறவித் தன்மை யியம்பென விராமன் கேட்ப
மானமார் வசிட்டன் சொல்வான் வள்ளலே நகைக்கு மூல
மானவிக் கதையான் சொல்வ தறவியப் புளது மன்னே. 2

ஒருதலத் தேகாந் தத்தி லுற்றசூ நியத்தி லுண்டாய்
மருவுமத் தலத்தி னிற்போன் மாயையெந் திரம யத்தோர்
புருடனுண் டஞ்ஞா நத்தோன் புன்மையா யிளமைப் பண்பாய்
மிருதுவாம் புந்தி யுள்ளோன் கேவல மிகுந்த மூர்க்கன். 3

வானிலே சுருண்டு தோன்று மயிர்ச்சுருண் மருத்த லத்திற்
கானனீ ரென்ன வன்னுன் றோன்றியே கலந்த பாழிற்
சூநிய மலாதொன் றில்லை யாதொன்று தோன்றிற் றங்கே
மானவ வதுவு மன்னுன் மற்றவன் வளர்வு மாங்கே. 4

வேறு.

வேறு மாயே யெப்போதும் விளங்குந் தன்மை யவன்காணன்
கூறு வானோர் சங்கற்பங் கூடி னுன்விண் ணினைப்பேணி

பூறு படாமல் வைக்குதுமீ துயர்ந்த தேயென் றுளத்துன்னித்
தேறு முவகை யுடன்விண்ணைச் சேமிப் பானேர் வீடமைத்தான். 5

அந்த மனையில் விண்ணிணைவைத் தளிக்கின் றேமென் றதிலாசைப்
பந்த முறலு மவன்வீடு படர்கா லத்தா லழிவெய்தி
யிந்த மருத்தாற் றரங்கம்போ லிருது முடிவால் வருடம்போற்
சிந்தி யொழிய வவன்கண்டு சேண்போ யினதென் றலறுற்றான். 6

நில்லா வீட்டில் விண்ணேயோ நீயெங் ககன்று யொருகணத்தி
லல்லா யானு யெனவீட்டி னுகா சத்துக் கறப்புலம்பிப்
பொல்லா மநத்தான் மீண்டங்கோர் புதிய கிணறு சமைத்தொருவர்
கொல்லா திதனி லிருத்துமெனக் கூபா காச பாஞனுன். 7

கால மதனுற் கூபந்தான் கழித லோடுங் கதறுற்றான்
சால வருந்தி மீண்டங்கே தனைக்காப் பதற்கோர் குடம்பண்ணிக்
கோல முடைய தெனமகிழ்ந்து கும்பா காச பாஞனு
னீல முகிலே யக்குடமு நிகழ்கா லத்தா லுடைந்ததுவே. 8

நம்பி நம்பி யடைந்ததெலா நாச மெய்தத் திருவிலியக்
கும்ப விண்ணுக் கழுததற்பின் குண்ட மொன்றங் கேகெல்வித்
தம்ப மென்று தற்பானுய்ச் சார்ந்தா னந்தக் குழிதனையுந்
தும்பி கால மழித்துளதாற் றுன்னு மிருளைச் சுடர்போல. 9

குண்ட விண்ணுக் கழுததற்பின் குலவு நாற்சா ரகங்கட்டி
மண்டு மருள்கூர் தற்பானுய் வாழ்ந்தா னந்த மனைதனையு
மண்ட முழுதுங் கொல்கால மழிவு செய்ய வதற்கழுது
சண்ட பவந னிடைப்பட்ட சருகு போலத் தளர்ந்துலைந்தான். 10

தடனுர் நாற்சார்க் கழுததற்பின் றற்காப் பதற்கோர் குதிர்பண்ணி
யிடனுர் குதிர்புக் கவனிருப்ப விதுவுங் கால னிறப்பித்தா
னுடனே குதிர்விண் ணினுக்கழுதா னென்றே வீடு குதிர்குண்டங்
குடதாற் சார மென்பவற்முற் குறைவில் காலந் துயருற்றான். 11

விண்ணை வீட்டி லடைத்தவனுய் வீட்டில் விண்டான் ருனுகி
யுண்ணை வுற்ற பெருந்துயரா லுழைக்கும் பிழைக்கு மோரொருகா
லெண்ணி நிற்ப திதுபோவ திதுவென் றறியா னிவனென்று
புண்ணி யத்தின் வடிவானுேன் புகல வீரன் புகலுற்ருன். 12

பொய்யா மனிதன் கதையாலென் புகன்ருய் மாயா புருடனையே[ன
யையா விவன்விண் காத்தனனென் றறைந்த தேதென் றருள்கென்
மெய்யாம் வசிட்ட னுரைசெய்வான் மித்தியா புருட னென்றவிவன்
மையார் முகிலே சூரியமாம் வானி லெழுந்த வகங்கரமே. 13

இந்த வுலகெல் லாமிருக்கு மிந்த விண்ணே ததுநிறைவுற்
றந்த மின்றிச் சிருட்டிதனக் காதி தனிற்ரு னேநிற்கு
மைந்த வதன்பா லகங்கார மருத்திற் பரிசம் வருவதுபோன் [ன்.
முந்து தோன்றித் தனைக்காக்க முயன்ருன் வடிவாய் முளையாதோ

கூவங் குண்டங் குடநாற்சார் குதிரென் பனவாங் குரம்பைகளை
மேவ நானா விதமாக விதித்து மீண்டு மீண்டிழுந்து
தாவ முற்ரு னுடரேுறுந் தனைக்காத் தனனென் ருகாச
பாவ னைக்கே கிலேப்பட்டான் பாழே வருந்திப் பதைத்தனனுல். 15

விண்ணு னென்றே சேமித்து வீட்டா காச மாதிகளி
னண்ணு மெலிவுற் றிடுமித்தை யான்போல் வருந்தா தொழிகமலர்க்
கண்ணு விண்ணின் மிகப்பெரிதாய்க் களங்க மற்று நுண்ணியதா
யெண்ணு லடங்கா வழிவில்சிவ மியலாத் துமதத் துவந்தானே. 16

அவ்வாத் துமதத் துவங்காண லாமோ வெவர்க்கு மகப்படுமோ
விவ்வா றிருக்க வுடலிறந்தா லிதயா காச மாத்திரத்தை
வெவ்வா ளரசே ஞானிறந்தே னென்று மெலிவர் விவேகமிலோர்
தவ்வா விசும்பு கூடாதிகடான் றகர்ந்த போது தணந்திடுமோ. 17

கடம துடைந்தால் விண்பிரியா காய மழிந்தா லுயிரழியா
தடவி தாஞ்சிந் மாத்திரமாய்ச் சத்தாய் விண்ணி னுண்ணியதாய்த்
தொடரு மணுவுக் கணுவாகுஞ் சொருப மைந்தா நானென்று
படரு மநுபூ தியினளவே பயிலு நபம்போ னசித்திலதால். 18

யாது மென்று மெவ்விடத்து மிறத்தல் பிறத்த விலதாகு
மோதும் விவர்த்த ரூபத்தா லுலகாய்ப் பிரம மேவளரு
மாத லாலிவ் வுலகெல்லா மடியு முடியு நடுவுமறப்
பேத மறப்பா வாபாவம் பிறவாப் பொருளென் றிடர்தீர்வாய். 19

ஆபத் துக்கெல் லாநிலய மநித்த மவச மவிவேகம்
பாவத் துக்கு முதன்மடமை பலவித் தழிவைப் பற்றியது
தாபத் துக்கோ ரிடமான தகவி லகங்கா ரந்தன்னை
நீபற் றில்லா வறிவாலே நீக்கி லதுவே நிமலநிலை. 20

6—11. மித்தையா புருடன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1877.

---

## 6—12. விரதத் திரய கதை.

### ஸ்ரீ பிருங்கீச உபாக்யாநம்.

ஆதலாற் காண்பவற்றி னுண்மைநிலை யிப்படியே யறிவில் வையம்
பேதமாய் வேறென்றிற் பிறந்ததிலைக் கயிற்றிலாப் பிறப்ப தேபோ
லாதபனில் வேறிலையா தபமென்றே பாவித்தோர்க் காத பந்தான்
பேதமற வாதபனும் பேணுநிரு விகற்பமிது பேசுங் காலே. 1

பொன்னில்வேற் றுமையன்று கேயூர மெனநினையிற் பொன் னென் றேயா, மின்னதே நிருவிகற்ப மென்பார விரவியெயி லென்று நாடின், மின்னுகதி ரிரவிக்கு வேறுபோ லாங்கண்டாய்

விவித மாகத், தூன்னுநா னாத்துவம்விட் டறிவதிலா நல்லறிவிற் றுணிந்து நிற்பாய். 2

சங்கற்ப மெனும்புராண சத்தியினைத் தற்பாமந் தானே தன்னாற்
பொங்குற்ற வாயுவலை வைச்செய்யு மாறுபோற் புரிந்த போது
சங்கற்ப விரியுருவா யயல்போலாய்ச் சகவடிவாய்த் தனைத்தா னூடிப்
பொங்குற்ற மநமாகுஞ் சங்கற்ப மயமாமிப் புவியைக் காண்க. 3

தெரிபொருளொன் றுளதல்லப் பொய்யுமல சொற்பநத்தின் றிரள்போற் றோன்றுந், தெரிபவன்கேட் போன்சொல்வோன் பரிசிப்போன் மணங்கொள்வோன் செல்வோன் மீள்வோன், புரி வனவெல் லாந்தானே புதிதாகு மலமெல்லாம் பொருளென் றோர் வாய், புரிதருநின் றொழிலெல்லா மலமறுசிந் மாத்திரமாம் பொருளே கண்டாய். 4

பெரும்பெரிய வடிவான பிரமமே யாதலாற் பிறிதொன் றில்லை, வரும்பொருளெல் லாமறிவின் கநதையா யிருத்தலிலிவ் வைய மெல்லாங், கரும்புயலே யறிவேயாங் கற்பனைவே றில்லை யாற் காணப் பட்ட, வரும்பொருள்க டனிலறிவுண் டாதலினு லறிபொருளா மனைத்து மில்லை. 5

ஆதலினாற் பந்தம்வீ டெங்குளது வீடிதென வடுத்த பந்த, மீதெனவெண் ணுவதெல்லாம் வலிந்தகற்றி யபிமாந மிறையு மின்றித், தீதுதவிர் மௌநியாய்ப் பொறிவென்று மாநமதந் தீர்மே லோனு, யோதியநின் காரியஞ்செய் திராமனே யகங்கார மொழிந்து நிற்பாய். 6

மோகத்தில் வருமைய மெல்லாம்போ யறுதிநிலை முற்றும் பற்றி, மாகத்தன் மாபோகி மகத்தான தியாகியாய் வாழ்தி யென்ன, மேகத்தை நிகர்வள்ள லிம்மூன்று குணங்களெவை விளம்பா யென்ன, யோகத்தை யுணர்முநிவ னக்குணமூன் றையுந் தோன்ற வுரைக்க லுற்றான். 7

